OSHO

# அஷ்டாவக்ர மகாகீதை

## வந்தது மகிழ்ச்சி, செல்ல வருத்தமில்லை

Ashtavakra Mahagita - Vol.8



ஓஷோ

8

# அஷ்டாவக்ர மகாகீதை

## எட்டாம் பாகம்

## வந்தது மகிழ்ச்சி, செல்ல வருத்தமில்லை

ஓஷோ அஷ்டாவக்ர-ஸம்ஹிதாவின் 298 சூத்திரங்களிலிருந்து 227 முதல் 257 சூத்திரங்கள் சார்ந்து கேள்வி-பதில்களுடன் வழங்கிய பத்து சொற்பொழிவுகளின் தொகுப்பு

**ஓஷோ**

தமிழாக்கம்:
**டாக்டர் என். ஸ்ரீதரன்**




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

அஷ்டாவக்ர மகாகீதை (எட்டாம் பாகம்) - வந்தது மகிழ்ச்சி, செல்ல வருத்தமில்லை

முதற் பதிப்பு : 2019

**விலை** : ₹ 275/-

**Ashtaavakra Mahageethai - Part-8**

Originally published in Hindi under the title:
**ASHTAVAKRA MAHAGITA, VOL. 8**



Reprint: (Actual year of reprint)




| | | |
|---|---|---|
| Translated by | : | **Dr. N. Sreedharan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 2019 |
| Pages | : | 288 |
| **Price** | : | **₹ 275/-** |
| ISBN | : | 978-93-884500-7-2 |
| DTP | : | S. Asokkumar |
| Printed at | : | Sree Durga Printers, Chennai |




Published by :
**KAVITHA PUBLICATION**
# 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 42161657, 7402222787
E-mail : kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

# சொற்பொழிவு 71

## அருவமானவர், அயராதவர், சாட்சியானவர்

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

அகர்த்ருத்வம் அம்பாக்த்ருத்வம் ஸ்வஆத்மனோ மன்யதே யதா |
ததா ஹீணா பவந்ன்பெவ ஸமஸ்தாஸ்சித்தவ்ருத்தய: || 227

உச்ருங்க லாப்ய க்ருதிகா ஸ்திதுர் தீரஸ்ய ராஜதே |
ந து ஸஸ்ப்ருஹ சித்தஸ்ய சாந்திர் மூடஸ்ய க்ருத்ரிமா || 228

விலாஸந்தி மஹாபோகை விஷந்தி கிரி கஹ்வநான் |
நிரஸ்த கல்பனா தீரா அபத்தா முக்த புத்தய: || 229

ஸ்ரோத்ரியம் தேவதாம் தீர்த்த மங்கனாம் பூபதிம் ப்ரியம் |
த்ருஷ்ட்வா ஸம்பூஜ்ய தீரஸ்ய ந காபி ஹ்ருதி வாஸனா || 230

ப்ருத்யை: புத்ரை: கலத்ரைஸ்ச தௌஹித்ரேஸ்சாபி னேத்ரஜை: |
விஹஸ்ய திக்ருதோ யோகி ந யாதி விக்ருதிக் மனாக் || 231

ஸந்துஷ்டோ அபி ந ஸந்துஷ்ட: கின்னோ அபி ந ச கித்யதே |
தஸ்யாஸ்சர்யதஷாம் தாம் தாம் தாத்ருஷா வ ஜானந்தே || 232

கர்த்தவ்யதைவ ஸன்ஸாரோ ந தாம் பஸ்யந்தி ஸுரய: |
சூன்ய ஆகாரா நிராகாரா நிர்விகாரா நிராமயா: || 233

சீனக் கதை இது. ஒரு விறகுவெட்டி மரம் வெட்டிக் கொண்டிருந்தான். தனக்குப் பின்புறமாக ஒரு கலைமான் திடீரென வந்து நின்றதைப் பார்த்தான். அழகான, ஆரோக்கியமான மான். விறகுவெட்டி கோடாலியால் அதன் தலையில் அடித்தான். மான் இறந்து வீழ்ந்தது. விறகுவெட்டிக்கு பயமாகிவிட்டது. தான் கைது செய்யப்படுவோம் என்று நடுங்கினான். ஏனெனில் அந்தக் காடு அரண்மனைச் சொத்தாகும். அங்கே வேட்டையாடுவது தடைசெய்யப்பட்டிருந்தது. விறகுவெட்டி ஒரு பள்ளம் தோண்டி அதில் மானைப் புதைத்தான். மண்ணால் மூடிவிட்டு அவன் ஒரு மரத்தின்கீழ் ஓய்வெடுத்தபடி இருந்தான்.

அவன் யோசிக்கலானான் — 'இனி விறகுவெட்டிப் பிழைக்க வேண்டிய தேவையில்லை. இந்த மானை விற்று நிறையப் பணம் கிடைக்கும். சூரியன் அஸ்தமித்து இருட்டானதும் பள்ளத்திலிருந்து மானை வீட்டுக்கு எடுத்துச் செல்லலாம்.'

ஓய்வெடுத்தபடியே அவன் கண்ணயர்ந்துவிட்டான். கண் விழித்தபோது சூரியன் மறைந்து இருள் பரவியது. அவன் எவ்வளவோ தேடியும் அந்தப் பள்ளம் இருந்த இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒருவேளை இதுவரை நடந்ததெல்லாம் தான் கண்ட கனவோ என்று அவனுக்கு சந்தேகம் தோன்றியது. சற்று யோசித்ததும் அவனது சந்தேகம் வலுப்பட்டது. ஏனெனில் சுபாவப்படி மான் எந்த மனிதனையாவது பார்த்தால் மைல் கணக்காக ஓடி மறையுமே தவிர, அமைதியாக அவன் பின்னால் வந்து நிற்காது. 'ஆம், நான் கனவுதான் கண்டேன். இப்போது தேவையில்லாமல் மானைத் தேடி அலைகிறேன்' என்று நொந்துகொண்டான்.

அவன் தன்னையே கேலிசெய்தபடி சிரித்துக் கொண்டே வீடு திரும்பலானான். வழியில் அவனுக்குத் தெரிந்த உள்ளூர்க் காரன் தென்பட்டான். தன் எதிரே வந்த அவனை நிறுத்தி நடந் ததைச் சொன்னான். "நான் ஒரு கிறுக்கு. மானைத் தேடி பள்ளம் தென்படுகிறதா என்று அலைந்தேன்," என்று தெரிவித்தான்.

அந்த இரண்டாமவன் சிரித்தான். ஆனால் அவன் மனத்தில் அந்த விறகுவெட்டி உண்மையிலேயே மானைக் கொன்றிருப்பான் என்றே தோன்றியது. அவன் விறகுவெட்டி சொன்ன பகுதியில் தேடியபோது மானின் உடல் கிடைத்துவிட்டது. அவன் யார் கண்ணிலும் படாமல் அதை வீட்டுக்கு எடுத்துவந்தான்.

அவன் தன் மனைவியிடம் நடந்ததைச் சொன்னான். "விறகுவெட்டி இந்த மானைப் பற்றி சொன்னான். ஆனால் அதைக் கனவில் கண்டதாக நினைக்கிறான். அதை நான் எப்படி ஏற்பது? கனவு எப்பொழுதாவது நனவாக முடியுமா? ஆனால் இதோ நம் எதிரே மானின் உடல் கிடக்கிறதே. அவன் கனவு கண்டிருக்கமாட்டான். உண்மை சம்பவத்தை ஏனோ கனவு என்று நினைத்துவிட்டான்."

ஆனால் மனைவி சொன்னாள்: "உங்களுக்கு மூளை பேதலித்துவிட்டது. நீங்கள் காட்டுப் பகுதிக்குச் சென்றவர் நடுவில் தூங்கிவிடவில்லையா?"

"ஆமாம், சிறிது நேரம் என்னை அறியாமலேயே தூங்கிவிட்டேன்," என்று கணவன் ஒப்புக்கொண்டான்.

மனைவி விளக்கினாள், "நீங்கள்தான் சொப்பனம் கண்டவர். நீங்கள்தான் விறகுவெட்டியைச் சந்தித்தாகக் கனவு கண்டிருக் கிறீர்கள்."

கணவன் மறுத்து, "அவனைக் கனவில்தான் கண்டேன் என்றால் இந்த மான் உடல் எப்படி நம்மிடம் வந்திருக்க முடியும்," என்று கேட்டான்.

மனைவி சமாதானப்படுத்தினாள். "கனவுக்கும் நனவுக்கும் இடையே வித்தியாசம் கிடையாது என்று ஞானிகள் சொல்வதுண்டு. கனவுகள் பலிப்பதும் உண்டு. எதை உண்மை

என்று நம்புகிறோமோ அது பொய்யாகிப் போவதும் உண்டு. நீங்கள் விறகுவெட்டி பற்றி கனவுதான் கண்டீர்களென்றாலும் முக்கியமான விஷயமாகிய மான் உண்மையாகிவிட்டதை ஒப்புக்கொள்கிறேன்,'' என்றாள். கணவனும் தான் கனவுதான் கண்டதாகவும், அதை நம்பித் தேடியதால் தற்செயலாக மான் கிடைத்தது என்னும் தன்னைத் தேற்றிக் கொண்டான். விறகுவெட்டியை ஏமாற்றி விட்டோமோ என்று அவன் கொண்டிருந்த குற்ற உணர்வு நீங்கியது.

இன்னொரு புறம் விறகுவெட்டி வீடு திரும்பித் தூங்கிய போது ஒரு கனவு கண்டான். தான் சந்தித்தவன் பள்ளத்தைக் கண்டுபிடித்து மானை வீட்டுக்கு எடுத்துப் போனதாகக் கனவில் தெரிந்தது. உடனே அவன் விழித்து நள்ளிரவு நேரமாயினும் தன்னைச் சந்தித்தவன் வீட்டுக்குப்போய்க் கதவைத் தட்டினான். கதவு திறக்கப்பட்டதுமே விறகுவெட்டி வீட்டு முற்றத்தில் மானின் சடலம் கிடப்பதைப் பார்த்தான். அவன் கோபமாக, “நீ என்னை ஏமாற்றிவிட்டாய். நான் என் கனவில் நீ பள்ளத்தைத் திறப்பதையும், மான் உன் வீட்டில் கிடப்பதையும் கண்டுகொண்டேன். நீ ஒரு மோசடிப் பேர்வழி,'' என்று கத்தினான்.

அதற்கு இரண்டாமவன், “நான் உன்னை நேரில் பார்க்க வில்லை. நீ என் கனவில்தான் வந்தாய். அதில் நீ சொன்னதை நம்பி என் சொந்த முயற்சியால் இந்த மானை அடைந்திருக் கிறேன். நீயோ என் கனவில்தான் வந்து கூறியதால் அதன் மீது உனக்கு உரிமையில்லை. கனவில் காண்பவை ஒருவனுக்கு உரிமையாகிவிடாது. கனவை நனவாக்குபவன்தான் உரிமை யாளன்,'' என்று வாதிட்டான்.

விறகுவெட்டி நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தான். அக்காலத்தில் வழக்குத் தொடர்ந்ததுமே உடனே விசாரிக்கப்பட்டுத் தீர்ப்பு வழங்கப்பட்டுவிடும். ஆனால், பாவம், நீதிபதி தலைமுடியைப் பிய்த்துக்கொண்டார். இப்படி ஒரு வழக்கு அவர் முன் வந்ததுமில்லை, அவர் கேள்விப்பட்டதுமில்லை. பிறகு அவர் சமாளித்துக் கொண்டு சொன்னார். “இது மிகவும் சிக்கலான விஷயம். விறகுவெட்டி தான் செய்தது எல்லாம் கனவா என்று சந்தேகப்படுகிறான். இரண்டாமவனின் மனைவியோ தன் கணவன்

தான் கனவு கண்டவன் என்றும், தன் கனவில் விறகுவெட்டி சொன்னதை வைத்து, கனவு கலைந்ததும் அதை முயன்று நனவாக்கினான் என்கிறாள். கனவுகள் சம்பந்தமாக வழக்குகளை அனுமதித்துத் தீர்ப்புக் கூறுவது என்பது சட்ட இயலின்கீழ் வராது. எது எப்படியோ மானின் உடல் உண்மை. வழக்காளிகள் இரு வரும் அதைப் பாதிப் பாதியாக வெட்டி எடுத்துக் கொள்ளுங்கள்.''

தீர்ப்புக் கோப்பு உள்ளூர் அரசனின் ஆமோதிப்பிற்காகக் கையெழுத்துப் பெற அனுப்பப்பட்டது. வழக்கு விவரம் படித்த அரசன் சிரித்தான். அவன் அமைச்சரைக் கூப்பிட்டுக் கோப்பைக் காண்பித்தபின், ''நல்ல வேடிக்கை! அந்த நீதிபதிக்கு சித்தம் கலங்கிவிட்டதுபோல் தெரிகிறது. இந்த முழு வழக்கும் அவரது கனவில்தான் நடைபெற்றிருக்கும். நீங்கள் இதைச் சரி செய்யுங்கள்,'' என்று தட்டிக் கழித்துவிட்டான்.

''அரசே, நாம் நிஜமென நினைப்பதை ஞானிகள் கனவு என்கிறார்கள். எதெல்லாம் நிஜம், எதெல்லாம் கனவு என்று இதுவரை முடிவு செய்ய முடிந்ததில்லை. அவ்வாறு பிரித்தறியக் கூடிய லாவோத்ஸு போன்ற ஞானியர் இக்காலத்தில் இல்லை. அது நமது துரதிர்ஷ்டம். அவ்வாறு பிரித்தறிதல் நமது சக்திக்கு அப்பாற்பட்டது. நீதிபதியின் தீர்ப்பை நீங்கள் எதிர்க்காமல் நீங்கள் ஒப்புதல் அளியுங்கள். கனவு எது, நிஜம் எது என்று பிரிக்கும் வேலை நமக்கு வேண்டாம். அதை ஞானிகள் பார்த்துக் கொள்ளட்டும்,'' என்று அமைச்சர் கருத்துக் கூறினார்.

ஞானிகளால்தாம் எது கனவு-எது நிஜம் என வரையறுக்க முடியும் என்று நானும்தான் சொல்கிறேன். ஆனால் நம்மால் ஏன் முடிவு செய்ய இயலவில்லை? காரணம் உள்ளது. கண்ணால் பார்க்கின்றவற்றை வைத்தே எது உண்மை-எது கனவு என்று பிரிக்க வேண்டும் என நாம் நினைக்கிறோம்.

பகலில் பார்த்ததை நிஜம் என்கிறோம். இரவில் பார்த்ததைப் பொய் என்கிறோம். விழித்தபின் பார்த்ததை உண்மை என்றும் உறக்கத்தில் பார்ப்பதைப் பொய் என்றும் பிரிக்கிறோம். எல்லோருடனும் சேர்ந்து பார்த்ததை மெய் என்றும், நாம் மட்டும் தனியாகப் பார்த்ததைப் பொய் என்றும் கருதுகிறோம். நாம்

பார்க்கின்றவைகளை மட்டும்தான் அப்படிப் பிரிக்கிறோம் என்னும் விஷயத்தை நாம் கவனிப்பதில்லை.

ஞானி சொல்கிறார்— பார்த்தவை எல்லாம் பொய். விழித்துப் பார்த்தாலோ, தூக்கத்தில் பார்த்தாலோ, தனியாகப் பார்த்தாலோ, கூட்டத்துடன் பார்த்தாலோ, அப்போது கண் மூடியிருந்தாலோ, திறந்திருந்தாலோ, பார்த்தவை அனைத்தும் பொய். ஆனால் பார்ப்பவன் எவனோ அவனே மெய்!

கண்டவன் உண்மை. கண்டது பொய்!

இரண்டு காட்சிகளை வைத்துக்கொண்டு எது உண்மை-எது பொய் என்று முடிவு செய்யலாகாது. பார்ப்பவன்-பார்க்கப்படுவது என்னும் இரண்டையும் கொண்டுதான் முடிவெடுக்க வேண்டும். பார்ப்பவனைப் பற்றி நாம் எதுவும் அறிந்திருக்கவில்லை.

அஷ்டாவக்ரரின் உபதேசம் அவனைத் தேடுவதில்தான் அடங்கியுள்ளது.

ஆனால் நீ கடவுளைக்கூட ஒரு காட்சிபோல் காண முடியும் என்று தேடுகிறாய். 'உலகைப் பார்த்துவிட்டேன். இனி கடவுளைத்தான் தரிசிக்க வேண்டும்' என்கிறாய். தரிசனம் என்பதைக் காட்சி என்றே நினைக்கிறாய். பணத்தை, அன்பை, உலகைப் பார்த்தாகிவிட்டது. உலகைப் படைத்தவனைத்தான் இனி பார்க்க வேண்டியுள்ளது. 'பார்த்தல்' என்னும் சொல்லையே கூறுகிறாய். 'பார்த்தல்' என்பது பொய்யில் முடியும். நீ பார்க்கும் ஒவ்வொன்றுமே பொய்தான்.

காட்சியில் கவனம் பதிந்தால் அங்கே பொய் பரவி நிற்கிறது. எல்லாவற்றையும் காண்பவனைத்தான் இனிக் காண வேண்டும், அதாவது, தன்னையே காண வேண்டும் என்ற நீ முடிவெடுத்ததும் உன் சொந்த வீட்டிற்குத் திரும்பியவனைப்போல் உணர்வாய். அப்போது உனக்குள் புரட்சி நிகழும். உன் ஆளுமை உருமாற்றம் பெறும். மதம் (சமயம்) என்பது பார்ப்பவனை நோக்கி இட்டுச்செல்லும் பாதையாக அமைய வேண்டும்.

சீனக் கதையில் வரும் அமைச்சர் அரசரிடம் லாவோத்ஸூ போன்ற ஞானிகள் தோன்றுவது அபூர்வம் என்றார். அவர்

இந்தியராக இருந்தால் அஷ்டாவக்ரர் போன்ற ஞானிகள் எங்கோ-எப்போதோதான் தோன்றுகின்றனர் என்று கூறியிருப்பார். அத்தகையோரே. எது சத்தியம்-எது பொய் என்று பிரித்தறியக் கூடியவர்களாக இருப்பர்.

'மனிதன் தன் ஆத்மா எதையும் செய்வதில்லை. எதன் பலனையும் அது அனுபவிப்பதில்லை என்பதைப் புரிந்துகொண்டு விட்டால், பிறகு அவனது மனம் சார்ந்த இயல்புகள் எல்லாம் தாமாக நசித்துவிடும்.' **(சுலோகம் 227)**

காட்சிகளில் நாம் ஏன் சிக்குகிறோம்? காட்சியைக் காண்பது நமது கர்த்தா உணர்வுக்கும், அனுபவிப்பவன் என்னும் உணர்வுக்கும் திருப்தி உண்டாக்குகிறது. நாம் ஒரே சமயத்தில் செய்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்க முடியாது. சாட்சி மனப்பான்மை வந்து கர்த்தா மனப்பான்மை வந்துவிட்டால் பார்ப்பதும் சாத்தியமாகும்.

நாம் ஒரு காட்சியை ஏன் காண விழைகிறோம்? காட்சியைக் காண்பதில் ஏன் திளைக்கிறோம்? ஏனெனில் பார்ப்பதில்தான் (இன்ப) அனுபவம் கிடைப்பதாக நாம் நம்புகிறோம்.

உதாரணமாக, நீ திரைப்படம் பார்க்கச் செல்கிறாய். அரங்கில் தொங்கும் திரையில் ஒன்றுமில்லை, அது வெற்றுத் துணியென நன்கு அறிந்துள்ளாய். இந்த ஒன்றுமில்லாததற்காக நீ மூன்று மணி நேரம் உட்கார்ந்திருக்கிறாய். திரையில் வெறுமைதான் உள்ளதென நன்கு அறிந்துள்ளாய். ஆனாலும் அதை அடிக்கடி மறக்கிறாய், சிரிக்கிறாய், அழுகிறாய். கைக்குட்டை கண்ணீரால் ஈரமாகிறது. மகிழ்கிறாய், வருந்துகிறாய். மூன்று மணி நேரம் உன்னை மறந்துவிடுகிறாய்.

தொலைக்காட்சி பரவியுள்ள இடங்களில் எல்லாம் மக்கள் மணிக்கணக்காக அதன் முன் உட்கார்ந்திருக்கிறார்கள். ஒரு புள்ளி விவரப்படி அமெரிக்காவில் சிறுவர்களிலிருந்து முதியவர்கள் வரை ஒவ்வொருவரும் தினமும் 6 மணி நேரமாவது தொலைக் காட்சி பார்க்கிறார்கள்.*

---

* பிப்ரவரி 2018 நிலவரப்படி சராசரி அமெரிக்கன் தினமும் 10 மணி நேரம் தொலைக்காட்சி பார்க்கிறான். ஆதாரம் தி ஹிந்து 28.2.18

ஞானி உலகைப் பொய் என்கிறார். நீ பொய்யிலும் உண்மையைக் காண்கிறாய். திரையில் உண்மையில் எதுவும் கிடையாது. ஆனால் அதில் உனக்கு உருவங்கள் தெரிகின்றன. அதைப் பார்த்து நீ இன்பம்-துன்பம் என்று உணர்ச்சிவசப் படுகிறாய். உன்னை முழுமையாக மறந்துபோகிறாய். சிறிது நேரம் உனக்கு சுயநினைவு இருப்பதில்லை.

திரைப்படமும் மதுவின் போதை போன்றது. அதில் லயிக்கும்போது நீ கர்த்தா (செய்பவன்), போக்தா (அனுபவிப் பவன்), சாட்சி என்னும் மூன்று நிலைகளும் அதில் கரைந்து போகின்றன. உன்னை மூன்று மணி நேரம் ஒருவித மயக்கத்தில் ஆழ்த்தினால் அந்தத் திரைப்படத்தை நல்ல படமெனப் பாராட்டுகிறாய். திரைப்படம் பார்க்கையில் இடையிடையே உனக்கு உன் ஞாபகம் வந்தால், அது உனக்கு நல்ல படமாகத் தோன்றுவதில்லை.

ஒரு நாவலைப் படிக்கும்போது உன்னை நீ மறந்துபோனால் அதை அற்புதமான கதை என்று மெச்சுகிறாய். மதுவின் போதைபோல் நாவலும் உன்னை மறக்கடிக்க வேண்டுமென எதிர்பார்க்கிறாய். அதைப் படிக்கும்போது உனக்குத் தன்நினைவு இருந்தால், கதையில் சாரமில்லை என்பாய். கதைச் சுவையில் மூழ்கடிக்கவில்லை என்பாய்.

அறியத் தகுந்த, ஏற்கத் தகுந்த, ஆவதற்குத் தகுந்த என்பவை ஒன்றேதான். அதுவே கர்த்தா-போக்தா (செய்பவன்-பலன் பெறுபவன்) நிலையாகும். அவை ஒரே காசின் இரு பக்கங்கள். செய்பவன் இல்லாவிடில் அனுபவிப்பவனும் இருக்க முடியாது. ஏனெனில் செயல் புரிபவனும், அதன் பலனை அனுபவிப்பவனும் ஒருவரையொருவர் தாங்கி நிற்கிறார்கள்.

செய்தல்-அனுபவித்தல் என்னும் இரண்டினின்றும் விடுபட்டவன் தனது மனத்தின் போக்கைக் கட்டுப்படுத்த விசேஷ முயற்சி செய்ய வேண்டி இருக்காது அதற்கான உபாயம் தேட வேண்டிய தேவை எழாது. 'நான் சாட்சி (பார்வையாளன்) மட்டும் என்று அறிந்து, பார்த்து, புரிந்துகொள்கின்றவனின் மனத்தின் உணர்ச்சிக் கொந்தளிப்பு தானாகவே சாந்தமாகிவிடும்.

சாட்சி உணர்வு உள்ள நிலையில் மனம் என்பது இல்லாமல் போய்விடும். மனத்தின் அலைகள் ஓய்ந்துவிடும். மனத்தின் அலைகள் அடங்குவது என்பது இறைவனின் அலைகள் இனி எழும் என்பதன் அறிகுறியாகும். மனம் சென்றுவிட்டால் கடவுள் வந்துவிடுவார். நீ என்பவன் வெளியேறினால் கடவுள் உனக்குள் காலடி எடுத்துவைப்பார். மனமென்னும் சிம்மாசனத்திலிருந்து நீ கீழே இறங்கு. கடவுள் எழுந்தருளி அதில் வீற்றிருப்பார்.

'செய்பவன்-அனுபவிப்பவன் நான்' என்னும் திமிருடன் நீ உள்ளாய். நீ உலகப் பற்றிலிருந்து எப்படியோ விடுபட்டாலும் நீ 'செய்தல்-அனுபவித்தல்' என்னும் மனப்பான்மையிலிருந்து விடுபடுவதில்லை. துறவியாகி விட்டேன் என்பவனும் தவம், தியானம், ஜெபம், பூஜை, பிரார்த்தனை, யாகம், ஹோமம் **செய்வேன்** என்கிறான். இதெல்லாம் எதற்காக என்று கேட்டால் சுவர்க்கத்திற்குச் சென்று உயர்தரமான இன்பங்களை **அனுபவிப்பேன்** என்கிறான்.

நீ எதையும் செய்பவன் என்னும் மனப்பான்மையும், அனுபவிப்பவன் என்னும் மனப்பான்மையும் உன்னிடம் இருக்க விடக்கூடாது என்பதே அனைத்து மதங்களின் சாரமாகும். நீ இருத்தல் என்னும் நிலையில் மட்டும் இருப்பதே உகந்தது. சும்மா இருப்பதில் ஒரு சுகம். அதில் செய்பவன்-அனுபவிப்பவன் என்னும் கிளர்ச்சி எழாது. இருத்தல் மட்டுமே இருந்தால் அது அலைகளற்ற சாந்த நிலை.

இதைப் புரிந்துகொள். இரவில் கனவு காண்கிறாய். அது பொய்யென்று நீ அறிவது காலையில் விழித்த பிறகுதான். இரவில் கனவு காண்கையிலேயே அது பொய்யென்பதை நீ உணர்ந்து விட்டால் நீ ஒரு ஞானிதான். உன்னை புத்தர் எனலாம். கனவில் உன்னை மறந்துவிடுகிறாய். இதுவே உனது நீண்டகாலப் பழக்கம். காட்சிகளில் உன்னை மறந்துவிடுகிறாய். திரைப்படம் அல்லது தொலைக்காட்சி பார்க்கையில், கதைப் புத்தகம் படிக்கையில் உன்னை மறந்துவிடுகிறாய். கனவு காண்கையில் உன் சொந்தக் கற்பனை வலையை விரித்து அதில் சிக்கிக்கொள்கிறாய். எல்லாம் சரியாக உள்ளதாக, எல்லாம் உண்மையென்று தோன்றுகிறது.

முரண்படும் விஷயங்களும் நடைபெற முடியாதவையும் கனவில் சாத்தியமாகின்றன.

கனவில் நீ செல்லும் பாதையில் ஒரு கல் தெரிகிறது. நீ அதை நெருங்கியதும் அது குதித்து முயலாக மாறுகிறது. இதை நீ பொருட்படுத்துவதில்லை. குதிரை வேகமாக உன்னை நோக்கி வருகிறது. அருகில் வந்ததும் அது உன் மனைவியாக மாறுகிறது. இது எப்படி சாத்தியம் என்று நீ யோசிப்பதில்லை.

நீ காட்சிகளில் லயித்துள்ளபோது அவை பற்றி யோசிப்பவனாகவும் எப்படி ஆக முடியும்? விழித்துப் பார்ப்பவன், முடிவெடுப்பவன் யாருமில்லையே நீயே அப்போது இல்லையே. பூஜ்யமாகி விடுகிறாயே. இருத்தல் என்னும் நிலைக்கு நீ வந்தால்தான் கனவு கலையும், சிதறும்.

ஞானி குர்ஜியேஃப் தன் சீடர்களுக்கு முதல் பாடமாக, கட்டமாக மூன்று மாதங்களுக்கு அளித்த பயிற்சி கனவிலிருந்து எப்படி விழிப்பது என்பது குறித்துத்தான். இது சம்பந்தமாக அவர் நிறைய விதிகளை உருவாக்கினார். அந்த முதல் மூன்று மாதம் சீடர்கள் எங்கும் செல்லலாம், உட்காரலாம், கடை நடத்தலாம், கடைத்தெருவில் சுற்றலாம். தனது அலுவலகம் செல்லலாம். ஆனால் ஒரு நிபந்தனை அவர்கள் பார்ப்பவை எல்லாம் பொய் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். அந்தக் கண்ணோட்டத்தை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இது கடினமான பயிற்சிதான். நீ சாலையில் செல்லும்போது காண்கின்ற மனிதர்கள் பொய். ஓடுகின்ற கார்கள் பொய் என்னும் முடிவிற்கு வர் முயல்வது சங்கடமானதுதான். இத்தனை காலமாக உண்மையென்று நினைத்தவற்றைப் பொய்யென மாற்றி நினைப்பதை மனம் எளிதில் ஏற்காது. ஆனால் குர்ஜியேஃப் தொடர்ந்து முயற்சி செய்யச் சொல்கிறார். ஒருமாதம் முயன்றபின் மனம் நம் வசப்படத் தொடங்குவதை உணரலாம் என்கிறார்.

மூன்று மாதப் பயிற்சிக்குப் பின் திடீரென ஒருநாள் இரவு கனவின் நடுவில் அது பொய்யென்பது உன் நினைவில் எழும். அப்போதே கனவு கலைந்துபோகும். பயிற்சி முடிவில் சாதகர் தான் காண்பதெல்லாம் பொய் என்னும் முடிவிற்கு வருவார்.

எந்த இரவில் கனவில் நீ அந்தக் கனவு பொய்; காட்சி பொய்; காண்பவன் மட்டுமே நிஜம் என்னும் முடிவிற்கு வருகிறோயோ அதற்கு மறுநாள் நீ விழித்தபின் எந்தப் பயிற்சியும் இனித் தேவையில்லை என அறிந்துகொள்வாய். நீ எதைப் பார்க்கிறாயோ அது பொய்யெனத் தெரியும்.

இங்கே பொய் என்பதற்கு இல்லாத ஒன்று என்று அர்த்தமில்லை. காண்பவை தோற்றங்களே என்றும், அவை உண்மையில் அப்படியில்லை என்றும் பொருள் கொள்ள வேண்டும். அவை நிரந்தரமானவை அல்ல என்றும் உணர வேண்டும். அவை நீர்க்குமிழிபோல் விரைவில் மறைபவை. நீர்க்குமிழி பொய்யன்று. அது தங்காது என்பதால்தான் பொய். அலை பொய்யன்று அது நீடிக்காது என்பதால் பொய்.

கிழக்கு நாடுகளில் எது நிரந்தரமாக உள்ளதோ அதுவே சத்தியம் என்று வரையறுத்துக் கூறப்படுகிறது. எப்போதும் இருப்பதே சத்தியம். நிரந்தரத்தின் சாரமே சத்தியம். நிரந்தரமும் சத்தியமும் ஒரே பொருளுடையவை. இன்று இருப்பது நாளை இல்லாமல் போகுமானால் அது அசத்தியம்.

அசத்தியம் என்றால் இல்லவே இல்லை என்று அர்த்த மில்லை. நீர்க்குமிழி, கனவு, அலை முதலியவை உண்டுதான். ஆனால் அவை அற்பாயுள் கொண்டவை. இந்தத்தற்காலிக சூழ்நிலையை நம்பினால் பிறகு கஷ்டப்படுவோம்.

நீ காதல் வசப்பட்டதாக வைத்துக்கொள்வோம். நீ ஓர் ஆண் அல்லது பெண்ணை விரும்புகிறாய். அந்தக் காதல் நிரந்தரமாக இருக்கட்டும் என்றும் விரும்புகிறாய். நீ காதலிப்பவரும் சாஸ்வதமாக இருக்க ஆசைப்படுகிறாய். இது நடவாத காரியம். எப்பொருளும், எவரும் நிரந்தரமில்லை. உன் விருப்பம் உன் வாழ்க்கையை விஷமயமாக்கிவிடுகிறது. உலகில் எதுவும் நிலைத்து நிற்பதில்லை.

உன் விருப்பம் நிரந்தரத்தை நோக்கி உள்ளது. காதலோ விரைவில் மறையக்கூடியது. ஏதாவது தடை ஏற்படும். காதல் உணர்வு மறையும் அல்லது காதலிக்கப்பட்டவர் இறப்பார். இதில் ஒன்று நடைபெறும்.

நிரந்தரமாக உன்னை நோக்கியே தென்றல் வீசாது. வசந்த காலம்போல் தினமும் பூக்கள் மலர்வதில்லை. இலையுதிர் காலம் வரும். மரங்கள் மொட்டையாக நிற்கும். பனிப்பொழிவால் மலர்கள் இருப்பதே தெரியாமல் போய்விடும். உன் விருப்பங்கள் நிலைத்து நிற்கவில்லையே என்று நீ வருந்துவாய். ஏமாற்றப்பட்டதாக நினைப்பாய்.

யாரும் உன்னை ஏமாற்றவில்லை. காதல் வறண்டுபோனால் காதலியோ, காதலனோ ஏமாற்றியதாக நினைக்காதே. உண்மையில் ஏமாற்றியது காதல் உணர்வு. ஏனெனில் அது தற்காலிகமான தன்மை கொண்டது. அது நீர்க்குமிழி போன்றது. இதன் மீது சூரிய ஒளிபடும்போது நீர்க்குமிழி வானவில்போல் ஜொலிக்கியது. காதலும் கவர்ச்சிகரமாகத் தெரிகிறது. காதலும் சரி, நீர்க்குமிழியும் சரி, இரண்டும் நீடிப்பதில்லை.

இரவில் நீ கனவு காண்கிறாய். காலை ஆனதும் கனவு பொய்யென அறிகிறாய். பகல் முழுவதும் கண்களை விரித்து, சுற்றிலும் நடைபெறும் ஏராளமான நிகழ்ச்சிகளைக் காண்கிறாய். இரவு தூங்கச் செல்லும்போது பகலில் கண்டவை எல்லாம் மறந்துவிடுகிறது; எல்லாம் பொய்யாகிறது.

பகலில் நீ குடும்பத்தினர்க்குக் கணவன், மனைவி, தாய், மகன், தந்தை என்னும் வெவ்வேறு முறையில் உறவாகி அதன்படி நடக்கிறாய். இரவு தூங்கியதும் எல்லா உறவு வகைகளும் மறைந்து விடுகின்றன. பகலில் நீ செல்வந்தன் அல்லது ஏழை. இரவில் நீ இரண்டுமே இல்லை. பகலில் நீ என்னவாக இருந்தாலும் தூக்கத்தில் அவற்றை இழக்கிறாய். இளைஞன்-கிழவன், அழகன்-குரூபி, வெற்றி-தோல்வி என்பவை நீ படுத்ததும் தனித்தன்மையை இழக்கின்றன. இரவானது பகலை வழித்து நீக்கிவிடுகிறது.

காலை ஆனதும் இரவு ஒரு கனவுபோல் தோன்றுகிறது. இரவு வந்ததும் பகல் கனவுபோலாகி விடுகிறது. இரவு-பகல் இரண்டுமே மாறி-மாறி அழிகின்றன. ஆனால் இரவில் கனவு கண்டவன் விழிப்பில் பகல் சூழ்நிலையைக் காண்கிறான். அப்படிப் பார்ப்பவன் மட்டுமே நீடிக்கிறான். அவன் கனவிலும் பகலிலும் பார்த்தவை மட்டுமே மெய்யாகின்றன.

சில சமயம் கனவு விழுவதில்லை. ஒருவன் அப்போது ஆழ்ந்து தூங்கிவிடுகிறான். அப்படியும் பார்ப்பவன் ஒருவன் நீடிக்கிறான். இரவில் கனவு வரவில்லை என்ற அனுபவத்தைப் பெற்றிருக்கிறான். நீ சிலசமயம் காலையில் எழுந்ததும், "அடித்துப் போட்டதுபோல் தூங்கிவிட்டேன். கனவே காணவில்லை. ஆனந்த மாய் இருந்தது. புத்துணர்ச்சியுடன் எழுந்திருக்க முடிந்தது," என்று பெருமையாக அறிவித்தது உண்டல்லவா?

எனவே எவனோ இரவும் கவனித்தபடி இருந்தான். இல்லாவிடில் காலையில் இரவுத் தூக்கம் பற்றி சொல்பவன் யார் உளன்? ஆகவே இரவிலும் நீ உன் மனத்தின் ஆழமான பகுதி ஒன்றில் விழித்தபடி இருந்திருக்கிறாய். உன் மனத்தின் சிறிய பகுதி ஒன்று எப்போதும் விழித்த நிலையில் இருக்கிறது.

ஒன்று நிச்சயம். கனவுலகோ, நனவுலகோ எல்லாம் மாறியபடி உள்ளது. காண்பவன் மாறுவதில்லை. எனவே காண்பவன் நிரந்தரம். குழந்தைப் பருவத்திலிருந்து முதுமையின் இறுதிவரை வாழ்க்கையைக் காண்பவன் மாறுவதில்லை. உடல் மாறினாலும் அவன் அப்படியே நீடிக்கிறான். தோல்வியிலும், வெற்றியிலும், செழிப்பிலும், வறுமையிலும், அரண்மனை வாசத்திலும், குடிசையில் வசிக்க நேர்ந்தாலும் எல்லாவற்றையும் ஒருவனே காண்கிறான். காட்டில் அலைந்தாலும், மாளிகையில் வாழ்ந்தாலும் பள்ளத்தில் விழுந்தாலும், சிகரத்தில் ஏறினாலும், அரியணையில் அமர்ந்தாலும், பணத்துக்குத் தவித்தாலும், இப்படி எல்லா நிலையிலும் பார்ப்பவன் மாறுவதில்லை, விலகுவதில்லை.

உன்னில் இருந்து பார்ப்பவனை நீ அறிமுகப்படுத்திக் கொண்டால், நீ இறக்கும்போதும் அவன் உன்னுடன் இருப்பான். ஆம். அவன் மட்டுமே இருப்பான். மற்ற எல்லாம் நீங்கிவிடும். சாவு என்பது ஒரு சம்பவம் மட்டுமே என்று புரிந்துவிடும். பிறகு நீ வாழ்வைப் பார்த்த விதமாகவே சாவையும் பார்ப்பாய். பகலைப் பார்த்த நீ இரவையும் பார்த்தாய் அல்லவா? அதுபோன்றே சாவு என்னும் நீண்ட அமாவாசை இரவையும் காண்பாய். நீ காண்பவனுடன் நட்புக்கொள்; இணைப்பு உண்டாக்கிக்கொள்.

தற்போது நீ பகலிலும் தெளிவின்றி மயக்கம் போன்ற நிலையில் உள்ளாய். எனவே இரவிலும் அப்படியே நீடிப்பாய். வாழ்க்கையையே நீ தூக்க மயக்கத்தில் கழிக்கிறாய். சாவு நெடிய தூக்கமாயிற்றே. அதில் எப்படி விழிப்பாய்? விழிப்புடன் சாவை உணர்ந்து கொண்டால் புதுப்பிறவி எடுப்பாய். அது விழிப்புடைய தாக விளங்கும். அப்பிறவி கடைசியானதாக அமையும். அதன் முடிவில் ஏற்படும் மரணமே மோட்ச நிலையாகும்.

செய்பவனும் அனுபவிப்பவனும் காட்சிகளில் சிக்கிக் கொண்டுள்ளனர். காண்பவன் உள்நோக்கிப் பயணித்தால் கிடைக்கிறான்.

'ஆன்மவீரன் சுபாவம் காரணமாக எப்பொழுதாவது கட்டுப்பாட்டை மீறினாலும் அவனது பொலிவு குறைவதில்லை. ஆனால், மனதில் அலைகள் நிறைந்த மூடன் செயற்கையாக அமைதி வீரன்போல் தோன்றினாலும் பொலிவு பெறுவதில்லை.' **(சுலோகம் 229)**

அஷ்டாவக்ரர் சொல்கிறார்—ஞானம் பெற்ற, விழிப்பும் பெற்ற, சாட்சி நிலையிலுள்ள ஆன்மவீரன் எப்போதாவது சஞ்சலமடைந்தாலும் அதிலும் ஓர் அழகு தெரியும். அவன் சினமடைந்தாலும் அக்கோபத்திலும் கம்பீரம், கௌரவம், தெய்வத்தன்மை பிரதிபலிக்கும். அவன் சற்று சஞ்சலப்பட்டாலும் அடிமனத்தில் சாந்தம் நிலவும்.

ஆனால் எவனது வாழ்க்கையில் பொறாமை, பகைமை, போட்டி உணர்வு உள்ளதோ அவன் வெளியே அமைதியானவன் போல் நடித்தாலும் மனத்தின் ஆழத்தில் கொந்தளிப்பு மிகுந் திருக்கும். பார்வையாளனாக மட்டுமிருப்பவன் உன்னிடமிருந்து எதையும் பிடுங்க விரும்பமாட்டான். அனுபவிக்கும் ஆவல் கொண்டவனோ பிடுங்குவதிலேயே குறியாக இருப்பான். எனக்கொரு மாளிகை வேண்டுமானால் இன்னொருவனின் வீடு இடிக்கப்படும். எனக்கு நிறையப் பணம் வேண்டுமானால் இன்னொருவன் ஜேப்படி செய்யப்படுவான். எனக்கு நிறையப் புகழ் வேண்டுமானால் இன்னொருவன் மிகவும் களங்கப்படுத்தப் படுவான். எனக்கு பதவி வேண்டுமானால் இன்னொருவன் கீழே தள்ளப்படுவான். அனுபவிப்பவனின் நடத்தை இப்படியிருக்கும்.

நான் கர்த்தா (செய்பவன்) மனப்பான்மை கொண்டால் கலகங்களை, போராட்டங்களைச் சந்திக்க நேரிடும். ஏனெனில் மற்றவர்களும் தங்களைக் கர்த்தாவாக நினைத்துக் களத்தில் இறங்குகிறார்கள். கர்த்தாவின் செயல்கள் வெளியுலகில் நடைபெறுகின்றன. எல்லோரும் வெற்றி பெறவே விரும்பு கின்றனர். பரஸ்பர மோதலால் வன்முறை வெடிக்கிறது. உலக வரலாறே கர்த்தா மனப்பான்மை கொண்ட வெறியர்களின் போராட்டக் கதைதான். தைமூர்லிங், செங்கிஸ்கான், அலெக்சாந்தர், நெப்போலியன் ஆகியோர் இத்தகைய வெறியர்கள்தாம்.

ஆனால் நான் பார்வையாளனாக முயன்றால் யாருடனும் எனக்கு மோதல் இருக்காது என்னுடன் எவரும் போட்டியிட மாட்டார். எவருடனும் விரோதம் இருக்காது. மக்களைப் பார்த்து, "எல்லோரும் நண்பர்களாக இருங்கள். எல்லோரும் உறவினர் களே. எல்லோருக்கும் ஒரே தந்தை. அவரே கடவுள். நாம் அனைவரும் அவருடைய குழந்தைகள்," என்று எவ்வளவோ எடுத்துச் சொன்னாலும் பலனில்லை.

பள்ளிக்கூடத்தில் ஒரு வகுப்பில் முப்பது மாணவர்கள் என்றால் அவர்களிடம் "நீங்கள் எல்லோரும் நண்பர்கள் என்று சொன்னாலும் பலனில்லை. அவர்களிடையே போட்டி மனப்பான்மையே நீடிக்கிறது. முதல் மாணவனாக வர விரும்பும் ஓட்டப்பந்தயம் நடக்கிறது. ஒருவன்தானே முதலிடம் பெற முடியும். மீதி 29 பேர் வெவ்வேறு இடங்களில் இருப்பார்கள். ஆகவே சிலர் வெளிப்பார்வைக்கு நட்புடன் பழகுவதுபோல் தோன்றினாலும் மனத்தில் ஒருவரை ஒருவர் விரோதியாகவே பார்க்கின்றனர்.

இந்த விரோதம் மறைத்து வைக்கப்பட்டிருப்பது நல்லதுக் குத்தான். இது வெளிப்படையாக இருந்தால் ஒருவரையொருவர் வெட்டித் தள்ளுவார்களே! தற்சமயம் வெளியில் தெரியாதபடி நுணுக்கமாக' சத்தமே கிளம்பாதபடி ஒருவர் மற்றவர் கழுத்தை வெட்டுகிறோம். பிறரது சட்டைப் பையில் கையை நுழைக்காம லேயே ஜேப்படி செய்கிறோம்.

அரசியல்வாதி ஒருவருக்குத் தையற்காரர். சட்டை தைத்துத் தந்தார். அது சிறப்பாக இருந்தது. ஆனால் இதில் பை (ஜேபி) இல்லை. காரணம் கேட்டபோது தையற்காரர், "உங்களுக்கு மக்களின் சட்டைபையிலிருந்துதானே பணம் எடுக்கும் வழக்கம். சட்டையில் பை வைக்கச் செய்து அதில் கைவிடும் வழக்கம் உங்களுக்கு இல்லையே," என்று விளக்கினார். மக்கள் உணர முடியாதபடி அரசியல்வாதி அவர்களின் பணத்தை நயமாக அபகரித்து விடுகிறார்.

உலகம் போராட்டமயமாக உள்ளது. அதில் சிலர் நேர்மையுடன் ஈடுபடுகின்றனர். சிலர் சாமர்த்தியமாக, சிலர் நேர்மையற்ற வழியில் முயல்கின்றனர். உலகில் நேர்மையாளனாக வாழ்வது சிரமம். நேர்மையைக் கைவிட்டால்தான் எதையும் சாதிக்க முடிகிறது. கர்த்தாவானால் மற்றவர்களுடன் மோத வேண்டும். அனுபவிப்பவனாயின் மற்றவர்களை வீழ்த்த வேண்டும். இக்காலத்தில் நட்பு என்பது பெயரளவில் மட்டுமே உள்ளது. அது இனிமையான உரையாடல் அளவிலேயே முடிந்துபோகிறது. இப்போதெல்லாம் நண்பனே பெரிய எதிரியாக இருக்கிறான்.

ஆஸ்கார் வைல்ட் விசித்திரமான பிரார்த்தனை செய்கிறார்: 'கடவுளே, நான் என் எதிரிகளை எப்படியாவது சமாளித்துக் கொள்கிறேன். நீ என் நண்பர்களின் மீது மட்டும் ஒரு கண் வைத்திருந்தால் போதும்' என்று வேண்டுகிறார். காரணம், எதிரியின் ஒவ்வோர் அசைவையும் புரிந்து கொள்ளலாம். விரோதம் தெளிவாகத் தெரியும். நட்பில் எந்த அளவு நயவஞ்சகம் உள்ளது என்பது புரிவதில்லை. எதிரியை நாம் தொலைவில் வைப்பதால் அவன்மூலம் ஆபத்துக் குறைவு. நண்பன் அருகிலேயே இருப்பதால் சட்டென்று தாக்கிவிட முடியும்.*

ஆன்மவீரன் கோபம் கொண்டாலும், நிலை தடுமாறினாலும், அவனது அடிப்படை குணமாகிய சாந்தம் மாறாது. சராசரி மனிதன் சாந்தமாக இருப்பதுபோல் நடித்தாலும் மனத்தின் ஆழத்தில் புயல் வீசிக்கொண்டிருக்கும். உணர்ச்சிகள் கட்டுக்கடங்காமலிருக்கும்.

* ஜூலியஸ் சீஸர் தமது நெருங்கிய நண்பனான ப்ரூட்டஸால் உரையாடலின் போது கொல்லப்பட்டார். 'நீயுமா ப்ரூட்டஸ்?' என்ற அவரது அதிர்ச்சியான கேள்வி புகழ் பெற்றுவிட்டது—Et tu Brute?

ரம்ஜான் மாதம் பகலெல்லாம் உண்ணா நோன்பு. முல்லா நஸ்ருத்தீனும் அவருடைய மூன்று நண்பர்களும் ஒருநாள் மௌன விரதமும் மேற்கொண்டனர். வீட்டிலிருந்தால் விரதம் கெடும் என்று நால்வரும் தனிமையான ஓரிடத்தில் அமர்ந்திருந் தனர். அரை மணி நேரம்கூட மௌனமாக இருப்பதற்கு அவர்கள் சிரமப்பட்டார்கள். திடீரென்று ஒருவன் கவலையுடன், "நான் வீட்டைச் சரியாகப் பூட்டிவிட்டு வந்தேனா என்று நினைவில்லை. தவிப்பாக இருக்கிறது." என்றான். அதைக் கேட்டு இன்னொரு வன், "அட பாவி! உன் பேச்சால் உன் விரதம் முறிந்து போனதே."என்று கண்டித்தான். மூன்றாமவன் சொன்னான்," நீ யாரைக் கண்டிக்கிறாய்? நீயும் தானே இப்படிப் பேசி விரதத்தைக் கெடுத்துக் கொண்டாயே." என்று வருத்தம் தெரிவித்தான். உடனே முல்லா நஸ்ருத்தீனும் கூறினார், "நால்வரில் நானே சிறந்தவன். இதுவரை நான் வாயே திறக்கவில்லை."

குழம்பிய மனமுடையவன் அமைதியாக உட்கார்ந்தாலும் எந்த வித்தியாசமும் இல்லை. அந்த சமயம் அவனது மனம் முன்பைவிட அதிகம் கொந்தளிக்கும். வாழ்க்கைக் கடமைகளில் ஈடுபடும்போது மனம் கொந்தளிப்பாக இருப்பதில்லை. ஏனெனில் நமது சக்தியெல்லாம் உழைப்பில் கலந்து விடுகிறது. அமைதியாக உட்காரும் நிலையில் அந்த சக்தி எங்கே போகும்?

வியாபாரம், தொழில், அலுவலகம் என்றெல்லாம் செலவாகும். அந்த சக்தி அவ்வாறு பயன்படுவதை நிறுத்தினால் உள்ளே குமுறும். அளவு மீறிய நீராவியின் சக்தியால் பாத்திரம் வெடிப்பதுபோல் மனம் கொந்தளிக்கும். விசித்திரமாக, தியானம் செய்ய அமர்ந்ததும் எங்கிருந்தெல்லாமோ எண்ணங்கள் திரண்டுவந்து மனத்தை ஆக்கிரமிக்கும். பல்லாண்டுகளாக நாம் மறந்திருந்தவையும் ஆறிப்போனதாக நினைத்த ரணங்களும் மீண்டும் வலியேற்படுத்தும்.

சாதாரணமாக, நமது அன்றாட வாழ்க்கையில் நாம் பல வேலைகளில் மும்முரமாக இருக்கிறோம். ஆகவே நமக்குள் எட்டிப் பார்க்க நமக்கு நேரம் கிடைப்பதில்லை. தியானப் பயிற்சியின் ஆரம்பக் கட்டத்தில் நம் பார்வை உள்ளே திரும்பு

கிறது. வெளியே சீராக வாழும் நாம், நம் மனவுலகம் அலங் கோலமாக இருப்பது கண்டு திகைக்கிறோம், திடுக்கிடுகிறோம்.

ரமணர் வாழ்விலே ஒரு சம்பவம் சொல்வார்கள். அவருடைய பக்தர்கள் அவரை அமைதியின் சிகரமெனப் போற்றுவது வழக்கம். ஒரு பண்டிதர் நூலறிவு மட்டுமே பெற்றவர். ரமணரைச் சந்தித்து ஆன்மிக விஷயங்கள் குறித்து வாத விவாதம் செய்யலானார். ரமணரின் பதில்களை முரட்டுத்தனமாக மறுத்தார். அவர் வேண்டுமென்றே விதண்டாவாதம் செய்வதை ரமணர் ஊகித்தார். தனது எந்தப் பதிலும் பயனளிக்காது என்பதால் ரமணர் பொய்க் கோபம் காட்டி, கையிலிருந்த தடியை உயர்த்தி, அந்த பண்டிதரை ஓடிப்போ என்று அதட்டினாராம்.

ரமணர் காட்டிய கோபம் நீ வழக்கமாக அறிந்திருக்கும் வகையானதன்று. கோப நிலையிலும் அவர் தமது மையத்தை விட்டு விலகியிருக்கவில்லை. குழந்தையின் கோபத்தைப்போல் அவர் களங்கமற்ற கோபத்தையே வெளிப்படுத்தினார். அவரிடம் முழுமையான சாந்தம் குடிகொண்டிருந்ததைப்போல், அவர் அதிசயமாக வெளிப்படுத்திய கோபத்திலும் பகைமை உணர்ச்சி சிறிதும் இல்லை.

ஆன்மிகவீரன் சற்றுத் தடுமாறினாலும் அதுவும் ஓர் அழகே என்கிறார் அஷ்டாவக்ரர். கோபத்தை வெளிப்படுத்திய போது ரமணர் புதிய அழகுடன் தெரிந்தார். மனக்கட்டுப் பாடில்லாதவன் எதையாவது செய்தாலும் நன்றாக இருக்காது. சும்மா இருந்தாலும் வம்புதான்.

**சே**ட்ஜி ஒருவர் ஏதோ கடை வைத்திருந்தார். உதவிக்கு ஒரு வேலைக்காரர்தான். ஒருநாள் கடையை மூடும் முன் பணத்தை எண்ணிய சேட்டு பத்து ரூபாய் குறைவாக உள்ளதைக் கவனித்தார். அவர் வேலைக்காரரைக் கூப்பிட்டார். "இன்று வியாபாரமே நடக்கவில்லை. ஒரு-எறும்புகூட நம் கடைக்கு வரவில்லை. ஆனாலும் பத்து ரூபாய் குறைகிறது. கடையில் நானும் நீயும் மட்டும்தானே இருந்தோம்," என்றார்.

வேலைக்காரர் உடனே தன் சட்டைப்பையிலிருந்து ஐந்து ரூபாய் வெளியே எடுத்து வைத்தார். "குறைந்த ரூபாயில் இதோ

என் பங்கு. உங்கள் பங்குடன் இதைச் சேர்த்துக் கொள்ளுங்கள்," என்றார். மனக்கட்டுப்பாடற்றவர்கள் இப்படித்தான் வாயால் கெட்டுப்போவார்கள்.

இவர்கள் தியானம், தவம், ஜெபம் செய்தாலும் அதில் ஆழம் இருக்காது. அவர்கள் அவற்றைச் சடங்குபோல் மேலோட்டமாகத்தான் செய்வார்கள். உள்ளே இருப்பதுதானே வெளியே வரும். உனக்குள் ஆன்மிகப் புரட்சி நிகழாதவரை ஜெபம், தியானம் முதலியவை வெளிவேஷம் மட்டுமே. ஆகவே அஷ்டாவக்ரர் நமது முழு முயற்சியையும், சக்தியையும் உட்புறமாகத் திருப்பிவிடச் சொல்கிறார். உள்ளே விழிப்புப் பெறச் சொல்கிறார்.

மூடன் சாந்தமாக உட்கார்ந்திருந்தால் ஜடப்பொருள்போல் தெரிவான். அவன் உறக்கத்திலிருப்பதுபோல் தோன்றும். ஞானி அமைதியாக உட்கார்ந்திருந்தாலும் அந்த அமைதி உயிரோட்ட முள்ளதாக இருக்கும். ஓடும் நதிபோல் அதில் இயக்கம் தெரியும். மூடனின் அமைதி கல்லறையின் அமைதியாகும். ஞானியின் சாந்தம் வாழ்க்கையின் மென்மையான இசைபோன்றது.

ஆகவே கண்களை மூடி சும்மா உட்கார்ந்திருந்தால் அது சாந்தநிலை ஆகிவிடாது. உண்மையான, ஆழமான அமைதி அவ்வளவு மலிவானதன்று. இந்த நாட்டில் துறவி என்று சொல்லிக் கொண்டு இப்படிப் பலர் உட்கார்ந்திருக்கின்றனர். அதைப் பார்த்து அவர்களை ஞானிகளென நினைத்து ஏமாறாதே. ஜடப் பொருளின் அமைதியில் என்ன சிறப்பு இருக்கிறது? சாந்தம் என்பது சோம்பேறித்தனமன்று. அதில் சூட்சுமமான இயக்கம் உள்ளது. உதாரணமாக, அழகு என்பது பொதுவானது. ஆனால் அழகற்ற ஒருவன் பகட்டான ஆடை அணிந்தாலும் பொலிவு பெறுவ தில்லை. அழகான மனிதன் எளிய ஆடையிலும் புதுவிதமான அழகுடன் தெரிவான்.

நீ அடிப்படையில் எப்படியோ அப்படித்தான் வெளியிலும் பிரதிபலிப்பாவாய். ஆகவே உள்புற சௌந்தர்யம் தேவை. உள்ளே அழகாக இருந்தால் வெளியே இருக்கும் சாதாரண உடலும் காந்த சக்தி பெற்றுவிடும்.

'வீண் கற்பனைகளற்ற, பற்றுகளால் கட்டுப்படாத, சுதந்திர அறிவு உடைய ஆன்மவீரன் பெரிய இன்பங்களையும் வேடிக்கையாகக் கருதுவான். கடுமையான குகை வாசத்தையும் எளிதில் ஏற்பான்.' **(சுலோகம் 229)**

அஷ்டாவக்ரரின் பார்வையில் ஞானி மாளிகை வாழ்வானாலும், மலைகுகை வாழ்வானாலும் பாதிக்கப்படமாட்டான். மாளிகை வாழ்வில் ஒருவன் மயங்கவில்லை என்பதாலேயே ஒருவன் ஞானியாகிவிடமாட்டான். அவனுக்கு குகைவாசம் பிடித்திருக்கலாம். அப்படியானால் மோகம் என்பது நீங்கவில்லை. பணத்தை வெறுத்து வறுமையை வலிந்தேற்பதாலேயே ஒருவன் ஞானியாக மாட்டான். ஏனெனில் அவனுக்கு வறுமையில் மோகம் உள்ளது.

உண்மையான ஞானி எல்லா சூழ்நிலைகளுடனும் சமரசமாக இருப்பார். மாளிகைவாசமா சரி, குகையில் வாழ்வா சரி என்று வருவதை ஏற்று சமாதானமாக இருப்பார். மேலும், ஞானி மாளிகையில் வாழ்ந்தாலும், குகையில் வசித்தாலும் அவை ஒளிபெற்று விளங்கும். ஞானி இருக்குமிடத்தில் அழகு சொரியும். அவரைச் சுற்றிலுமுள்ள பொருள்களும் புதிய அழகுடன் திகழும். அவர் கல்லைத் தொட்டாலும் பொன்னாகும். அவர் பொன்னைத் தொட்டால் அதில் நறுமணம் வீசும்.

ஞானி குறிப்பாக எந்தப் பொருள் வேண்டும் என்னும் வேட்கையுடையவராக இருக்கமாட்டார். கிடைத்ததில் திருப்தியுடன் இருப்பார். அவரது சமரசத் தன்மை அடர்த்தியானது, ஆழமானது, பூரணமானது. கடவுள் காட்டுவதைப் பார்க்க, கடவுள் இட்டுச் செல்லும் பாதையில் செல்ல அவர் சம்மதிக்கிறார். வேண்டுமென்றே அவர் மாளிகையைக் கைவிடுவதில்லை வேண்டுமென்றே அவர் குடிசையைத் தேர்ந்தெடுப்பதுமில்லை.

'ஆன்மிக வீரன் சாஸ்திர பண்டிதர்களுக்கு மரியாதை, கோயில், புனிததீர்த்தக் குளியல் என்றெல்லாம் செய்தாலும் பெண்கள், அரசர், பிரியமான உறவினர்கள் என்றெல்லாம் பழகினாலும் மனத்தில் அவைமீது பற்று இருப்பதில்லை.' (சுலோகம் 230)

நீயும் பூஜை செய்கிறாய். ஆனால் அதில் சுயநலம் கலந்துள்ளது. உன் வேண்டுகோள்கள் அதைக் களங்கப்படுத்துகின்றன. உனது பூஜையில் புனித நறுமணம் இல்லை. ஆன்மவீரனும் பூஜைசெய்வான். ஆனால் அவனது பூஜைக்கும் உன் பூஜைக்கும் இடையே ஆகாயத்துக்கும் பூமிக்கும் உள்ளது போன்ற இடைவெளி காணப்படுகிறது.

ஆன்மவீரனும் எப்பொழுதாவது கோயிலுக்குச் செல்வான். தெய்வச்சிலையின் முன் லயிப்புடன் நிற்பான். கங்கையிலும் நீராடுவான். புனித இடங்களுக்கும் யாத்திரை செல்வான். ஆனால் எதையும் பெற ஆசைப்பட்டு அவன் அவ்வாறு செய்வதில்லை. கோயிலும் கடவுளின் வீடு என்பதால் அவன் அங்கு செல்வான். ஆனால் வரம் கேட்பதற்காகப் போகமாட்டான். அவன் கோயில்களில் பாரபட்சம் பார்ப்பதில்லை.

ஆன்மவீரன் இருக்குமிடமேகூட கோயில்தான். அவன் கட்டப்பட்ட கோயில்களில்தான் சுகமாக உணர்வான் என்றில்லை. அவன் கோயிலுக்குப் போவது தேவையற்ற செயல் என்றும் நினைப்பதில்லை. அவன் சிலசமயம் பூஜையும் செய்வான். பூஜையிலும் ஓர் இனிமையுண்டு. அவனது பூஜை நன்றி தெரிவிப்பதற்காக மட்டுமே இருக்கும். 'இறைவா! போதுமான திரவியம் நீர் எனக்கு வழங்கியிருக்கிறீர். மேற்கொண்டு நான் கேட்பதற்கு என்ன உள்ளது?' என்பான்.

நீயும்தான் கோயிலுக்குப் போகிறாய். உடல் தரையில்பட விழுந்து வணங்குகிறாய். ஆனால் உன் இதயம் எதிர்பார்ப்புகளால் நிறைந்துள்ளது. நீ பிச்சைக்காரனைப்போல் நடந்து கொள்கிறாய். ஆன்மவீரன் எதையும் கேட்பதில்லை. அவன் யாசகன் அல்லன், கொடுப்பவன். தன்னையே கடவுளுக்குக் கொடுத்து விடுகிறான்.

ஆன்மவீரன் பேரழகியைக் கண்டாலும் காமம் கொள்வதில்லை. ஞானியின் கண்ணுக்குப் பெண்ணழகு தெரியாது, தெரியவும்கூடாதென பண்டிதர்கள் கூறுவார்கள். அது உண்மையானதல்ல. அது இயற்கைக்கு முரணானது. ஞானிக்கும் பெண்ணழகு கண்ணில் படும். ஆனால் அவன் சிந்தனை அந்த

அழகிற்கு காரணமான கடவுளை நோக்கிப் பாயும். அதேபோல் பெண் துறவியரும் ஆணின் அழகில் கடவுளின் படைப்பாற்றலையே காண்பார்கள். மலர்ந்த தாமரையைப் பார்த்தால் இறைவன் திருவடி ஞாபகம் வருவதுபோல், அழகிய மனித உடல் அதைப் படைத்த கடவுளை நினைவூட்டினால் ஆச்சரியமில்லை. ஆனால் அவ்வாறு பார்ப்பது ஆன்மவீரனுக்கு மட்டுமே சாத்தியமாக உள்ளது. மற்றவர்கள் பெண்ணழகு என்றால் பயப்படுகிறார்கள். கண்ணை மூடிக்கொள்கின்றனர். அல்லது பார்வையை வேறு பக்கம் திருப்பிக்கொள்கின்றனர். ஏனெனில் அவர்கள் மனத்தில் கடவுளின் நினைவுக்குப் பதிலாகக் காமனின் நினைவு எழுகிறது.

கடவுளின் பேரழகை நேரடியாகக் காண நம் கண்கள் சக்தியற்றவை. அவரை நேருக்கு நேர் பார்ப்பதும் சாத்தியமில்லை. உலகில் தென்படும் அழகு வடிவங்கள் ஒவ்வொன்றிலும் ஆண்டவனின் ஒரு கிரணம் தென்படும். அழகிய பெண்ணிடம் ஒரு கிரணம், குழந்தையின் கண்ணொளியில் ஒரு கிரணம், அருவியின் அழகில் ஒரு கிரணம், வீணையின் ஒலியில், கடலின் அலையில் என்றெல்லாம் கடவுளின் அழகு கூறுகளாக பிரதிபலிப்பாகிறது. சூரியனைக் கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் அதன் ஒளி ஒவ்வொரு பொருளிலும் பிரதிபலிப்பது போல்தான் கடவுளின் சௌந்தர்யம் எங்கும் கொட்டிக் கிடக்கிறது.

ஞானி அரசர்கள் போன்றவர்களைப் பார்த்து அஞ்சுவதில்லை. தானும் அவர்கள்போல் ஆக வேண்டுமென ஏங்குவதில்லை. அவர்களிடமும் கடவுளின் ஒரு கிரணம் இறங்கியிருப்பது கண்டு அவன் ஆனந்திக்கிறான். அவன் தன் உறவினர்களிடம் அன்பு செலுத்தியபோதிலும் அவர்கள் மீது அவனுக்கு விசேஷப் பற்று கிடையாது. நம்மவர்-அந்நியம் என்று பிரித்துப் பார்க்கும் வழக்கம் அவனிடம் இல்லை. இருப்பதெல்லாம் கடவுள் ஒருவரே. நாமெல்லாரும் அவருடைய விஸ்தரிப்புகளே என்று அவன் கருதுகிறான்.

"யோகி யார் எள்ளி நகைத்து ஏசினாலும் பாதிப்படைவதில்லை. வேலைக்காரன், பிள்ளைகள், மனைவி, பேரப்

பிள்ளைகள், உறவினர்கள் என்று யார் மட்டம் தட்டினாலும் பொருட்படுத்தி வருந்துவதில்லை." **(சுலோகம் 231)**

வேலைக்காரன் என்று குறிப்பிடுவது வியப்பூட்டலாம். நாம் வேலைக்காரனுக்குத் துளியும் மரியாதை கொடுப்பதில்லை. அவன் நம்மிடம் சம்பளம் பெற்று வாழ்க்கை நடத்துபவனல்லவா? அவன் உன்னை முகஸ்துதி செய்வதுதானே வழக்கம். அவனாவது உன்னை நிந்திப்பதாவது? அது நடக்கமுடியாத காரியமாயிற்றே. அதுவும் சிரித்துக் கேலிசெய்வதா? மற்றவர்கள் உன்னை அவமதித்தாலும் பொறுத்துக்கொள்வாய். வேலைக்காரன் பரிகசித்தால் உன்னால் தாங்கமுடியுமா? கோபம் பொத்துக் கொண்டு வருமல்லவா?

நாம் அறையில் உட்கார்ந்து செய்தித்தாள் படிக்கிறோம். வேலைக்காரன் நம்மைக் கடந்து செல்கிறான். அதை நாம் பொருட்படுத்துவதே இல்லை. அவனுக்கென ஓர் ஆளுமை உண்டென, நாம் நினைத்ததில்லையே. அவனுள்ளும் ஆத்மா இருப்பதை நாம் உணரவில்லையே. நமக்கு சமமாக அவனை உட்காரவைப்பதில்லையே. அவன் உன்னருகில் அங்குமிங்கு மாகச் சென்றாலும் நீ செய்தித்தாள் படிப்பதை நிறுத்துவதில் லையே.

பிள்ளைகள், பேரப்பிள்ளைகள் உனக்கு அடங்கியிருக்க வேண்டுமென எதிர்பார்க்கிறாய். நீதானே அவர்கள் பிறக்க, வளர, வாழ்க்கையில் காலூன்ற காரணம். அவர்களே உன்னை கேலி செய்து அவமதித்தால் தாங்க முடியுமா? அது உன்னையே உன் கையால் அறைந்துகொள்வது போன்றதாகும் அன்றோ.

ஆணாதிக்கம் மிக்க இந்திய சமுதாயத்தில் எந்த ஆணும் ஒரு பெண்ணால் அவமானப்படுத்தப்படுவதை விரும்புவதில்லை.[1] அதை அவன் தனது ஆண்மைக்கு இழுக்காக நினைக்கிறான். அஷ்டாவக்ரர் காலத்திலோ பெண் அடிமையாகவே நடத்தப் பட்டாள். அவளது தனிப்பட்ட ஆளுமைக்கு மதிப்புத் தரப்பட வில்லை. அவள் வீடு, நிலம்போல் இன்னொரு சொத்தென்றே

*1. பெண் சிரித்தாலும் சினம் காட்டுவது இன்றும் நடைமுறையில் உள்ளது. துரியோதனன் விழுந்ததைக் கண்டு திரௌபதி சிரித்ததன் விளைவுதானே பாரதப்போர்.

கருதப்பட்டாள்.[1] கணவன் அடித்தாலும் அவள் ஒன்றும் செய்ய முடியாது.

இக்காலப் பெண்கள் தங்கள் உரிமைகளை உணர்ந்துள் ளனர். கணவனுடன் வாதாடவும், அவனை எதிர்க்கவும், அவனை மீறிச் செல்லவும் தயாராக உள்ளனர். இதை ஆண்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. நான் ராய்புரில் ஒரு முறை தங்கியபோது மாடியில் உறங்கினேன். பக்கத்து மாடியில் பெண் அழும் சத்தம் கேட்டு எட்டிப்பார்த்தேன். பக்கத்து வீட்டுக்காரன் தன் மனைவியை அடிப்பதைப் பார்த்துத் தடுத்தேன். அவன் கோபம் என் பக்கம் திரும்பியது. "நீர் யாரையா தடுக்கிறீர்? இவள் என் மனைவி, என் சொத்து" என்று கத்தினான்.

அவன் பேசியது பரம்பரைக் கண்ணோட்டப்படி சரி. அது சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. மனுதர்ம நீதியில் அவ்வாறு உள்ளது.[2]

ஆனால் ஆன்மவீரன் பிறர் தன்னைக் கேலி செய்து அவமதித்தாலும் பாதிப்பிற்குள்ளாக மாட்டான். ஞானம் பெற்றவன் பற்றும் வெறுப்பும், நம்மவர்-அந்நியர் என்று இரட்டை மனப்போக்கும் கொண்டிருக்க மாட்டான். பிறவிதோறும் மாறிவரும் உறவுகளின் தந்தை-தாய், மனைவி-பிள்ளைகள் என்று யாரை நினைத்து அவர் அவமதித்ததாக வருந்துவது?

மேலும் ஒருவன் ஞானம் பெற்றபின் அவனே இல்லாமல் போய்விடுவானே. பிறரது ஏளனம் யாரைப்போய்ச் சேரும்? இலக்கு இல்லாதபோது அம்பெய்து என்ன பிரயோஜனம்?

"ஆன்மவீரன் திருப்தியடைந்தும் திருப்தியற்றவனாக இருப்பான். அவன் வருத்தப்பட்டாலும் வருந்துவதில்லை. ஆச்சரியம் தரும் அவனது மனப்பான்மை இன்னொரு ஞானிக்குத்தான் புரியும்." **(சுலோகம் 232)**

திருப்தி இரண்டு வகை. தோல்வி ஏற்பட்டு, இனி ஒன்றும் செய்ய முடியாது என்ற நிலையில் அமைதியாகப் பின்வாங்குதல்

---

1. 'ஆடவருக்கொப்பில்லை மாதர் ஒருவன் தன் தாரத்தை விற்றிடலாம் தானமென பெற்றவர்க்குத் தந்திடலாம்' - பாஞ்சாலி சபதம், பாரதியார்.

2. சிறுவயதில் தந்தையிடம், வாலிபத்தில் கணவனிடம், வயோதிகத்தில் மகனிடம் பெண்கள் அடங்கிவாழ வேண்டும். அவர்களுக்கு சுதந்திரம் கிடையாது என்கிறார். மனு

திருப்தியின்மையின் ஒருவகை. திராட்சைப் பழம் புளிக்கும் என்று பின்வாங்கிய நரியின் திருப்தி இந்த வகையானது. இது கையாலாகாத்தனத்தின் திருப்தி. இது போலியான திருப்தி. இது தன்னையே ஏமாற்றிக் கொள்ளும் திருப்தி. தோல்வியை மறைப்பதற்காக திருப்தி என்று கூறுவதுண்டு.

மனோதத்துவ அறிஞர்களின் கருத்துப்படி தோல்வியை ஒப்புக்கொள்வது ஆரோக்கியமான அணுகுமுறையாகும். பிறகு மனம் இலேசாகி அடுத்த நடவடிக்கையைத் தொடங்கலாம். ஆனால் சராசரி மனிதன் தோல்வியடைந்தால் அதற்குப் பிறர்மேல் பழிபோட்டு, தான் திருப்தியுடன் இருப்பதாகக் காண்பிக்கிறான்.

ஆன்மவீரனின் திருப்தி ஆனந்தத்தில் பிறக்கிறது. அது தோல்வியில் பிறக்கவில்லை. வாழ்க்கையைப் புரிந்து கொண்ட தால் அவன் திருப்தியுடன் விளங்குகிறான். அது அவனது இயக்கத்தைத் தடுப்பதில்லை.

ஞானிகள் நம்மை வெளியுலகில் திருப்தியுடனும் அக உலகில் அதிருப்தியுடனும் இருக்குமாறு சொல்கிறார்கள். புற உலகில் கிடைக்கும் பணம், பதவி, மரியாதை ஆகியவற்றுடன் திருப்திகொள். இவை சாரமற்றவை. இவற்றின் வரத்து நின்றுபோனால் இழப்பில்லை. இவை எப்படியும் நிலையில் லாதவை. ஆனால் உள்ளே நீண்ட யாத்திரை செய்ய வேண்டியுள்ளது. அதை முடிவற்ற யாத்திரை எனலாம். வழியில் கிடைக்கும் சித்திகளால் திருப்தி அடையக்கூடாது. இது பரமாத்மாவை நோக்கிய யாத்திரை. பரமாத்மாவைச் சென்றடைவது அரிதினும் அரிது. ஆகவே அதிருப்தி இருப்பது நியாயம்தான். அந்த அதிருப்தி வரவேற்கத் தக்கது. முடிவில்லாத கடலில் படகில், ஆத்மாவாகிய படகில் இந்த உள்முகப் பயணம் நடைபெறுகிறது.

சாதாரண மக்கள் பல காரணங்களால் வருந்துகிறார்கள். ஞானிக்கும் சோகம் உண்டு. அவனது சோகம் வேறுவிதமானது, வேறு காரணத்தால் ஏற்படுவது. அவனது சோகம் உனது சந்தோஷத்தைவிட அதிக மதிப்பும் சிறப்பும் உடையது. அவன்

தனக்காக வருத்தப்படுவதில்லை. அவனது சோகம் மற்றவர்களின் துன்பம் கண்டு விளைவதாகும்.

புத்தரிடம் ஒருவன் வந்து, "சுவாமி, நான் உலகிற்கு சேவை செய்ய ஆசைப்படுகிறேன். வழி சொல்லுங்கள்," என வேண்டினான். புத்தர் அவனைக் கூர்ந்து நோக்கினார். அவனது வேண்டுகோளின் காரணத்தை அவர் ஊகித்தார். அவர் கண்களிலிருந்து சிறிது கண்ணீர் வந்தது. அந்த மனிதன் பயந்து வெளியேறி விட்டான். புத்தரிடம் சீடர்கள் அவர் ஏன் கண்ணீர் உகுத்தார் என்று விசாரித்தனர். அதற்கு அவர், "அந்த மனிதனிடம் உண்மையான சேவை உணர்வு கிடையாது. அவன் ஏதோ பெரிய கஷ்டத்தில் இருக்கிறான். அதை மறக்கவே சேவை செய்ய விரும்புவதாக மாற்றிச் சொல்கிறான். அவன் மீது நான் கொண்ட இரக்கம் இப்படிக் கண்ணீராக வெளிப்பட்டது," என்று விளக்கினார்.

புத்தர் போன்ற ஞானி கண்ணீர் விட்டால் அது தனக்காக அழுவதாக இருக்காது. அது பிறர் மீது அவருக்கு உண்டான இரக்கத்தின் வெளிப்பாடாக இருக்கும். நீ எப்பொழுதும் உனக்காக மட்டுமே அழுகிறாய். மற்றவர்களுக்காக அழுவதாக நீ சொன்னாலும் உண்மையில் உனக்காகத்தான் அழுகிறாய். கணவன் இறந்தான். மனைவி அழுகிறாள். அந்த அழுகை கணவ்னைக் குறித்து அன்று. தன் எதிர்கால பயத்தால் அழுகிறாள். இனி தனக்கு சுயநலமற்ற ஆதரவு யார் தருவார்கள்? இனி வருமானத்திற்கு, செலவுகளுக்கு என்ன செய்வது என்ற கலக்கத்தால் அவள் அழுகிறாள். கணவன் மீது அன்பில்லை என்று அர்த்தமில்லை அதைவிட எதிர்கால பயம்தான் அவளை அதிகம் அச்சுறுத்துகிறது.

அமெரிக்காவில் ஒரு குடும்பத்தில் கணவன் இறந்ததால் மனைவி மிகவும் அழுதாள். அவள் கணவன் ஆயுள் காப்பீடு செய்திருந்த நிறுவன உயர் அதிகாரியும் துக்கம் தெரிவிக்க வந்திருந்தார். அப்பெண்ணின் மீது இரக்கப்பட்டு விரைவில் ஒரு லட்சம் டாலருக்கான காப்பீட்டுத் தொகைக்கான காசோலை அனுப்பிவைத்தார். அதைக் கொடுத்த அலுவலர் சம்பிரதாயக்

கடமையாக அவளிடம், "மேடம், உங்கள் கணவர் ஏதோ அதிசயத்தால் பிழைத்துத் திரும்பிவந்தால், இந்தத் தொகையை நீங்கள் எங்கள் கம்பெனிக்குத் திருப்பித் தருவீர்கள் அல்லவா?" என்று விசாரித்தார்.

அவள் மறுத்தாள். "எனக்குக் கணவர்மீது அன்புண்டு என்றாலும் பொருளாதார காரணத்துக்காக அவரைச் சார்ந்தே வாழ்ந்துவந்தேன். இப்போது எனக்கு ஒரு லட்சம் டாலர் கிடைத்துவிட்டதால் அவர் மீண்டும் உயிர் பெற்றுத் திரும்புவதில் எனக்கு சம்மதமில்லை," என்றாள்.

சீன ஞானி கன்பூஷியஸ் ஓர் ஊருக்குச் சென்றபோது ஊர் எல்லையில் மயானத்தில் ஒரு பெண்மணி ஒரு புதிய சமாதி மேட்டை விசிறியால் விசிறுவதைக் கண்டார். மனைவி இப்படியல்லவா இருக்க வேண்டும் என அவர் வியந்தார். அவர் அவளை அணுகி, "அம்மணி, .புராணங்களில்தான் இவ்வளவு பதிபக்தியுள்ள பெண்கள் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். இக்காலத்தில் அப்படி ஒருத்தி இருக்க முடியாதென நினைத்தேன். வெயிலாக இருப்பதால் புதைக்கப்பட்ட உன் கணவனுக்கு வியர்க்கக்கூடாதென்று விசிறுகிறாயே! உன்னை தரிசித்தது என் பாக்கியம். உன் பாதம் தொட்டு வணங்க விரும்புகிறேன்," என்றார்.

அவள் தடுத்தாள். அவர் ஒரு ஞானி என்று தெரியாமல் அவள் கோபமாக, "ஐயா, உளறாதீர்கள். என்னை மணக்க பலர் விரும்புகிறார்கள். ஆனால் எங்கள் தர்மகுரு 'உன் கணவரின் புதைமேடு அவன் நேற்றுதான் புதைக்கப்பட்டதால் இன்னும் உலரவில்லை. அதற்குள் நீ இப்போதே திருமணம் செய்து கொண்டால் நாகரிகமாக இருக்காது. முதலில் புதைமேடு உலரட்டும்' என்றார். அது தானாக உலரத் தாமதமாகும் என்பதால் அது சீக்கிரம் உலர இப்படி விசிறுகிறேன்," என்றாள்.

பிறர் இறந்ததால் நாம் அழுவது உண்மையில் நமக்காகத்தான். பிண ஊர்வலம் ஒன்றைப் பார்க்கிறோம். நம் மனத்தில் ஓர் அதிர்ச்சி ஏற்படுகிறது. நாமும் ஒருநாள் இப்படித்தான் எடுத்துச் செல்லப்படுவோம் என்று பயச் சிலிர்ப்பு ஏற்படுகிறது.

பிணத்தைப் பார்த்து நம் மனம் நெகிழ்ந்ததாக நினைப்போம். அடிப்படையில் நமக்காகத்தான் நெகிழ்கிறோம்.*

நீ அழுதாலும், வருத்தமாக இருந்தாலும், கோபப்பட்டாலும் அதெல்லாம் உனக்காகத்தான் செய்கிறாய். உன் வாழ்க்கை உன்னையே மையமாகக் கொண்டுள்ளது. ஞானியின் வருத்தம், சோகம், சினம் முதலியவை பிறர் மீது இரக்கம் காரணமாக, பிறரது நன்மைக்காகவே இருக்கும். ஞானியின் நடவடிக்கைகளை சராசரி மனிதர்கள் புரிந்துகொள்வது சிரமம். நீ உன்னை உரைகல்லாக வைத்து, பிறரின் உணர்ச்சி வெளிப்பாடுகளுக்கு அர்த்தம் காண்கிறாய். நீ எதெற்கெல்லாம் அழுகிறாயோ, சிரிக்கிறாயோ, அதேபோல்தான் அதற்கெல்லாம் மற்றவர்களும் அழுவார்கள், சிரிப்பார்கள் என்று முடிவுகட்டிவிட்டாய். நீ உன்னை அளவுகோலாக வைத்து மற்றவர்களை மதிப்பிடுகிறாய். ஆகவேதான் உன் அளவுகோலுக்கு ஒத்துவராத ஞானியின் நடவடிக்கைகள் உனக்குப் புதிராக உள்ளன.

எனவே ஞானியின் போக்கு ஆச்சரியமானது என்கிறார் அஷ்டாவக்ரர். நீ அதை விளங்கிக்கொள்ள முடியாது. ஏனென்றால் ஞானிக்குக் கிடைத்தது போன்ற அனுபவம் நீ அடைந்தது இல்லை. பாம்பின் கால் பாம்பறியும் என்பதுபோல், ஞானியைப் புரிந்துகொள்ள இன்னொரு ஞானியால்தான் முடியும். அல்லது அவர் அடைந்துள்ள உச்சத்தை நீ தொட வேண்டும்.

என்னிடம் வந்து சிலர் சத்குரு கிடைக்க என்ன செய்வது என்று கேட்கின்றனர். இது மிகவும் கடினம். முடியாத காரியம் என்றும் சொல்லலாம். உன்னால் அவரை அடையாளம் காண முடியாது. அதற்கென்று உபாயம் கிடையாது. நீ எந்த வழியை மேற்கொண்டாலும் அது தவறாக முடியும். எவர் அருகே நீ இருக்கும்போது உன் வாழ்வில் புதியதாக ஓர் அனுபவம் ரசம்போல் பெருக்கெடுப்பதுபோல் உணர்கிறாயோ அவரிடம் நீ சீடனாக இருந்துபார். சத்குரு என்று மற்றவர்கள் சொல்வதைக் கேட்டு நீ அவருடன் நெருங்கிப் பழகியும் உன்னை மரக்கட்டை போல் உணர்ந்தால், அவரைக் கைவிட்டு உன் தேடலைத் தொடரு.

* 'Ram naam satya hai' chanted by pall-bearers but repeated in the minds of onlookers as well, invariably results in an inward sweat over its post-dated applicability to themselves. (Gopalkrishna Gandhi)

ஞானியை நீ எந்தெந்த நிலைகளில் காண்கிறாயோ, அதே நிலைகள் அஞ்ஞானத்திலும் உண்டு. ஞானத்தில் நிகழ்பவை எல்லாம் அஞ்ஞானத்திலும் நிகழ்கின்றன. காரணங்களில்தான் வேறுபாடு. காரியங்கள் ஒரேமாதிரி நடைபெறுகின்றன. ஏறத்தாழ ஒரேமாதிரி சம்பவங்கள் நிகழ்கின்றன. செயலைக் கொண்டு அல்ல, காரணத்தைக் கொண்டு ஞானி-அஞ்ஞானி என்று பிரிக்க வேண்டும்.

எவரிடம் உன் மனம் லயிக்கிறதோ, எவரிடம் ஏதோ விஷயம் இருக்கிறது என்று நினைக்கிறாயோ, அவரிடம் தங்கு. அவரிடம் உள்ள ஞானத்தை கிரகித்துக்கொள். உன் வாழ்க்கை புதியதொரு வடிவம் எடுக்கும். உன் படகு கரையிலிருந்து விடுபடும். அதைக் கட்டியிருக்கும் கயிறுகள் அறுபடும். சிறிது-சிறிதாக ஆனந்த அலைகள் எழும். உனக்குள்ளே ஒரு புதிய உலகத்தின் கதவுகள் திறக்கும்.

ஒரே சத்குருவே எல்லோருக்கும் குருவாக இருக்கமாட்டார். அதனால்தான் உலகில் குருமார்கள் பலர் தோன்றினர். புத்தர், மகாவீரர், கிருஷ்ணர் சில உதாரணங்கள். இவர்களை வாசல்போல் நினைத்தால் சீடர்கள் தங்களுக்கு உகந்த வாசல் வழியாக ஆன்மிக உலகத்தில் பிரவேசிக்கின்றனர். ஒரு குருவிடம் பெறும் உபதேசம் உனக்கு ஏற்றதாக அல்லது போதுமானதாக இல்லாவிடில் அவரைவிட்டு விலகிவிடலாம். 'அப்போது நன்றி கூறி வெளியேற வேண்டும். அவரைப் பற்றி உன் மனத்தில் புகார் எதுவும் இருக்கக்கூடாது. இத்தனை காலம் இந்த குருவிடம் இருந்து வீணாக்கியதாக நினைக்கக்கூடாது. சரியான கதவைத் திறக்க வேறு சில கதவுகளைத் தட்டிப்பார்ப்பது வீண்முயற்சி என நினைக்கக்கூடாது. சரியான சத்குருவை அடைய வேறு சில குருக்களிடம் பயிற்சி பெற நேரிடுவதால் நஷ்டம் ஒன்றுமில்லை.

'கடமையே உலகம். ஆனால் அந்தக் கடமையை ஞானி கவனிப்பதில்லை. அவர் சூனியனாக, உருவற்றவனாக, மாற்றமற்றவனாக, துன்ப உணர்வு அற்றவனாக இருப்பான்.' **(சுலோகம் 233)**

சாஸ்திரங்களில் 'மமேதம் கர்த்தவ்யம்' என்றொரு சொல்வழக்கு உண்டு. 'எனது கடமை இது' என்னும் அர்த்த முடைய இக்கருத்தைப் பின்பற்றுவதுதான் உலக வாழ்க்கை. 'இது

என் கடமை. இதை நான் செய்தே ஆக வேண்டும்' என்று நீ நினைக்கும் வரையிலும் நீ உலகியல் வாழ்க்கையில் மூழ்கிய வனாக இருப்பாய். இதற்கு மாறாக நீ, 'எனக்கென்ன அப்படிக் கடமை இருக்கிறது? உலகைப் படைத்தவனுக்குத்தான் எல்லா கடமையும். எனக்குத் தரப்பட்ட வேஷத்தை பாத்திரத்தை நிறைவேற்றுவேன் கடமையாக இல்லை, நடிப்பு என்ற முறையில் செயல்படுவேன்' என நினை.

இவ்வாறு, 'செய்பவன் நான்' என்ற திமிர் இல்லாமல் (கர்த்தாவாக நினைக்காமல்) 'உலக நாடகமேடையில் நான் ஒரு நடிகன்' என்னும் உணர்வு உனக்குள் உதித்தால் உன்னுள் ஒரு புரட்சி விளைந்ததெனக் கருதலாம்.

நீ 'இது என் பொறுப்பு. நாலு குழந்தைகளின் தந்தை நான். என்னை நம்பி மனைவியும் இருக்கிறாள். அவர்கள் சம்பந்தமாக நான் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் உள்ளன', என்றெல்லாம் நினைக்கும்வரை நீ உலகத்தில் தோய்ந்தவனாக இருக்கிறாய்.

நான் சொல்வதென்ன? நீ மனைவியையோ, குழந்தை களையோ விட்டு ஓட வேண்டாம். 'என் கடமை' என்று மட்டும் கூறாதே. கடமை உணர்வைக் கைவிடு. அலுவலகம் அல்லது கடைக்கு வழக்கம்போல் வேலைக்குச் செல். அங்கு நீ செய்யும் வேலைகளைச் செய்யும் கர்த்தாவாகக் கடவுளை ஆக்கிவிடு. 'இறைவா! நீ நடத்த விரும்பும் லீலையை நடத்து. நாடகத்தில் எனக்கு என்ன வேஷம் தந்துள்ளாயோ அதை நடித்துத்தருகிறேன் எனக் கூறு. நீ ராமாயண ராமனாக அவரைப் போன்ற கடமைவீரனாக உன்னை நினைத்துக்கொள்ளாதே. ராமலீலா நாடகத்தில் வரும் ராமன் வேஷதாரியாக நினைத்துக்கொள். மேடையில் நடிக்க வேண்டியுள்ளதை நிறைவேற்று. முழு இதயத்துடன் நிறைவேற்று. ஆனால் கர்த்தாவாக அல்ல.

ஞானிகளுக்குக் கடமை என்று எச்செயலும் தோன்றுவ தில்லை. அவர்கள் மூலம் கடவுள் செய்விப்பதைக் கருவிபோல் செய்து முடிக்கிறார்கள். கடவுள் செய்விக்காத எதையும் பிடிவாதமாக அவர்கள் செய்வதில்லை. தாங்கள்தான் எதற்காவது பொறுப்பு என்று அவர்கள் நினைப்பதில்லை. இதனால்

அஷ்டாவக்ரர் இவர்களை 'ஸ்வச்சந்த' என்கிறார். இவர்கள் சுய சந்தத்தில், சுயமான யாப்பில், சுயமான லயத்தில் இயங்குபவர்கள் என்று அர்த்தம். அஷ்டாவக்ரர் அவர்களுடைய சிறப்பியல்பு களாக மேலும் நான்கு தன்மைகள் தெரிவிக்கிறார்.

***சூன்யாகாரரர்***: ஞானிகள் தங்கள் உட்புறத்தில் சூனியமாக, வெறுமையாக, காலியாக இருப்பார்கள். அவர்கள் வெளியே எப்படி உணர்ச்சிகளை வெளியிடினும் அவர்களின் உள்மனம் வெற்றிடமாக இருக்கும்.

ஞானி குர்ஜியேஃபின் சீடர்கள் அவருக்குக் கோபம் வரும்போது புயல்போல் சீறுவார் என்றும், எல்லாவற்றையும் அழித்துவிடுவதுபோல் ஆவேசப்படுவார் என்றும் கூறியுள்ளனர். சில விநாடிகளிலேயே, புயல் கடந்து சென்றுவிட்டதைப்போல், கோபமே வராதவர் போல் அவர் காட்சி தருவார் என்று அதிசயித்துள்ளனர்.

குர்ஜியேஃப் அதிசயமான நடிகர் போலவும் விளங்கினார். அவர் எதிரே இரண்டு பேர் உட்கார்ந்தால் குர்ஜியேஃப் ஒரு கண்ணில் கோபமும், இன்னொரு கண்ணில் அன்பும் வெளிப் படுத்தக் கூடியவராக இருந்தார். அந்த இருவரும் வெளியே சென்று இந்த மனிதர் நல்லவரா, கெட்டவரோ என்று வாத விவாதம் செய்வார்கள். ஒருவன் அவரை ஆபத்தான ஆள் என்றும், கொலையும் செய்யக்கூடியவர் என்றும் கூறுவான். இன்னொருவன் அதை மறுத்து அவரது பார்வையில் அன்பு மழை பொழிகிறது என்று பாடுவார்.

ஒரு மனிதர் ஒரே சமயத்தில் ஒவ்வொரு கண்ணில் எதிரெதிரான உணர்ச்சிகளை வெளிப்படுத்துவது சாத்தியமில்லை என்று நீ வாதிடுவாய். ஆனால் இது நடக்கக்கூடிய காரியம்தான். ஏனெனில் மனிதனுக்கு இரண்டு மூளைகள் உள்ளன. ஒவ்வொன்றின் உபயோகமும் வெவ்வேறானது. வலது கண் இடது மூளையுடனும், இடது கண் வலது மூளையுடனும் சம்பந்த முடையது.

மனிதன் ஒரு சமயம் ஒரு மூளையைத்தான் பயன் படுத்துவதால் இன்னொன்று சோம்பேறியாகக் கிடக்கிறது.

ஒரேசமயம் இரண்டு மூளையும் செயல்பட்டால் நமது ஆற்றல் இரு மடங்காக வெளிப்படும். இதுவரை பாதி மனிதனாக வாழ்ந்தவன் முழு மனிதனாகச் செயல்படத் தொடங்குவான்.

குர்ஜியேஃப் விசித்திரமான ஞானி. அவர் மூளைக் கோளாறு உள்ளவர்போல் சில சமயம் நடந்து கொள்வார். அவரோடு ஒருமுறை ரயில் பயணம் செய்த சீடர் அவரது கோமாளித்தனமான நடத்தையால் பலத்த சங்கடத்துக்கு ஆளானார். இனிமேல் குர்ஜியேஃபுடன் சேர்ந்து எங்கும் பயணிக்கக்கூடாது என்ற முடிவிற்கு வந்தார். குர்ஜியேஃப் அவ்வளவு உபத்திரவம் கொடுத்தாராம்.

முதலில், ரயில் ஏறும் முன்பே ஸ்டேஷனில் அவர் போட்ட சத்தம் கேட்டுக் கூட்டம் திரண்டுவிட்டது. இதனால் ரயில் 10 நிமிடம் தாமதமாகப் புறப்பட நேர்ந்தது. வண்டியில் அவர் சிகரெட் பிடிக்கத் தொடங்கினார். புகை பிடிக்கக்கூடாது என்ற எச்சரிக்கை அறிவிப்புகளை அவர் அலட்சியம் செய்தார். இரவு 2 மணிக்கு அவர் மீண்டும் கூச்சல் போடத் தொடங்கினார். தூங்கிக் கொண்டிருந்த பயணிகள் திடுக்கிட்டு அவருடன் தகராறு செய்தனர். இது பற்றி அறிந்த என்ஜின் டிரைவர் வண்டி நிற்காத ஸ்டேஷன் ஆயினும் அடுத்த ஸ்டேஷனில் நிறுத்தினார். அந்த கூச்சல் போடும் ஆசாமியை விரட்டியடிக்காத வரையிலும் வண்டியைக் கிளப்பமாட்டேன் என்று அறிவித்தார். சீடரோ குருவை அடக்க முடியாமல் தவித்தார். அவர் கைகூப்பி டிரைவரிடம், “நாங்கள் எப்படியும் அடுத்த ஸ்டேஷனில் இறங்க வேண்டியவர்கள்தாம், அதுவரை தயவு செய்து ரயிலை ஓட்டவும்,” என்று கெஞ்சினார்.

அடுத்த ஸ்டேஷனில் இறங்கி இருவரும் காரில் அமர்ந்தபின் குரு பலமாகச் சிரித்தார். “சொல்லுப்பா, நம்ம நாடகம் எப்படி இருந்திச்சு?” என்று சீடரைக் கேட்டார்.

அந்தச் சீடர் சாதாரணமானவர் அல்லர். பெரிய பத்திரிகை யாளரும் எழுத்தாளரும் ஆவார். அப்பகுதி மக்களுக்கு அவர் அறிமுகமானவர். அவரை குரு எல்லோர் முன்னிலையிலும் கெஞ்சிக் கதறவைத்து விட்டார். ஆனால் அந்த எழுத்தாளர் இந்த சம்பவத்தைக் கூறிய பின், “அன்றைக்குப் பின் என் வாழ்வில்

பலத்த மாறுதல் ஏற்பட்டது. சம்பவத்துக்கு மறுநாள் விழித்து எழுந்தபோது என் உடலில் பாரமே இல்லாததுபோல் உணர்ந்தேன். மனத்திலிருந்தும் மலையளவு பாரம் இறங்கிவிட்டதுபோல் இருந்தது உடலும் மனம இலேசாகிவிட்டது போல் தோன்றியது." என்கிறார்.

சூன்யாகாரா— அவனது வெளியுலக நடவடிக்கைகள் எப்படியிருப்பினும் உள்ளே வெற்றிடமாக இருப்பான்.

நிராகாரா— வெளியுலகில் எத்தனை வேஷங்களை அபிநயித்தாலும் உள்ளே உருவமின்றி இருப்பான்.

நிர்விகாரா— அவன் அவமானமாக இருந்தாலும் அதனால் பாதிக்கப்பட்டு மாறுதலடைய மாட்டான்.

நிராமயா— நீ அவனை எந்த நிலையில் பார்த்தாலும் அவன் வருத்தம் எதுவுமின்றியே இருப்பான்.

குர்ஜியேஃப் காரை வேகமாக ஓட்டுவது வழக்கம். இதனால் ஒருமுறை விபத்துக்குள்ளாகி அவரைக் காரிலிருந்து மீட்பதற்கே ஒன்றரை மணி நேரமாயிற்று. உடல் பல இடங்களில் நசுங்கி விட்டது. ஆனால் அவர் நன்னினைவில் இருந்தார். மீட்க வந்தவர்களுக்கு வழிமுறை கூறலானார்! காரிலிருந்து வெளியே எடுத்தபின் அவர் உடலில் எங்கெல்லாம் கட்டு (பாண்டேஜ்) போடவேண்டும் என்றும் தெரிவித்தார். விபத்து நடந்து 36 மணி நேரம் கழித்துதான் அவரை மருத்துவமனைக்குக் கொண்டு வந்தார்கள். அவர் உயிருடன் இருப்பது மருத்துவர்களுக்கு அதிசயமாக இருந்தது. அவரது மூளையிலும் நுரையீரலிலும் ரத்தம் பரவியிருந்தது. இந்நிலையில் ஒருவர் உயிருடன் இருப்பது என்பது முடியாத காரியம். அது மட்டுமல்ல, குர்ஜியேஃப் மயக்கமடையவில்லை. மருத்துவர்களிடம் அவரால் பேசவும் முடிந்தது. இதையும் அவர்களால் நம்பமுடியவில்லை. அவர் பிழைத்தது மட்டுமல்ல, அவர் எந்த மருந்தும் உட்கொள்ள வில்லை; ஊசி போட்டுக் கொள்ளவில்லை. அமைதிப்படுத்தும் மருந்தும் (ட்ரேங்வேலாயிஸர்) எடுத்துக் கொள்ளவில்லை.

மறுநாளிலிருந்து அவர் ஸ்ட்ரெட்சரில் படுத்திருந்தபடியே தன் சீடர்களுக்கு உபதேசம் செய்வதைத் தொடர்ந்தார். மூன்று வாரங்களில் முழுமையாக குணம் பெற்று நடக்கத் தொடங்கி விட்டார்.

அவர் பல ஆண்டுகளுக்குப் பின்னர்தான் இறந்தார். அந்த சமயம் அவரது முதன்மைச் சீடரான பென்னட் என்பவர் வந்துசேர முடியவில்லை. அவர் வெளிநாட்டில் இருந்தார். குர்ஜியேஃபுக்கு தான் இறக்கப்போகும் நேரம் முன்னதாகவே தெரியும். சீடருக்குச் செய்தி அனுப்பப்பட்டது. விமானம் தாமதமானதால் குரு இறக்கும் சமயம் பென்னட் அங்கில்லை. அவர் வந்து சேர்ந்தபோது குரு இறந்து சிலமணி நேரமாகிவிட்டது.*

குர்ஜியேஃபின் உடல் ஒரு மாதா கோயிலில் வைக்கப் பட்டிருந்தது. அங்கே பென்னட் சென்றபோது நள்ளிரவு. அங்கு யாருமில்லை. மற்ற சீடர்கள் ஓய்வெடுக்கச் சென்றிருந்தனர். பென்னட்டுக்கு குரு உயிரோடு இருப்பதாகத் திகைப்பேற்பட்டது. அவர் ஒரு விஞ்ஞானி, கணிதப் பேராசிரியர். மூடநம்பிக்கைகள் அற்றவர். அவர் குனிந்து குருவின் நெஞ்சில் காதுவைத்துக் கேட்டார். குரு மூச்சுவிடுவதுபோல் தோன்றியது. அவர் பயந்துவிட்டார். இறந்து சில மணி நேரமான பின்பும் குரு விளையாட்டாக ஏதோ செய்கிறாரா என்று புரியவில்லை.

பயத்தால் அவர் சட்டென்று வெளியேறிவிட்டார். ஒருவேளை தான் நினைத்தது பிரமையாக இருக்கலாம் என்று கருதி அவர் மீண்டும் உள்ளே சென்றார். தன் மூச்சொலியைத் தான் கேட்டோமோ என்று யோசித்து இம்முறை மூச்சை அடக்கிக் கவனித்தார். அப்படியும் குர்ஜியேஃபின் உடலிலிருந்து மூச்சொலி கேட்கத்தான் செய்தது. இதனால், பிறகு அவரது உடல் அடக்கம் செய்யப்பட்ட பிறகும் சீடர்கள் ஏதோ வகையில் அவர் இன்னமும் இருப்பதுபோன்றே உணர்கின்றனர்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

---

* ஸ்ரீராகவேந்திரரின் பிரிய சீடரான அப்பண்ணா குரு சமாதியடையும் சமயம் வந்துசேர முடியாதபடி நதிவெள்ளம் குறுக்கிட்டது. ஸ்ரீபூர்ணபோத குரு தீர்த்த என்ற பாடலைப் பாடியபடி வெள்ளத்தில் இறங்கி சமாதிக்கு வந்தபோது கடைசிப் பலகை மூடப்பட்டுவிட்டது. எனினும் சமாதியிலிருந்து 'அப்பண்ணா பாடியது சத்தியம்' என்று ஒலி பிறந்தது.

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஜே.கிருஷ்ணமூர்த்தியை பரமஞானி என்கிறோம். அப்படியிருந்தும் அவர் மற்ற சத்குருக்களிடம் ஏன் குறை காண்கிறார்? அவர்களை ஏன் விமர்சிக்கிறார்.**

**நீ**யும் ஒரு பரமஞானியாகும் வரையில் இந்தப் புதிரைப் புரிந்துகொள்ள முடியாது. ஏசுதல், விமர்சித்தல் என்பவை அஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்டால்தான் நிகழ்கின்றன. ஞானத்தின் அடிப்படையிலான விமர்சனம் கருணையின் காரண மாக வெளிப்படுகிறது. விமர்சனத்தை மட்டும் கவனிக்காமல், கூறுபவர் யார் என்றும், எத்தகைய மனவுணர்வுடன் கூறுகிறார் என்றும் பார்க்க வேண்டும்.

கிருஷ்ணமூர்த்தி விமர்சித்தார் என்பது புதிய நிகழ்ச்சி யில்லை. புத்தர், மகாவீரர், கன்பூஷியஸ், இயேசுநாதர் ஆகியோரும் பிற குருமார்களைக் குறைகூறியுள்ளனர். இவர்களில் இயேசுநாதர் தமது கடுமையான விமர்சனத்துக்காகச் சிலுவையில் அறையப்பட்டு உயிரிழக்க நேர்ந்தது.

ஆனால் நீ உன் கோணத்திலிருந்து பார்க்கும்போது சத்குருக்கள் ஒருவரையொருவர் குறைகூறக் கூடாது என்று நீ நினைப்பதன் நியாயம் புரிகிறது. ஆனால் நீ பிறரைக் குறைகூறுகையில் அதன் அடிப்படை வேறு என்பது உனக்கு நினைவில் இல்லை. நீ கண்டிப்பது இன்னொரு மனிதரை அவர்கள் கண்டிப்பது கொள்கையை. ஒரு சம்பிரதாய குரு இன்னொரு சம்பிரதாய குருவுக்கும் மரியாதை தருவார். அவரது தத்துவக் கோட்பாட்டை மட்டும் எதிர்ப்பார்.

அரசியலிலும் இப்படித்தான் நிகழ்கிறது. ஒரு தலைவர் இன்னொரு தலைவரைத் தாக்கிப் பேசுகிறார். உண்மையில் இன்னொரு தலைவரின் (கட்சியின்) கொள்கையைத்தான் தாக்குகிறார். சமூக வாழ்க்கையில் அவர்கள் நெருங்கிய நண்பர்களாகவும் கூட இருப்பார்கள். நீ சத்குருவின் அடிப்படை தெரியாமல் குழம்புவதுபோல், கட்சித் தொண்டர்களும் ஏமாறுகிறார்கள்.

மகாத்மா காந்தி வேறு வழியை மேற்கொண்டார். அது சமரசப் பாதை. அவர் எல்லாமே சரியென்றார். புனித குர்ஆன், இந்து புராணங்கள், மகாவீரர், கிருஷ்ணர் என்று எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டார். அவர் அரசியல்வாதி. அவருக்கு எல்லா மதத்தினரின் ஒத்துழைப்பும் தேவைப்பட்டது. ஆகவே அவர் எந்த மதத்தையும், மதங்களின் நிறுவனர்களையும், மதங்களின் கோட்பாடுகளையும் குறைகூறியதில்லை. கிருஷ்ணமூர்த்தி போன்ற ஞானிக்கு அந்தக் கட்டாயமில்லை. அவர் சுதந்திரமாக எந்தக் கோட்பாட்டிலுமுள்ள குறைகளையும் எடுத்துச் சொல்ல முடிந்தது.

உதாரணமாக, கிருஷ்ணரின் தத்துவத்திற்கும், மகாவீரரின் கொள்கைக்குமிடையே ஒற்றுமை கிடையாது. அவர்கள் இறை அனுபவங்கள் பெற்றவிதம் வேறு-வேறாக இருந்திருக்கும். தங்கள் அனுபவத்தைக் கொள்கையாக வெளியிடும்போது இரண்டு மதங்கள் தோன்றிவிடுகின்றன. அவை முரண்படவும் செய்கின்றன.

மகாவீரர் சொல்கிறார், ‘எவருடைய பாதங்களையும் சரணம் என்று பற்றிக் கொள்ளாதே.’ அவர் எவர் காலிலும் விழாமல் சத்ய அனுபவம் பெற்றதால் அப்படிக் கூறுகிறார். எது எப்படிக் கிடைத்ததோ அதை அப்படியே சொல்வதுதான் சான்றோருக்கு அழகு. அதை மறைத்து, அதற்கு மாறாகச் சொல்வது கூடாது.

கிருஷ்ணர் சொல்கிறார், ‘ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ’* அதாவது, எல்லா தருமங்களையும் விட்டொழித்து என் ஒருவனையே சரண் புகுவாய்’ என்கிறார். கிருஷ்ணர் அவ்வாறு சமர்ப்பண-சர்ணாகதி மூலமே தெய்விக அனுபவம் பெற்றிருப்பார்.

---

* பகவத்கீதை 18:66

கிருஷ்ணர் தான் அறிந்த விதமாகவே கூறினார். மகாவீரர் தான் அறிந்த விதமாகவே மொழிந்தார். ஒருவரது கொள்கையை மற்றவர் ஏற்க வாய்ப்பில்லை. கருத்தொற்றுமை இருந்தால் இரண்டு மதங்கள் தோன்ற வாய்ப்பில்லை. கிருஷ்ணர் கூறுவதும் சரி என்று மகாவீரர் கூறினால், மகாவீரர் சொல்வதும் சரி என்று கிருஷ்ணர் கூறினால் பக்தர் அல்லது சீடரின்பாடு திண்டாட்டமாகி விடும்.

இதன் விளைவாக, கிருஷ்ணரின் கண்ணோட்டம் பிடித்திருப்பவர்கள் கிருஷ்ண பக்தி மார்க்கத்தில் செல்வார்கள். மகாவீரரின் கண்ணோட்டம் பிடித்திருப்பவர்கள் சமண மதத்தில் சேருவார்கள். பக்தர்கள் அல்லது சீடர்கள் குழப்பமடைந்து திண்டாடக்கூடாது என்பதற்காக ஒவ்வொரு மத ஸ்தாபகரும் 'நானே சத்தியம், நானே வழி' என்று அடித்துச் சொல்கிறார்கள். எல்லாமே சரி என்றும், சமம் என்றும் சொன்னால் யாரும் எதையும் பின்பற்ற மாட்டார்கள்.

ஒவ்வொரு மதங்களையும் தீவிரமாகப் பின்பற்றுபவர்கள் உள்ளனர். ஏனெனில் அவர்கள் குறிப்பிட்ட சத்குரு தன் கொள்கையே சரி என்று கூறியதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுள்ளார். மகாத்மா காந்தியை இப்போதும் பின்பற்று பவர்கள் மிகக் குறைவு. அவர் தனியாக மத அமைப்பைத் தொடங்காமல் எம்மதமும் சம்மதம் என்றார். இதனால் அவரைப் பின்பற்றியவர்கள் அவரவர் மதத்திலேயே நீடித்தனர். காந்தியடிகள் இறந்ததும் எல்லோரும் அவர் காட்டிய வழியைக் கைவிட்டனர். 'நான் சொல்வதே சரி' என்று அவர் வலியுறுத்தி அறிவித்திருந்தால் காந்தியம் என்று புது மதம் தோன்றி இன்று பலர் அதைப் பின்பற்றுபவர்களாயிருப்பர். தற்போது காந்தியம் என்பது தினசரி வாழ்க்கையின் சில அம்சங்களுடன் மட்டுமே பின்பற்றப்படுகிறது.

ஓர் ஊருக்குப் போக, ஒரு லட்சியத்தை அடைய எல்லா வழிகளுமே சரியென்றால் சராசரி மனிதன் திகைப்படைவான். எதைப் பின்பற்றுவது, எங்கு போவது என்று அவன் குழம்புவான். ஒரே ஊருக்கு திசைகாட்டும் கம்பம் நாலு வழிகளைக் காண்பித்தால் நாம் திணறிப் போவோம்.

மத நிறுவனர் என்ன சொல்வார்? 'இந்தப் பல வழிகளில் நிச்சயமாக ஒரு வழி சரி. ஏனென்றால் நான் அவ்வழியே சென்று இலக்கை அடைந்திருக்கிறேன். இது எனக்குப் பழக்கமான பாதை. மற்ற பாதைகள் பற்றி நான் அறியேன். அவற்றில் நான் சென்றதில்லை. ஆகையால் என் பாதையைத்தான் நான் எல்லோருக்கும் சிபாரிசு செய்வேன்" என்பார்.

உலகில் முன்னூறு மதங்கள் உள்ளன. அவற்றை நிறுவியவர்கள் தங்கள் தனிப்பட்ட வழியில் சென்று இலக்கை அடைந்ததாகக் கூறுகின்றனர். எனவே 300 வழிகளைக் காட்டும் கம்பத்தை அடைந்தபின் மக்கள் ஏதாவது ஒரு வழியை மட்டும் பின்பற்றலாம். அவரவர்க்குப் பிடித்த கொள்கையைப் பின்பற்றலாம். மற்ற பாதைகளில் சென்று பார்த்திராததால் மீதி 299 வழிகளும் விமர்சனத்துக்கு உள்ளாவது இயற்கைதான். இவ்வாறு சத்குருக்கள் தத்தம் வழி தவிர பிறவற்றில் குறை கண்டாலும் ஒருவரையொருவர் தரக்குறைவாக ஏசியதில்லை. கபீர்தாசரும் குரு நானக்கும் பிற சம்பிரதாயங்களின் கொள்கைகளைத்தான் சாடியிருக்கிறார்கள். அவர்கள் தனிநபர் ஏசுதலில் ஈடுபடவில்லை. எனவே விமர்சனமும் ஏசுதலும் ஒன்றல்ல. கிருஷ்ணமூர்த்தி பிறர் சித்தாந்தத்தை விமரிசிக்க மட்டுமே செய்தார்.

கிருஷ்ணமூர்த்தி விமர்சனம் செய்கிறார் என்பது பற்றி உனக்கென்ன கவலை? அவருடன் உனக்கென்ன கொடுக்கல்-வாங்கல்? உனக்கு எந்த சத்குருவின் வழி பிடித்திருக்கிறதோ அதில் முன்னேறிச் செல். நீ தப்பிக்க உபாயம் தேடுகிறாய். 'கிருஷ்ணமூர்த்தி சத்குருவாக இருந்தும் பிறரை விமர்சிக்கிறார். ஆகவே அவர் பின்பற்றத் தகுந்தவர் அல்லர். அதே சமயம் அவர் மாபெரும் ஞானியானதால் அவரது விமரிசனத்திற்கு அடிப்படை இருக்கும். ஆகவே மற்ற சத்குருக்களும் பின்பற்றத் தகுந்தவர் அல்லர் என முடிவெடுக்கிறாய். இதன் பலனாக நீ குருவே இல்லாமல், எவ்வழியும் போகாமல் திசைகாட்டிக் கம்பத்தின் கீழேயே கிடக்கிறாய்.

அஷ்டாவக்ரரைப் போல் தீவிர விமர்சகரைப் பார்க்க முடியாது. அவர் தியானம், யோகம், சமாதி, தியாகம், தவம், ஜபம், சந்நியாசம், சுவர்க்கம், மோட்சம் எல்லாவற்றையும் கத்தி போன்ற கூர்மையான சொற்களால் வெட்டித் தள்ளுகிறார். சத்குருக்கள்

விமர்சனம் செய்யமாட்டார்கள் அல்லது செய்யக்கூடாது என்ற கருத்தை முதலில் கைவிடு. ஆன்மிகத்தின் வரலாற்றில் விமரிசனம் செய்யாத சத்குருவும் இருந்ததில்லை. விமரிசனத்துக்கு ஆளாகாத சத்குருவும் இருந்ததில்லை. புத்தரும் மகாவீரரும் ஏறத்தாழ சமகாலத்தவர். அவர்கள் ஒருவர் மற்றொருவரின் கொள்கைகளை விமர்சிக்கத் தயங்கியதில்லை.

எல்லா சத்குருக்களும் போய்ச்சேரும் இடம் ஒன்றேதான். வழிகள்தான் பலப்பல. சத்குரு விமரிசிப்பது தன் வழியல்லாத பிற வழிகளைத்தானே தவிர, பிற சத்குருக்களை அல்ல.

சத்தியத்தை எத்தனையோ கோணங்களிலிருந்து பார்க்கலாம். அதைப் பார்க்க பரம்பரை வழி தலைமுறைகளைக் கடந்து நீடிக்கிறது. இது சாஸ்திரங்களில் தொகுக்கப்பட்டு சம்பிரதாயம் என்று கூறப்படுகிறது. இன்னொரு கோணத்தில் சத்தியம் சுய அனுபவத்தின் அடிப்படையில் உணரப்படுகிறது. இந்த இருவகையிலும் சத்குருக்கள் தோன்றியுள்ளனர்.

மகாவீரர் அவருக்கு முற்பட்ட காலத்தவர்களான 23 தீர்த்தங்கரர்கள் (புனிதர்கள்) அமைத்துக் கொடுத்த வழியில் சத்திய தரிசனம் பெற்றார். புத்தர் புதிய பரம்பரையைத் தோற்றுவித்தார். அவரது மொழி புதுமையான நடையில் இருந்தது. மகாவீரரின் மொழிநடை பழைமையானது, பரம்பரையாக வந்த மொழி. அவரவர் அனுபவம்தான் முக்கியமே தவிர அது சித்தாந்தமாக வெவ்வேறு மொழிநடையில் வெளியாவது முக்கியமில்லை. ஒருவர் தனது புதிய சத்தியத்தின் அனுபவத்தை பரம்பரை வார்ப்பில் பதிவு செய்கிறார். இன்னொருவர் தனது புதிய சத்திய அனுபவத்தை வெளியிட புதிய பாணியை உருவாக்குகிறார். இவ்வாறு புதிய மரபை நிலைநாட்டுகிறார். பரம்பரை நோக்கு மகாவீரருக்குப் பின்னாலும், புத்தருக்கு எதிர்காலத்திலும் அமைந்தது. மரபு என்பது தவிர்க்க முடியாதது. மரபை எதிர்த்து நடக்கும் புரட்சியும் புதிய மரபு ஒன்றை ஆரம்பித்து வைக்கிறது.

கிருஷ்ணமூர்த்தி புதிய முறையில், புதிய பாணியில் உபதேசம் செய்தார். ரமணர் பழைய பாணியையே தேர்ந் தெடுத்தார். பாணியைத் தேர்ந்தெடுப்பது அவரவர் இஷ்டம். ரமணரும் ஆழமான தத்துவங்கள் கூறினார். ஆனால் பழைய மொழிநடையைப் பயன்படுத்தினார். பழைய சொற்களின்மீது

படிந்திருந்த சாம்பலை அகற்றினார். மீண்டும் தணல் தகதகத்தது. காலப்போக்கில் அதன்மீது சாம்பல் படிந்து மூடியது. கிருஷ்ண மூர்த்தி வந்தார். சாம்பலை ஊதியகற்றி தணல் எரியச் செய்தார்.

நாற்பது ஆண்டுகள் அவர் உபதேசம் செய்தார். அவரைப் பின்பற்றியவர்கள் காலப்போக்கில் சுயசிந்தனையின்றி அவருடைய சொற்களை மட்டும் திரும்பிக் கூறுபவர்களாயினர். சாம்பல் படிய ஆரம்பித்தது. கிருஷ்ணமூர்த்தி கூறியவை ஒரு சம்பிரதாயமாக மாறியது. அவர், 'நான் குரு இல்லை. நீங்கள் என் சீடர்களில்லை' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். மக்கள் கேட்டால்தானே. அவர்கள் தங்கள் பழக்கத்தை மாற்றிக்கொள்ள முடியவில்லை. குரு-சீடர் உறவை அவர்களால் கைவிட முடியவில்லை.

கிருஷ்ணமூர்த்தியின் உபதேசம். ஓர் ஆன்மிகப் புரட்சியாகும். ஆனால் ஒரு காலத்தில் அஷ்டாவக்ரர், கிருஷ்ணர், புத்தர் கூறியவையும் ஆன்மிகத்தில் புரட்சிகரமான சிந்தனையைத் தூண்டின. ஆனால் கால ஓட்டத்தில் புரட்சிக்கனல் மங்கி அவையும் சம்பிரதாயங்களாக எல்லைக்குட்படுத்தப்பட்டு விட்டன. இந்த ஆன்மிகத் தலைவர்களில் எவரும் தங்கள் உபதேசம் சம்பிரதாயங்களாக வேண்டும், புதிய மதமாக வேண்டும் என்று எதிர்பார்த்தவர்களில்லை. சம்பிரதாயம் உருவானதும் அதற்கான சாஸ்திரங்களும் எழுதப்பட்டு விடுகின்றன. சுயசிந்தனைக்கு இடமில்லாமல் போகிறது.

அந்த புனிதர்களால் உபதேசம் செய்யாதிருக்கவும் முடியவில்லை. தமக்குக் கிடைத்ததைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதை அவர்கள் தங்கள் மூலக் கடமையாக நினைத்தார்கள். உள்ளே நடைபெற்றது வெளியில் பரவுவதை விரும்புகிறது. மேகம் திரண்டால் மழை; பூ மலர்ந்தால் மணம் என்பதுபோல் மனம் ஆன்மிகத்தால் நிரம்பினால் அருள்வாக்கு வெளிப்படுவதைத் தடுக்க முடியாது.

புத்தரின் கொள்கைகளுக்கும் மகாவீரரின் கொள்கை களுக்கும் இடையே நடந்த மோதலால் பிற்காலத்தில் நன்மையே விளைந்தது. மகாவீரரும் புத்தரும் ஒருவரின் கொள்கைகளை மற்றவர் விமர்சித்ததால் இருவரின் சம்பிரதாயங்களும் கூர்மையும்

துல்லியமும் பெற முடிந்தது. பரஸ்பர விமரிசனம் சாணைக்கல் போல் உதவியது.

சத்குருக்கள் திறந்த கதவுகள் போன்றவர்கள். ஒரு சத்குரு தன்னிடம் சிலர் வரவேண்டுமென நினைத்தால் மற்ற கதவுகளைக் குறை கூற வேண்டிய நிலையிலுள்ளார். அவர் மக்களை, "எங்கே பராக்கு பார்க்கிறீர்கள். இதோ என் கதவு திறந்திருக்கிறது. உங்களுக்கு நல்வரவு." என்று அழைக்க வேண்டியுள்ளது. இதற்காக. அவர் மற்ற கதவுகளைக் குறை கூறவேண்டியுள்ளது.

நான் ஒரு கதவைத் திறக்கிறேன். அப்பால் நிற்பவர்கள் இந்து. முஸ்லிம், கிறிஸ்தவர், ஜைனர் என்றெல்லாம் இருக்கலாம். இப்படி எல்லாரும் பிரிந்து நிற்கின்றனர். இவர்களை எப்படி உள்ளே கூப்பிடுவது? 'நீங்கள் நிற்கின்ற இடம் சரியானதுதான். அங்கேயே நிலைத்திருங்கள்," என்று நான் கூறினால் என் கதவு உபயோகப்படுத்தப் படாமல் தூசி படிந்துவிடும். அவர்கள் நிற்கின்ற இடங்களும் (சம்பிரதாயங்களும்) மக்கிப் போயுள்ளன. ஆனால் தலைமுறைகளாக, பரம்பரையாக நின்ற இடத்தை (மதத்தை) விட்டு அவர்களால் அகல முடிவதில்லை.

நான் என்னிடம் வருமாறு. மக்களை அழைக்க வேண்டுமாயின் இவர்கள் நிற்கின்ற இடத்திலிருந்து சத்திய தரிசனம் கிடைக்காது என்று சொல்லத்தான் நேரிடும். 'என்னிடம் வந்து ஆன்மிகத் தாகத்தைப் போக்கிக் கொள்ளுங்கள். திருப்தி பெறுங்கள்' என்று வாக்களிக்க நேரிடும்.

ஆனால் விரைவிலேயே நான் சுட்டிக்காட்டிய எனது பூமியிலும் தூசி படிந்துவிடும். என்னிடம் நீ என் பாதையைத் தேர்ந்தெடுத்து வந்தாய். அப்போது அதில் உயிரோட்டம் இருந்தது. ஆனால் உனக்குப் பின்னால் வரும் தலைமுறையினர் நீ என் வழியைத் தேர்ந்தெடுத்தாய் என்ற காரணத்திற்காக எனது சம்பிரதாயத்தில் நீடிப்பார்கள்.

நீ என்னிடம் வர தியாகம் செய்தாய். நீ இந்து. நீ முஸ்லிம் போன்ற லேபிள்களைத் துணிந்து அகற்றினாய். வாழ்க்கையின் சில செளகரியங்களை விட்டுக் கொடுத்தாய். இதுவரை பின்பற்றிய சாஸ்திரத்தைக் குப்பையில் எறிந்தாய். உனது பழைய மதம் உனக்கு அணிவித்த பாதுகாப்புக் கவசத்தைக் கழற்றிவைத்தாய்.

முன்பின் தெரியாத புதிய உலகில் காலடி எடுத்துவைத்தாய். நீ செய்தது புரட்சி.

ஆனால் உனக்குப் பின்னால் வருபவர்கள் சுயசிந்தனை யின்றி உன்னைக் காரணம் காட்டி என் வழியைப் பின்பற்றுவார்கள். நான் உலகைவிட்டு நீங்கிய பின்பும் என் சம்பிரதாயம் நீடிக்கும். ஆனால் அதில் பாசி படர்ந்திருக்கும். அப்படியும் விடாப்பிடியாக என் சம்பிரதாயத்தில் சிலர் பழக்க தோஷம் காரணமாக நீடிப்பார்கள். என் சம்பிரதாயத்துக்கென்று புரோகிதர்கள் ஏற்பட்டு விடுவார்கள். சாஸ்திரங்கள் எழுதப்பட்டுவிடும். இந்தக் கட்டுப்பாடுகள் என் சம்பிரதாயம் வளர்வதையும் மலர்ச்சி பெறுவதையும் தடுத்துவிடும்.

இதனால் சில ஆண்டுகளுக்குப் பிறகு ஓஷோ சம்பிரதாயத்தையும் குறைகூறி புதிய வாசல் திறக்கும், மக்களுக்கு அதில் பிரவேசிக்க அழைப்பு விடுக்கப்படும். இப்போது சிலரே என்னை நிந்திக்கின்றனர். அந்தப் புதிய வாசல் திறக்கும்போது எனது வாசலைப் பழைமையானது, பாசி படிந்தது என்று நிந்திப்போரின் எண்ணிக்கை பன்மடங்காகிவிடும்.

பழைமைக்கு சமூகத்தில் மதிப்புண்டு, தனி இடமுண்டு. நீண்ட காலமாக நடைபெற்று வரும் மருந்துக்கடை, பலசரக்குக் கடை முதலியவை தமது பாரம்பரியப் பெருமையின் அடிப்படையில் மக்களின் ஆதரவு பெற்று விளங்குகின்றன. கிருஷ்ணமூர்த்திக்கும் எனக்கும் அப்படிப் பாரம்பரியப் பின்னணி, பரம்பரை ஆதரவு கிடையாது. நாங்கள் சத்தம் போட்டுத் தான் எங்கள் கடைக்கு மக்களை அழைக்க வேண்டியுள்ளது. அப்பொழுது மற்ற கடைகளைக் குறை கூறுவதைத் தவிர்க்க முடிவதில்லை. ஆகவே மற்ற கடைக்காரர்களுக்கு (மதங்களின் சத்குருக்களுக்கு) எங்கள் மீது இயல்பாகவே கோபம் வருகிறது.

நீ யோசிக்கத் தொடங்குகிறாய். எந்தத் துறவியை இந்துமதம், இஸ்லாம், கிறிஸ்தவம், யூதம், சமணம் முதலிய மதங்களின் தலைவர்கள் எதிர்க்கிறார்களோ அந்தத் துறவி காட்டும் வழி எப்படிச் சரியானதாக இருக்க முடியும் என்ற சந்தேகம் எழலாம். ஆனால் இந்த எதிர்ப்பையே உரைகல்லாக வைத்துக்கொள். பழைய கடைக்காரர்கள் ஒன்றுசேர்ந்து புதிதாகத்

திறக்கப்பட்ட கடையைப் பழித்தால் அப்பொழுது அந்தக் கடையில் நிச்சயமாக ஏதோ விசேஷம் இருக்கும். இல்லாவிடில் ஏன் அத்தனை பேரும் விரோதிக்க வேண்டும்?

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! இரண்டு சத்குருக்கள் ஒருவரை ஒருவர் ஏசினால், ஒருவரை யொருவர் விமர்சித்தால், சீடர்கள் அதை என்னவென்று புரிந்துகொள்வது?**

**நீ** சீடனாயின் உனது இதயத்துடன் ஒத்துப்போகின்ற குருவைத் தேர்ந்தெடுத்து அவரைப் பின்பற்றுவாய். அவரை யார் விமரிசித்தார்கள் என்பது குறித்துக் கவலைப்படமாட்டாய். அப்படி விமரிசித்தவருடன் நீ சண்டைக்குப் போகமாட்டாய். எவர் சரி என்று நிர்ணயிக்க உனக்கு என்ன தகுதி உள்ளது? சத்குருக்களை உன்னால் எடைபோட முடியுமா?

நீ பார்வை இழந்தவன் என வைத்துக்கொள்வோம். ஒருவரது கையைப் பிடித்தபடி அவரை நீ பின்பற்றுகிறாய். அப்போது நீ பள்ளத்தில் விழாமலும் எதன் மீதும் தடுக்கிக் கொள்ளாமலும், கீழே விழுந்து கை-காலில் காயம் படாமலும் நடக்க முடிகிறது என்றால் நீ உன் வழிகாட்டிக்குக் கண்பார்வை நன்றாக உள்ளது என்ற முடிவிற்கு வருவாய். நீ சீடன், அவர் குரு என்று வைத்துக்கொண்டால் உனக்கும் பார்வை, ஞானப்பார்வை, கிடைக்கும்.

முழு இதயத்துடன் ஒருவரை சத்குருவாக ஏற்றுக்கொண்டு விட்டால் பிறகு அவரை யார் குறை கூறினாலும் அவரைவிட்டுப் போகமாட்டான். ஆகவே அவன் குருவின் சார்பாகத் தன் கோபத்தைக் காட்ட வேண்டியதில்லை. எனது சீடன் கிருஷ்ணமூர்த்தி தன் பேச்சில் என்னைக் குறைசொன்னாலும் அலட்சியப்படுத்தி விடுவான். அவன் கிருஷ்ணமூர்த்தியின் பேச்சில் புதிய கருத்து கிடைக்கிறதா என்பதை மட்டும் கவனிப்பான். அவன் என்னைவிட்டு விலகிவிடமாட்டான். இதேபோல் கிருஷ்ணமூர்த்தியை இதயத்தில் வைத்துள்ள சீடன் என் பேச்சைக் கேட்க வந்து அதில் நான் அவரைக் குறை

சொன்னாலும் பொருட்படுத்த மாட்டான். அவரைவிட்டு நீங்க மாட்டான். என் பேச்சில் புதிய விஷயம் ஏதாவது கிடைக்கிறதா என்பதை மட்டும் கவனிப்பான். நீ உனக்குரிய சத்குருவைத் தேர்ந்தெடுத்துவிட்டால் பிறகு தடுமாற்றமின்றி அமைதியாகவும் ஆனந்தமாகவும் மற்ற சத்குருக்களின் அறிவுரைகளைக் கேட்பாய். உன் சத்குருவை நீ மாற்றிக்கொள்ள மாட்டாய். ஆனால் மற்ற சத்குருக்களின் பேச்சில் உனக்குப் பயன்படுவதை கிரகித்துக் கொள்வாய்.

தனக்குப் பிடித்தமான சத்குருவை அடைந்த சீடர் மனமுதிர்ச்சியடைந்திருப்பார். அவர் மற்ற எத்தனை சத்குருக்களின் உரை கேட்டாலும் தன் குருவை நீங்கமாட்டார். பக்குவம் பெறாத சீடர்தான் ஒவ்வொரு சத்குருவின் பேச்சுக்கும் மயங்கி இடத்தை, கொள்கையை, குருவை மாற்றுவார்கள்.

உனக்கேற்ற சத்குருவை நீ பார்த்ததும் நீ மறந்துபோயிருந்த முகமும் தோற்றமும் மீண்டும் காட்சியளித்தது போலிருக்கும். அவருடைய கண்களில் உன் கண்கள் தெரியும். அவருடைய குரலில் உனது ஆத்மாவின் சங்கீதம் உனக்குள்ளேயிருந்து கேட்கும். நீ ஆன்மிகத்தில் எந்த அளவு உயர முடியும் என்பதை அவர் எடுத்துக்காட்டுவதுபோல் உனக்குத் தோன்றும்.

இது மூளை அல்லது அறிவு சம்பந்தமான விஷயமன்று. இது இதயத்துடிப்பு எனலாம். அறிவின் அடிப்படையில் நீ ஒருவரிடம் சீடரானால் அப்படியே நீண்ட காலம் நீடிக்கமாட்டாய். உன் குரு கூறுவது உன் அறிவுக்கு ஒத்துவராவிடில் அவரைவிட்டு நீ விலகிவிடுவாய். ஆனால் குருவுடன் இதயபூர்வ மான நெருக்கம் உனக்கு ஏற்பட்டால், அவரிடம் குறைகள் தெரிந்தாலும், அவரைப் பிறர் குறை கூறினாலும், உன் அன்பு மேலும் வலுப்பெறும். நீ அவருடைய கொள்கைகளின் பாது காவலன்போல் விளங்கி மற்றக் கொள்கைகளின் தாக்குதல்களை முறியடிப்பாய்.

ஒரு கட்டத்தில் நீ இல்லாமல் போய்விடுவாய். குரு மட்டுமே மிஞ்சியிருப்பார். உனது ஒவ்வொரு மூச்சுக் காற்றிலும் அவரே நிறைந்திருப்பார். ஆகவே அவரைவிட்டு விலகிச் செல்வது என்ற பேச்சுக்கே இடமில்லை.

சத்தியத்தைச் சென்றடைவதுதான் மிகவும் முக்கியமான விஷயம். நீ எவர் கையைப் பிடித்துக்கொண்டு செல்கிறாய் என்பது இரண்டாம் பட்சம்தான். எப்படியாவது, எவர் மூலமாவது ஊருக்குப் போய்ச் சேர்ந்தால் சரிதான்.

ஒரு சத்குரு இன்னொரு சத்குருவின் கொள்கையில் குறை கூறுவது நல்லதற்குத்தான். தனக்கேற்ற குருவைக் கண்டு கொண்டவன் விமரிசனத்தைப் புறந்தள்ளி ஒரே குருவிடமே நீடிப்பான். விமரிசனத்தால் பாதிக்கப்படும் சீடன் தற்போதுள்ள குருவைவிட்டு நீங்கி வேறு பொருத்தமான குருவைச் சென்றடையும் வாய்ப்புப் பெறுகிறான்.

ஆகவே நீ அலைந்து திரி. பலரது உபதேசம் கேள். அதைப் புரிந்துகொள். அதற்குப் பின் நீ என்னிடம் வந்துசேர்ந்தால் உன் பயணம் நிறைவுபெறுகிறது. ஆனால் மற்றவர்களின் பேச்சு கேட்காமல், என்னைப் பற்றிய விமரிசனத்தைச் செவி மடுக்காமல், எனக்குள்ள எதிர்ப்பைக் கவனிக்காமல் நீ என்னிடம் வந்தால் நீ இங்கே நீடிப்பதும், நீடிக்காமல் போவதும் நிச்சயமில்லை.

### மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நான் அகங்காரத்தை உடைத்தெறிவதற்கு எத்துணை முயற்சி செய்தாலும், அது பேய்ச்சிரிப்புடன் அப்படியே நீடிக்கிறது. இதற்கு மேலும் என்னால் இதனுடன் போராட முடியாது என்று தோன்றுகிறது.**

**அ**கங்காரத்துடன் மோதுமாறு நான் உன்னிடம் சொன்னதே இல்லை. அவ்வாறு மோதாதே என்றுதான் நான் சொல்லுவேன். நீ ஒருபோதும் அதனை வெல்ல முடியாது. நீ அகங்காரத்துடன் மோதுவதாக நினைக்கலாம். ஆனால் அந்த மோதலை நிகழ்த்துவதே உன் அகங்காரம்தான்! அகங்காரம் தன்னையே எப்படித் தோற்கடிக்க முடியும்?

மோதுபவன் யார்? அகங்காரத்தை வெல்ல விரும்புபவன் யார்? அந்த வெற்றி மீது ஆசையேகூட அகங்காரம்தான். முதலில்

நீ உலகை வெல்ல விரும்பினாய். இப்போது ஆத்ம வெற்றி பெற விழைகிறாய். இவ்வாறு வெற்றி குறித்த வெறி நீடிக்கிறது. வென்றே தீருவேன் என்கிறாய்.

அகங்காரத்தை உடைத்தெறிய முயல்வதும் அகங்காரத்தின் இன்னொரு முகப்புதான். ஆகவேதான் பேய்ச்சிரிப்பு தொடர்ந்து கேட்கிறது. அகங்காரத்துடன் முட்டி அதை வெல்ல முடியாது. அதைப் புரிந்துகொண்டால்தான் ஜெயிக்கலாம்.

அகங்காரம் என்பது இருட்டு போன்றது. இருட்டை உதைத்து வெளியே தள்ள முடியாது. கத்தி எடுத்துச் சுழற்றி னாலும் அது வெட்டுப்படாது. அதை விரட்ட ஒரே வழி வெளிச்சத்தை உண்டாக்குவது. இரவில் விளக்கேற்றினால், பகலில் ஜன்னலைத் திறந்துவைத்தால் இருட்டு ஓடிப்போகும். நீ அகங்காரத்துடன் நேரடியாக மோதாமல் தியானம் என்னும் தீபமேற்று. நீ அமைதியாக இருந்து கவனி. தியானம் வலுப் பெற்றதும் அகங்காரம் வலுவிழந்து மறைந்துவிடும்.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! எனது வெளியுலக வாழ்க்கையில் எல்லாமே திருப்திகரமாக அமைந்துள்ளது. ஆனால் ஆழ்மனத்தில் திருப்தியில்லை. ஏதோ விட்ட குறையாகத் தோன்றுகிறது. இன்னும் அறிய முடியாத ஒன்று மிஞ்சியிருப்பதாகத் தோன்றுகிறது. உங்கள் உபதேசம் கேட்டு எனக்குத் தாகம் அதிகரிக்கிறது. மேற்கொண்டு பயணம் செய்ய வேண்டும் என்று தெரிகிறது.**

**இ**து இயல்பானதுதான். நீ வெளியுலகில் கவனத்தைக் கைவிட்டு உள்முகமாகத் திரும்பும்போது இம்மாதிரிதான் இருக் கும். முதலில் வெளியுலகில் உனக்கு அதிருப்தி இருந்தது. பணம் சம்பாதித்தாய். ஆனால் மேன்மேலும் பணம் எதிர்பார்த்தாய். உயர் பதவியில் இருந்தும் அதைவிடப் பெரிய பதவிக்கு ஆசைப்பட்டாய். வீடு இருந்தும் மாளிகை கட்ட விரும்பினாய். பிறகு மனத்தை உள்முகமாகத் திருப்பியதும் வெளியுலகில் உனக்குக் கிடைத்தவையே போதும் என்று நிறைவுகொண்டாய்.

முதலில் மனத்தின் உள்ளே திருப்தி-அதிருப்தி என்று எதுவும் இருக்கவில்லை. அதிருப்தி வெளியுலகத்துடன்தான் சம்பந்தப்பட்டிருந்தது. 'ஆழ்மனத்தில் வசிக்கின்ற நிஜமான என்னை அறிய வேண்டும். கடவுளை அடையாளம் காண வேண்டும். ஆத்மாவைத் தேட வேண்டும். சத்தியத்தை தரிசிக்க வேண்டும். மோட்சம் பெறவேண்டும்' என்றெல்லாம் உன் அதிருப்தியை உள்முகமாகத் திருப்பினாய். காலியாக இருந்த உள்மனத்தில் அது பரவியது.

உலக வாழ்க்கையில் ஆழ்ந்துள்ள மனிதனுக்கு உள் மனத்தளவில் அதிருப்தி ஏற்படுவதில்லை. அவன் ஆத்மா, சத்தியம் ஆகியவை பற்றி விசாரப்படுவதில்லை. ஆத்மா-பரமாத்மா-சத்திய தரிசனம் குறித்துப் பேசுபவர்களைக் கண்டு அவன் திகைக்கிறான். இவர்களுக்கு என்ன ஆயிற்று என்று வியக்கிறான்.

மேற்கே ஜான் விஸ்டம் என்றோர் அறிஞர் தத்துவம், ஆன்மிகம் ஆகியவை குறித்துப் பேசுபவர்கள் மற்றும் ஆராய்பவர்கள் மூளைக் கோளாறு உள்ள மனிதர்கள் என்கிறார்! இவர் பெயரிலேயே விஸ்டம் (விவேகம்) இருந்தும் இப்படி முட்டாள்தனமான கருத்துத் தெரிவித்துள்ளார்.

ஆனால் மக்களில் பலரும் இதே கண்ணோட்டம் கொண்டிருக்கின்றனர். பணத்தைத் துரத்தி ஓடுபவனிடம் ஆத்மாவையும் தேடு என்று சொன்னால் அவன் முறைக்கத்தான் செய்வான். அவன் நம்மைப் பார்த்து 'முதலில் அன்றாட வாழ்க்கைக் கடமைகளை நிறைவேற்று அது போதும். ஆத்மாவைத் தேடும் வேலையை சில கிறுக்குகளுக்கு விட்டு விடு' என்று கூறுவான்.

'நான் கடவுளைத் தேடப்போகிறேன்' என்று நீ அறிவித்தால் பலர் சிரிப்பார்கள். கடவுளை நினைத்து நீ அழவும் தொடங்கினால் உன்னை மனநோய் மருத்துவமனையில் சேர்த்துவிடலாமா என்று குடும்பத்தினர் யோசிப்பார்கள். "தில்லிக்குப் போவேன். அரசியலில் ஈடுபடுவேன். ஒருநாள் ஜனாதிபதியாவேன்" என்று சொன்னால் அப்படி ஆசைப்படுவதில் தப்பில்லை என்று பிறர்

கூறுவார்கள். "கடவுளை எங்கே தேடுவாய்? எப்படித் தேடுவாய்?" என்று உன்னை மடக்குவார்கள்.

வாழ்க்கையின் ஒரு கட்டத்தில் நீ யோசிக்கிறாய். வெளியில் அலைந்தது போதும். பணத்திற்கு மதிப்புக் கொடுத்தேன். பிறகு அது குப்பையெனத் தெரிந்தது. காதலுக்கு அடிமையானேன். பிறகு அது கற்பனையின் வலை, ஒரு கனவு என்று தெரிந்தது. ஆகவே இனி உள்ளே பயணிப்பேன். அதற்காகத் துறவி யாவேன்' என்று திட்டமிடுகிறாய். இந்த உள்முகத் தேடுதலில் வெளியுலகத்தில் செய்ததைவிட மிகவும் கடினமாக உழைக்க நேரிடும். நீ வெளியுலகத்தில் வைத்திருக்கும் கடைக்கு வாடிக்கை யாளர்கள் வருவார்கள். திருப்தி தருவார்கள். நீ உள்ளே விரிக்கும் கடைக்கு நீயே முதலாளி. நீயே வாடிக்கையாளர்.

**எ**ன் தந்தை நடத்திவந்த கடையில் அவரில்லாதபோது நான் சென்று அமர்வேன். பாதுகாப்பாக என் சித்தப்பாவும் வந்து உட்காருவார். அவர் ஒரு கவிஞர். யாராவது வாடிக்கையாளர் வந்தால் அவர் வேறு கடைக்குப் போகச் சொல்லி கையால் திசை காட்டுவார். நான் ஒருநாள் காரணம் கேட்டபோது அவர், "அருமையான கவிதை வரிகள் மனத்தில் இறங்கி வருகின்ற நேரத்தில் இந்த சனியன் பிடித்த ஆள் உப்பு-புளி-மிளகாய் விலை கேட்கிறான். வாயால் விலை சொன்னால் கவிதை வரி மறந்துவிடும். ஆகையால் கையால் விரட்டிவிடுகிறேன்," என்று பதிலளித்தார்.

கவிஞராக இருப்பவரால் கடைவேலை பார்ப்பது சிரமம். கவிதை வரிகள் எப்பொழுது மனத்தில் இறங்கி வருமெனத் தெரியாது. அவை இறங்கி வந்து, கவிஞர் அவற்றை முணு முணுக்கும்போது வாடிக்கையாளர் வந்து துணி விலை, புடைவை விலை விசாரித்துக் கவிஞரை பூமிக்கு இழுத்தால் அவரால் தாங்க முடியுமா? அவருக்கு விலை விவரம் கூறுகையில் கவிதை வரிகள் காற்றில் நிரந்தரமாகக் கரைந்துவிடும்.

இதேபோல், நீ துறவியான பின்னும் கடையில் உட்கார்ந்தாலும் தியானம் கைகூடும். ஆனால் கடை வருமானம் திண்டாட்டத்திற்குள்ளாகிவிடும்.

என்னிடம் வருபவர்களில சிலர் தியானம் செய்தால் வாழ்க்கை வசதிகள் அதிகரிக்குமா என்று விசாரிக்கின்றனர். என்னால் பக்காவாகப் பதில் சொல்ல முடிவதில்லை உள்ளே புரட்சி நடக்கும். வெளியே என்ன ஆகும் என்று தெரியாது. வசதிகள் கூடலாம், குறையலாம், அப்படியே இருக்கலாம். பல சாத்தியக்கூறுகள் உள்ளன. நான் வாக்குறுதி எதுவும் தர இயலாது.

அவர்கள் மேற்கொண்டு, மஹரிஷி மஹேஷ் யோகி* "தியானம் செய்தால் சுகமும் செல்வமும் பன்மடங்கு அதிகரிக்கும் என்கிறாரே," என்று என் கருத்தைக் கேட்கிறார்கள். நான் சொன்னேன், "உங்களுக்கு சுகத்தையும் செல்வத்தையும் பெருக்கிக்கொள்வதுதான் முக்கியம் என்றால் அவரிடம் சென்று தியானம் பழகுங்கள் அல்லது அவ்வாறு கூறுகிற வேறு யோகியிடம் செல்லுங்கள். நான் வாக்குறுதி தரமுடியாது. அப்படி வாக்களித்தால் அது அடிப்படையில் ஒரு மோசடியாகும்."

அப்படி சுகம்-செல்வத்திற்கு இட்டுச் செல்லும் தியானப் பயிற்சி இருக்குமானால் அது உண்மையான தியானம் ஆகாது. தியானம், பணவரவு என்னும் இரண்டில் ஒன்றுதான் சாத்தியம். பிரவாகம் ஒரு திசையில்தான் நிகழும். உள்முகமாகச் சிந்தனை நதி பிரவாகித்தால் பிறகு வெளியுலகத்துக்கு அது திரும்பாது.

இருக்கின்ற சுகம் போதாதா? இருக்கின்ற செல்வம் போதாதா? அதிருப்தி இன்னும் அதிகம் வேண்டும் என்று கோருவது நாளைய தினத்துடன் சம்பந்தப்பட்டது. நான் சொல்வது, 'நாளை என்பது என்றும் வராது. இப்போதில்லை என்றால் எப்போதும் இல்லை. இன்று இப்பொழுது. கையிலிருப்பதுடன் வாழ்ந்துவிடு.'

ஆன்மிகத்தில் கடவுளை சீக்கிரம் தரிசிக்க வேண்டும் என்று பக்தர்கள் ஏங்குகிறார்கள். ஆனால் 'சீக்கிரம்' என்னும் நிபந்தனை நீங்கினால்தான் தரிசனம் கிடைக்கும். அப்போது அது

* மஹேஷ் யோகி-இயற்பெயர் மஹத பிரஸாத் வர்மா. ஆழ்நிலை தியான முறையை வகுத்துப் பரப்பியவர் (TM-Transcendental Meditation). 'பீட்டில்ஸ்' எனப்படுவோர் இவருடைய புகழ்பெற்ற சீடர்கள். இவர்கள் உருவாக்கியது Rock Music. நீண்டு தொங்கும் முடியும், தொளதொள ஆடையும் இவர்களின் டிரேட் மார்க்.

உடனடியாகவும் கிடைக்கலாம். பொருள்மய உலகில் உனக்கு நிறையக் கிடைக்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்பு 'நிறைய' என்பது நீங்கினால்தான் பலிக்கத் தொடங்கும்.

இலக்கை அடைவது பற்றி கவலைப்படாதே. இந்த உள்முக யாத்திரையேகூட இனிமையானதுதான். சமாதி நிலை கிட்டுவதைப் பற்றி கவலைப்படாதே. அதை அடைவதற்காக நீ மேற்கொள்ளும் தியானப் பயிற்சியேகூட சுகமானதுதான். ஊரை அடைவதில் மகிழ்ச்சியென்றாலும் வழிப்பயணமும் சுகம் தரக்கூடும். அது காட்டு வழியானாலும் அதிலும் ஆனந்தம் உண்டு.

தியானம் மூலம் சமாதி நிலையை அடைகிறோம். அந்த நிலையை அடைந்த பிறகுதான் ஆனந்தம் என்றில்லை. அவ்வாறு நினைத்தால் தியானம் செய்வதில் சுவை இல்லாமல் போய்விடும். அதனால் நடுவிலேயே தியானத்தைக் கைவிடுவாய். சமாதி நிலை எட்டாக் கனியாகிவிடும். ஆகவே தியானம் செய்கையில் அதையே இலக்குப்போல் நினைத்து அதிலேயே இன்பம் கண்டால் சமாதி நிலை தானாகவே வாய்க்கும்.

எனது சொற்பொழிவை நீ இரண்டு விதமாகக் கேட்கலாம். நான் கூறுபவற்றை மனத்தில் குறித்துக்கொள்ளலாம். அவற்றைப் பிறகு பயன்படுத்த நினைக்கலாம். இதனால் கடவுளை விரைவாக அடைய முடியும் என நீ நம்பலாம். இது வியாபாரியின் அணுகுமுறை. இது கணித வழியிலான அணுகுமுறை. ஆனால் வாழ்க்கையில் ஓர் அளவிற்குத்தான் கணிதம் உதவும்.

**நா**ன் ஆங்கில வழிப் பள்ளியில் படிக்கச் சேர்ந்தேன். எங்கள் கணித ஆசிரியர் கணிதத்தின் அவதாரம் போன்றவர். எனக்கும் அவருக்குமிடையே அடிக்கடி தகராறு எழும். என்னை அவர் அடிக்கடி வகுப்பறையிலிருந்து வெளியேற்றி விடுவார். நான் ஏதாவது சந்தேகம் கேட்க எழுந்தாலும் கேட்க விடாமல் வெளியே அனுப்பிவிடுவார். "வாயை மூடிக்கொண்டு இருப்ப தானால் மட்டும் உள்ளே இரு. இல்லாவிடில் வெளியில் போய்நில்," என்று அதட்டுவார். என்னால் எதையும் தட்டிக் கேட்காமல் இருக்க முடியாதாகையால் நான் கணிதப் பாடவேளையில் பெரும்பாலும் வகுப்பறைக்கு வெளியேதான் நிற்கவைக்கப்பட்டிருப்பேன்.

ஆனால் என் பக்கம்தான் நியாம் இருப்பதாக நினைத்தேன். ஆசிரியர் கணிதத்தை வாழ்க்கையின் யதார்த்தத்தோடு இணைத்துப் பார்த்தவரில்லை. ஒருநாள் அவர் ஒரு கணக்குக்கு விடைகூறுமாறு என்னைக் கேட்டார். அதாவது, 'ஒரு வீட்டை பத்து கூலியாட்கள் மூன்று மாதத்தில் கட்ட முடியும் என்றால், இருபது கூலியாட்கள் அதைக் கட்டிமுடிக்க எவ்வளவு காலம் பிடிக்கும்?' என்பதே கேள்வி.

அவர் கட்டடக் கலையின் யதார்த்தத்தை அறிந்திருக்க வில்லை என்று எனக்குப் புரிந்தது. தொழிலாளர்களின் எண்ணிக்கையை, அதிகரித்தால் வீட்டை சீக்கிரமாகக் கட்டிவிடலாம் என்று அவர் நினைப்பதாகத் தோன்றியது. நான் சொன்னேன், "சார், உங்கள் கேள்வியிலிருந்து தெரிவது என்ன? இருபது பேர் வேலை செய்தால் ஒன்றரை மாதத்தில் வீடு கட்டப்படும் என்று நான் பதில் கூறுவேன் என எதிர்பார்க்கிறீர்கள். நூறு பேர் உழைத்தால் 9 நாளில் கட்டிவிட முடியுமா? அவ்வப் பொழுது இடைவெளி கொடுத்தல்லவா வீடு கட்டப்படுகிறது?" தாங்க முடியாத கோபத்தில் அவரால் சொல்ல முடிந்தது "கெட் அவுட்!" என்று மட்டும்தான்.

பல பேருடைய வாழ்க்கை தேவையில்லாத இடங்களிலும் கணிதத்துடன் பிணைந்திருக்கிறது. என் பேச்சைக் கேட்கும் சமயத்திலும் சிலர் மனத்திலோ, நோட்டுப் புத்தகத்திலோ தினமும் எத்தனை மணி நேரம் தியானம் செய்ய வேண்டும்; எந்த அளவுவரை செய்தால் எத்தனை நாளில் சமாதிநிலையை அடையலாம்; தியான நேரத்தைக் கூட்டினால் சமாதி சீக்கிரம் கிடைக்குமா என்றெல்லாம் கேட்டுக் குறித்துக் கொள்கிறார்கள். துல்லியமாக அக்கணக்கை ஆன்மிக வாழ்க்கையில் பயன்படுத்த முயல்கிறார்கள்.

என் பேச்சை மற்றொரு விதமாகவும் கேட்கலாம். நீ காது கொடுத்துக் கேட்பதற்குமேல் எதுவும் செய்யாதே. நான் சொன்னபடி செய்தால் எவ்வளவு சீக்கிரத்தில் மோட்சம் கிடைக்கும் என்று கணக்குப்போடாதே. நீ ஏற்கெனவே மோட்சநிலையில் அமர்ந்தபடிதான் என் உரையைக் கேட்பதாகக் கற்பனை செய்து கொள். மெய்ம்மறந்த நிலையிலிருந்து உபதேசம்

கேள். பயனடைவாய். கணக்கு புத்தியுடன் ஆன்மிக உபதேசம் கேட்காதே. அத்தகைய கணக்கின் விடை எப்பொழுதும் தவறாகவே இருக்கும்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நாங்கள் பாறை போன்றவர்கள். உங்கள் கருணை எங்களை இளக்காது. நாங்கள் மாறமாட்டோம் என்று சத்தியம் செய்தது போன்ற நிலையில் உள்ளோம். தினமும் உங்கள் பேச்சைக் கேட்டுப் போதை உணர்வு பெறுகிறோம். உங்கள் பேச்சு அற்புதமாக உள்ளது. ஆனால் நாங்கள் எங்கள் நிலையிலிருந்து ஓர் அங்குலம்கூட விலக விரும்பவில்லை. பாறைகளான எங்களுக்கு உபதேசித்து நீங்கள்தான் களைத்துப்போவீர்கள்.**

**அ**ப்படியில்லை. நீ ஓர் அங்குலமாவது உன் பழைய நிலையிலிருந்து நகர்ந்துவிட்டாய். நீ கல்மனசுக்காரன் என்பதை உணர்ந்ததே கூட ஒரு நெகிழ்ச்சிதான். உன் ஆன்மிகப் பயணம் தொடங்கிவிட்டது எனலாம். கல்லில் உளிபட்டுவிட்டது. கால ஓட்டத்தில் சிலை உருவாகிவிடும்.

கல்லும் கரையும் என்பது உனக்குத் தெரியாதா? மலையிலிருந்து நதி இறங்கி பாறையில் மோதி, கீழே செல்கிறது. நதியின் தண்ணீர் தன்னைப் பாதிக்காது என்று ஆரம்பத்தில் பாறை நினைக்கலாம். பல்லாண்டுகளாக நதியின் நீர் பட்டுப்பட்டு பாறை முதலில் தேய்கிறது. விளிம்புகள் சேதமடைகின்றன. மையத்தில் குழி விடுகிறது. துகள்-துகளாகப் பாறை தண்ணீருடன் கலந்து கீழே போய்விடுகிறது. கிணற்று மேடையிலும் நீண்டகாலம் தாம்புக் கயிற்றின் ஈரம் பட்டுப்பட்டு மேடை தேய்வதைப் பார்க்கலாம்.

நான் உன்னிடம் கேட்டுக்கொள்வது என்னவென்றால் நீ இங்கே அமைதியாக உட்கார்ந்திரு. என் பேச்சை ரசித்துக் கேள். நீ வேறு எதுவும் செய்ய வேண்டாம். என் பேச்சின் சுவையை அனுபவி. அது போதையூட்டினாலும் பரவாயில்லை. காலப்

போக்கில் உனக்குள் மாற்றம் நிகழும். உன் கல்மனம் கரைகிறதா என்ற ஆராய்ச்சி வேண்டாம். அதை என் சொற்பொழிவு பார்த்துக் கொள்ளும்.

நீ கேட்கும் வேலையை மட்டும் செய், போதும் (ச்ரவண மாத்ரேண) என்னை உன் மனத்துள் பிரவேசிக்கவிடு. உன் கல்மனம் கரைந்துபோகும். என் பேச்சைத் தொடர்ந்து கேட்டால் சத்தியம் சிறிது-சிறிதாக உனக்கு வசப்படும். அது உனக்குத் தெரியாமலே நிகழும்.

பிறகு நான் சொல்வதன் பிரதிபலிப்பை நீ உன் வாழ்க்கையில் ஆங்காங்கே உணர்வாய். இன்று நான், "கோயில் களில் அப்படி என்ன இருக்கிறது?" என்று சொல்கிறேன். அது உன் காதில் விழுகிறது. பிறகு மறந்துவிடுகிறாய். என்றாவது ஒருநாள் நீ ஒரு கோயிலைக் கடந்து செல்கையில் நான் 'கோயில்களில் அப்படி என்ன இருக்கிறது' என்று கூறியது எதிரொலிக்கும் இன்று நான், "சாஸ்திரம் என்றால் என்ன? அதில் வெறும் சொற்கள்தான் நிறைந்துள்ளன," என்கிறேன். பிற்காலத்தில் நீ ஒரு நாள் புனித நூல்களைப் புரட்டும்பொழுது நான் சொன்னது நினைவிற்கு வரும். இன்று நான், "நீ வணங்கும் சந்நியாசிகள் காலியான பாத்திரம் போன்றவர்கள்," என்கிறேன். அடுத்த முறை நீ 'குரு' என்று ஒருவரை வணங்கும்போது அவரது முகத்தை உற்றுக் கவனி. இதுவரை நீ பொதுவாகப் பார்த்து பிரமித்தாய். இப்போது பாரபட்சமின்றிப் பார்த்தால் அவரது முகத்தில் சாந்தமோ, கம்பீரமோ தெரியாது. கண்களில் ஒளி இருக்காது. புன்னகை போலியாக இருக்கும்.

பேச்சைக் கேட்டபடி இரு. எதிர்கால வாழ்க்கையில் ஒவ்வொரு சம்பவமும் என் பேச்சை நினைவுபடுத்தும். நான் சொல்கிறேன் நாம் காண்பதெல்லாம் கனவு என்று. இதை உன்னால் உடனே நம்ப முடியாது. ஆனால் பிறகு எத்தனையோ சந்தர்ப்பங்களில் நான் சொன்னது நினைவுக்கு வந்து முள்போல் குத்தும்.

நான் சொல்கிறேன், "வாழ்க்கை என்பது சாவை நோக்கிய பயணம். இதைத் தடுக்கவோ, திசை திருப்பவோ முடியாது," என்று. நீ பாதையில் சவ ஊர்வலத்தைப் பார்க்க நேரும்போது இந்த சத்தியம் உறைக்கும். பேச்சைக் கேட்கையில் சத்தியம்

சிறுவிதைபோல் இறங்கி, நாளாவட்டத்தில் முழுமையாக வளர்ந்து உனக்கு வாழ்க்கையைப் புரியவைக்கும். தினம்-தினம் அதற்கான சந்தர்ப்பம் எழும். நான் கூறுவது கொள்கை மட்டுமே. அதை நிரூபிக்கும் சான்றுகள் உனக்கு வாழ்க்கையில் கிடைக்கும்.

ஒருநாள் உனக்கு ஞானம் பிறக்கும். 'இளமை நீடிக்காது. உடல் நிரந்தரமாக இருக்காது. வானளாவிய செல்வமும் நிலை பெறாது. சொர்க்கம் கிடைப்பது நிச்சயமில்லை' என்று புரிந்ததும் என் சொற்பொழிவு நினைவிற்கு வரும்.* இவற்றிலிருந்து தப்பிக்க முடியாது. ஏனெனில் இவை சத்தியம்.

**வாழ்க்கை என்பது இருநாள் விருந்து**
**இங்கு நிரந்தரமாய்த் தங்குதல் இல்லை**
**ஒவ்வொரு வீடும் இங்கே அடைமானம்**
**தங்கவெயில் வெள்ளி நிலவெலாம் வெறுஞ்சொல்**
**அவற்றின் பின்னால் இருளும் உள்ளது**
**பட்டுடை அணிந்து பகட்டாய்த் திரியினும்**
**கடைசியில் அனைவருக்கும் போர்த்துவது**
**மட்டமான சாதாத் துணி.**

என் சொற்பொழிவை ஆனந்தமாகக் கேள். சத்தியம் மெதுவாக உனக்குள் இறங்கும். கல்மனம் கரையும். உனது நிகழ்கால வாழ்க்கை போலியானது, பொய்யானது. நான் சொல்வதெல்லாம் உண்மை. தாமதமானாலும் இறுதியில் வாய்மையே வெல்லும்— சத்தியமேவ ஜயதே.

## கடைசிக் கேள்வி

**கருவியாகப் பயன்படுவதும் சுதந்திரமாக இயங்குவதும் ஆன்மிகத்தில் ஒன்றேதானா, வெவ்வேறா?**

**இ**ரண்டும் ஒன்றே. சொற்கள்தாம் வேறு. சொல்லும் விதம்தான் வேறு. ஒரே இடத்தில் சேர்ப்பிக்கும் இரண்டு வழிகள் என்றும் சொல்லலாம். கிருஷ்ணர் சொல்வது—கருவியாகு. அஷ்டாவக்ரர் சொல்வது— சுதந்திரமாகு. கருவியானால்

* இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா
புத்தே ளுலகம் புதல்வரும் தாரார் *(மணிமேகலை)*

சுதந்திரமாவதும, சுதந்திரமானால் கருவியாவதும் இயல்பாக நிகழ்பவை.

கருவி அல்லது நிமித்தம் என்றால் நீ கர்த்தா (செய்பவன்) இல்லை. கடவுளைச் செய்யவிடு. செய்தல் என்னும் சொல்லை மறந்துவிடு. நீ புல்லாங்குழலாகி விடு. கடவுள் பாடுவது உன் வழியாக இறங்கட்டும் நீ குறுக்கிடாதே. நீ அகங்காரத்தைக் கைவிட்டதும் கருவியின் நிலைக்கு வந்துவிடுகிறாய். கடவுள் வசம் எல்லாவற்றையும் ஒப்படைத்து விடுவதால் நீ சுதந்திர புருஷன் ஆகிறாய். இதுவே சமர்ப்பண உணர்வுமாகும்.

மேற்கு நாடுகளிலிருந்து வருபவர்களுக்கு சமர்ப்பணம் என்பது சங்கடம் தருகிறது. சமர்ப்பணம் செய்தால் நாங்கள் அடிமையாகிவிட மாட்டோமா என்று அவர்கள் கேட்கிறார்கள். எங்களைச் சமர்ப்பித்து விட்டால் 'நாங்கள்' என்பவர்கள் இருக்க முடியாதே என்று சந்தேகம் கிளப்புகிறார்கள். அவர்களுக்கு உண்மையான அர்த்தத்தைப் புரியவைப்பதற்கு அதிகக் காலம் பிடிக்கிறது. சமர்ப்பணம் என்பது உன்னை முழுமையாக வெற்றிடமாக ஆக்கிக் கொள்வதாகும். பிறகு அந்த வெற்றிடத்தில் ஆரோக்கியமான ஆன்மிக ரசத்தை நிரப்புவது சாத்தியமாகும்.

அகங்காரம் என்ற பாறை அகன்றதும் அருவி வெளிப்பட்டுக் கொட்டும். இதுவே சுதந்திரத் தன்மை என்பது. இந்த அருவியை கிருஷ்ணர் பரமாத்மா என்கிறார்.

அஷ்டாவக்ரர் கருவி என்ற கண்ணோட்டம் கொண்டிருக்க வில்லை. அவர் சுதந்திரத் தன்மைக்கே நேரடியாக வந்துவிடுகிறார். நீ ஸ்வச்சந்தன் (சுய லயம் உள்ளவனாக) ஆகு. உள் மனத்தின் ஆழத்தில் உள்ளதை வெளிப்பட விடு. மேற்புறத்தில் நாம் வெவ்வேறாக இருந்தாலும் ஆழத்தில் நாம் அனைவரும் ஒன்றே என்பது புரியவரும். கடலின் மேற்புறத்தில் அலைகள் வெவ்வேறாகத் தோன்றுகின்றன. அடிப்படையில் உலகம் முழுவதும் பரவியிருப்பது ஒரே கடல்தான்.

சாதாரண மொழியில் கருவி என்றால் தனது தனித் தன்மையை இழத்தலாகும். சுதந்திரத் தன்மை என்றால் தன்னை மட்டும் வைத்துக்கொண்டு பிறவற்றை மறுத்தலாகும். இவை எதிரெதிரான அர்த்தம் தருகின்றன. ஆனால் ஆன்மிக

அனுபவத்தில் இவை முரண்பாடானவை அல்ல. ஒரே விஷயத்தை இவை இரண்டு விதமாகக் கூறுகின்றன.

சிலர் கருவியாகச் செயல்படவே தகுதி வாய்ந்தவர்கள். அவர்கள் சுதந்திரத் தன்மை பெற முயல வேண்டாம். இதேபோல் சுதந்திர மனப்பான்மை பெற்றவர்கள் கருவி நிலைக்கு மாற வேண்டாம். செல்லும் பாதையில் மக்கள் தனித் தனியாக இருக்கலாம். கடைசிக் கட்டத்தில் எல்லாரும் ஒன்றாகிவிடுவர். இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர், பௌத்தர், ஜைனர் முதலிய அனைவரும் இணைந்துவிடுகின்றனர்.

ஆரம்பத்தில் பாதைகள் தனித்தனியாகச் செல்கின்றன. மக்கள் ஏராளமான வகையினராக இருப்பதால் பாதைகளும் நிறையத் தேவைப்படுகின்றன. அறிவியல் காரணமாகப் புதிய சிந்தனைகள் தோன்றுவதால் புதிய ஆன்மிகப் பாதைகளும் தோன்ற வேண்டும். ஒவ்வொரு மனிதனுக்கு ஒரு தனிப் பாதை தேவை என்னும் நிலை வரலாம். ஒரே நம்பர் செருப்பானாலும் கால்களின் அமைப்பு வெவ்வேறாக உள்ளது. எனவே ஒருவர் செருப்பை இன்னொருவர் அணிய முடிவதில்லை. அதுபோல் ஒவ்வொரு மனிதனின் ஆன்மிகச் சிந்தனையும் தனித்தன்மை கொண்டது.

சத்குரு உனக்குத் தெம்புதான் தர முடியும். தைரியமும் ஊக்கமும் அளிக்க முடியும். முன்னேறு என்று தட்டிக்கொடுக்க முடியும். அஞ்சாதே என்று அவர் சொல்லுவார். தயங்காதே என்று தட்டிக்கொடுப்பார். உன் சுயநம்பிக்கையை வளர்த்துவிடுவார்.

நான் பலவிதமான பேர்களுக்கு தியானம் பயில்விக்கிறேன். சில சமயம் ஒரேவகை தியானப் பயிற்சி இரண்டு பேருக்குத் தருகிறேன். ஆனால் கடைசியில் விளைவு வெவ்வேறு விதமாக இருப்பதைக் கண்டுள்ளேன். ஒரு நம்பர் காலணியை ஒருவர் அணிந்ததும் அவருடைய விரல்கள், பாதம், குதிகால் அமைப்புக்கு ஏற்ப அந்தச் செருப்பு சற்று வளைந்து மாறுகிறது. ஆகவே அதே நம்பர் உள்ள இன்னொருவரால் அந்தக் காலணியை அணிய முடிவதில்லை. இதுபோல் ஒவ்வொருவரின் தனித்தனி ஆளுமைக்கு ஏற்ப தியானத்தில் இலேசாக மாறுதல் செய்து பயிற்சி தரவேண்டியுள்ளது.

எவனுக்குக் கருவியாக இருப்பது பொருந்துகிறதோ, எவன் சுலபமாக, இயற்கையாகக் கருவியாக முடிகிறதோ அவன் சுதந்திரக் கண்ணோட்டமுள்ளவன் சேருகின்ற இடத்தையே அடைகிறான். உன் பாதை குறித்து அஞ்ச வேண்டாம். இலக்கு ஒன்றேதான். ஏனெனில் சத்தியமும் ஒன்றேதான். அதை நோக்கித் திறக்கும் கதவுகள் தான் பல.

கருவியாகத் தன்னைக் கருதுபவனுக்குக் கடவுள் செய்யும் எல்லாமும், தன் மூலம் செய்விப்பது எல்லாமும் ஏற்புடையவளாய் இருக்கின்றன.

**கானகத்தில் வகை வகையாய்க் காற்றுண்டு**
**தென்றலும் வீசும் அங்கு புயலும் அடிக்கும்**
**வசந்தத்தின் பின்னால் வரும் இலையுதிர் காலம்**
**மலர் இருக்குமிடத்தில் முள்ளும் உண்டுதான்**
**பகலை விழுங்கியதென இரவைப் பழிக்காதே**
**கனவு பலிக்கவில்லையெனப் புலம்பாதே**
**வாழ்க்கை யெனும் சதுரங்கத்தில்**
**நாம் அனைவரும் காலாட்கள் மட்டுமே**

தான் கருவி என்று நினைப்பவனுக்கு எல்லாம் ஏற்புடையவை. என்ன நடக்கிறதோ நடக்கட்டும். எப்படி நடக்கிறதோ நடக்கட்டும். வேறு விதமாக நடக்க வேண்டுமென அவன் நினைக்க மாட்டான். இது சைதன்யர், மீராபாய் ஆகியோரால் சமர்ப்பண வழி என்று கூறப்பட்டது.

இத்தகைய கண்ணோட்டமானது ஒருவனுக்கு ஒத்து வரவில்லையெனில் சுதந்திரமாக நடந்துகொள்ளும் வழியும் உண்டு. அது புரட்சிகரமான வழியாகவும் இருக்கலாம். அந்த வழியையே அவன் மேற்கொள்ளலாம். அவன் சமர்ப்பணமாக வேண்டாம்.

அஷ்டாவக்ரர் கூறும் சுதந்திரப் போக்கை மகாவீரர் அசரண் (சரணடையாமை) என்கிறார். கருவி அல்லது சமர்ப்பணம் கண்ணோட்டத்தை பெண்மையின் வழி என்றும், சுதந்திரமான, புரட்சியான போக்கை ஆண்மையின் வழி என்றும் பிரிக்கலாம். இது ஆண்-பெண் உடலுடன் சம்பந்தப்பட்டதல்ல. மன அமைப்பின் அடிப்படையில் இவ்வாறு பிரிக்கப்படுகிறது.

என்னைச் சந்திக்க வருபவர்களில் சில ஆண்கள் மிகவும் பணிவுடன் சமர்ப்பணமாவது உண்டு. என்னையே கதி என்று பிடித்துக்கொள்வதுண்டு. சந்திக்கும் பெண்களில் சிலர் சுதந்திரமாக, தைரியமாக, என்னை எதிர்க்கேள்வி கேட்கும் ஆண் தன்மையுடன் நடந்து கொள்வதுண்டு.

ஆகவே குறிப்பிட்ட கண்ணோட்டமே சிறந்ததென உன் மீது திணித்துக்கொள்ளாதே. இதில் பிடிவாதம் வேண்டாம். சமாதிநிலையும் கூட இயற்கையாக நிகழ வேண்டும். உன் சுபாவத்திற்கு எது அனுகூலமாகத் தெரிகிறதோ அதுவே நீ சத்தியத்தைத் தேடுவதற்குப் பொருத்தமான வழியாகும். அவ்வழி சுபாவமானதும் சகஜமானதாகவும் இருத்தல் வேண்டும் என்பதுதான் நிபந்தனை.

ஆனால் பெரும்பாலும் நீ உனக்கு ஒவ்வாததையே மேற் கொள்ளுகிறாய். உபவாசம் இருப்பது உனக்கு ஒத்துக்கொள்ளாது என்றாலும் வலிந்து கடைப்பிடிக்கிறாய். உன்னைத் துன்புறுத்திக் கொள்வதில் சுகம் காண்கிறாய். உனக்கு சகஜமானதையே உனது வழியாகக் கொள்ள வேண்டும்.

முல்லா நஸ்ருத்தீன் ஓர் ஏரியில் மீன் பிடிக்க உட்கார்ந் திருந்தார். அங்கு வந்த ஒரு நண்பர் அவர் இதுவரை எத்தனை மீன்கள் பிடித்தார் என்று கேட்டார். சூரியன் மறையும் நேரம் நெருங்கிவிட்ட போதிலும் ஒரு மீன்கூட பிடிக்கவில்லையென்று நஸ்ருத்தீன் தெரிவித்தார். நண்பர், "இந்த ஏரியில் மீனே கிடையாது என்பது உங்களுக்குத் தெரியாதா? பக்கத்து ஏரிக்குப் போயிருந்தால் நிறைய மீன்கள் கிடைத்திருக்குமே," என்றார்.

நஸ்ருத்தீன் சொன்னார், "இந்த விஷயம் எல்லாம் எனக்குத் தெரியும்தான். பக்கத்து ஏரிக்குப் போனால் பச்சைக்குழந்தையும் மீன் பிடிக்கும். அதிலே என்ன பெருமை இருக்கிறது? மீன் கிடைக்காத இடத்தில் பிடித்தால்தானே அது சாதனையாகும்?" என்றார். இப்படி முரட்டுத்தனம், வறட்டுவாதம் நீ சரியான வழியைத் தேர்ந்தெடுக்க உதவாது.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

அகுர்வன்னபி ஸம்க்ஷோபாத் வ்யக்ர: ஸர்வத்ர மூடதீ |
குர்வன்னபி து க்ருத்யானி குஷலோ ஹி நிராகுல: || 234

சுகமாஸ்தே சுகம் ஷேதே சுகமாயாதி யாதி ச |
சுகம் வக்தி சுகம் புங்க்தே வ்யவஹாரே அபி சாந்ததீ: || 235

ஸ்வபாவாத் யஸ்ய நைவார்த்தி லோக வத வ்யவஹாரிண: |
மஹா ஹ்ருத இவாக்ஷோப்யோ கத கிலேச: சுஷோபதே || 236

நிவ் ருத்திர் அபி மூடஸ்ய ப்ரவ்ருத்திர் உபஜாயதே |
ப்ரவ்ருத்திர் அபி தீரஸ்ய நிவ்ருத்தி பல பாகினி || 237

பரிக்ரஹேஷு வைராக்யம் ப்ராயோ மூடஸ்ய த்ஷ்யதே |
தேஹே விகலிதாஷஸ்ய க்வ ராக: க்வ விராகதா || 238

பாவனா அபாவன ஆஸக்தா த்ருஷ்ட்டிர் மூடஸ்ம ஸர்வதா |
பாவ்ய பாவநயா ஸா து ஸ்வஸ்த்தயா த்ருஷ்ட்டி ரூபிணி || 239

அகுர்வன்னபி ஸம்க்ஷோபாத் வ்யக்ர: ஸர்வத்ர மூடதீ: |
குர்வன்னபி து க்ருத்யானி குஷலோ ஹி நிராகுல: || 240

**சா**ஸ்திரங்களின் சாரம் என்னவென்றால் அறிதலே முக்கியம், செய்தல் என்பது அதற்குப் பிறகுதான். அது இரண்டாம் பட்சம்தான். எல்லா ஞானிகளும் செய்தலால் ஒன்றும் பயனில்லை; அறிந்திருத்தலால்தான் எதுவும் நடக்கும் என்கிறார்கள்.

அறிதலின்றி நீ எது செய்தாலும் அதன் வேர் உன் அறியாமையில் இருக்கும். அஞ்ஞானத்துடன் சுபகாரியம் செய்தாலும் அசுபமாகிவிடும். அசுபம்போல் தோன்றுவதை ஞானம் கொண்டு செய்தால் அது சுபமாகும். ஆகவே ஞானம் முக்கியம், தியானம் முக்கியம்.

'அறிவிலி செயல் புரியாத நிலையிலும் அது சரியா-தவறா என்னும் குழப்பத்தால் கவலையுடன் இருக்கிறான். அவன் செயல் புரிந்தாலும் அவனது கவலை நீடிக்கிறது. ஆனால் ஞானி எல்லாச் செயல்களையும் செய்கின்ற நிலையிலும் அமைதியான மனத்துடனேயே விளங்குகிறான். (சுலோகம் 234)

ஆகவே விடவேண்டியது செயலையன்று; அக்ஞானத்தை விடவேண்டும். அஞ்ஞானம் என்றால் உலக விஷயங்களில் அறியாமை என்று பொருளன்று. ஆத்மாவை அறிந்திராமைதான் அஞ்ஞானம். நீ உலக விஷயங்கள் குறித்து எத்துணை தகவல்கள் திரட்டினாலும் நீ ஞானியாக மாட்டாய். உள்மனத்தில் உள்ள விளக்கு ஒளிபெற வேண்டும். வெளியுலகில் திரட்டிய அறிவு குப்பை போன்றதாகும். இதனால் நீ பண்டிதனாவாய்; வித்துவான் எனப்படுவாய்; ஆனால் ஞானியாகிவிட மாட்டாய்.

அறிவிலி சும்மா இருக்கும் சமயத்திலும் மனக்குழப்பத்தில் இருக்கிறான். அவன் குகையில் உட்கார்ந்தாலும் கடைத்தெரு நினைவில் இருப்பான். தியானம் செய்ய முயன்றால் மனம் எங்கெல்லாமோ திரியும். எதைச் செய்வது-எதைச் செய்யாமல் இருப்பது என்று சங்கடப்படுவான். அவன் கற்பனையான நடவடிக்கைகளில் ஆழ்ந்திருப்பான். அவன் இமயமலைக்குச் சென்று தவம் செய்தாலும் உலகப் பற்று அவனை விடாது.

ஓர் இளந்துறவி தன் குருவிடம் உலகம் என்பது என்ன என்று கேட்டான். அவர் அதற்கு, "நீ ஒரு வேலை செய். ஊருக்குள் சென்று வீடு-வீடாக பிட்சை (சமைக்காத அரிசி) கேள். நீ திரும்பிவந்தபின் உலகம் பற்றி விளக்குகிறேன்," என்று துறவியை அனுப்பி வைத்தார்.

சீடன் முதல் வீட்டின் கதவைத் தட்டியதும் ஓர் அழகிய இளம்பெண் வெளிப்பட்டாள். சீடன் பிட்சை கேட்பதை மறந்து

விட்டான். தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டினான். அக்கால வழக்கப்படி பிராமண இளைஞன் அவ்வாறு வேண்டினால் பெண் மறுக்க முடியாது.

திருமணம் நடந்தது. குரு, பிட்சை முதலியவற்றைச் சீடன் மறந்தே போனான். குழந்தைகள் பிறந்தன. ஒருமுறை பயங்கரமான வெள்ளம் வந்தது. சீடன் எவ்வளவோ முயன்றும் மனைவியும் குழந்தைகளும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படுவதைத் தடுக்க முடியவில்லை. அவன் மட்டும் தப்பினான். குடும்பத்தை இழந்த அதிர்ச்சியில் அவன் மயக்கமடைந்தான்.

மீண்டும் சுயநினைவு வந்து கண்களைத் திறந்தான். எதிரே குரு நிற்கிறார்! "உலகம் புரிந்ததா?" என்று கேட்டார். அப்போது தான் சீடனுக்கு பல்லாண்டுகளுக்கு முன் பிட்சை கேட்கப் புறப்பட்டது ஞாபகம் வந்தது. குரு சொன்னார், "நீ நினைத்தபடி எதுவும் நடக்கவில்லை. சில நிமிடம் நீ சற்று கண்ணயர்ந்து விட்டாய்." சீடனுக்கு தான் பார்த்த பெண்-திருமணம்-குழந்தைகள்-வெள்ளம் எல்லாம் பகற்கனவு என்று புரிந்தது. சில நிமிடங்களில் 10 வருடங்கள் ஓடிவிட்டது தெரிந்தது.

கடிகாரப்படி கால ஓட்டம் கட்டுப்பாட்டுக்கு அடங்கியது என்றாலும், விழித்திருக்கும்போது நாம் உணரும் காலமும், கனவில் நாம் உணரும் காலமும் வெவ்வேறு. ஒரு நிமிடக் கனவில் எத்தனையோ ஆண்டுகள் கழிந்துவிடும்.

நீ பகலில் சாப்பிட்டபின் அசதியால் சற்றுக் கண் மூடுகிறாய். அதற்கு முன் கடிகாரத்தைப் பார்க்கிறாய். மணி பன்னிரண்டு. ஒரு நீண்ட கனவு தோன்றுகிறது. அதில் எத்தனையோ ஆண்டுகள் ஓடிவிடுகின்றன. சட்டென விழித்துக் கடிகாரத்தை நோக்குகிறாய். மணி 12.01! ஒரு நிமிடத்தில் பல்லாண்டு வாழ்ந்துவிட்டாய். கனவைச் சொல்வதற்கு கூட பல நிமிடங்களாகும்.

கடிகாரமும் நாள்காட்டியும் காட்டும் காலமும் வாழ்க்கையில் நாம் உணரும் காலமும் வித்தியாசப்படுகின்றன. இன்பத்தில் காலம் போவதே தெரியாமலிருப்பதும், துன்பத்தில் நத்தை வேகத்தில் காலம் நகர்வதும் நாம் அறிந்தே இருக்கிறோம். இதை ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் சார்பியல் கோட்பாடு என்று அழைத்தார். இதை

கிழக்கத்திய ஞானிகள் பல நூற்றாண்டுகள் முன்பே அறிந்திருந்தனர்.

பகல் பொழுது கழிவதும், இரவு நேரம் கழிவதும்கூட மனிதனின் மனநிலையைச் சார்ந்திருக்கின்றன.

தூக்கம் காரணமாகக் கனவு தோன்றுகிறது. அறியாமை காரணமாக உலகம் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆகவே அறியாமையும் ஒருவகைத் தூக்கம்தான்; ஒருவகை மயக்கம்தான். அப்போது நீ யார் என்பதை உணர முடிவதில்லை. தூங்கும்போது நீ எம்மதத்தவன்; யாருக்கு எவ்வகையில் உறவு; அழகனா-குரூபமானவனா; ஏழையா-செல்வந்தனா; படித்தவனா-படிக்காதவனா என்பதெல்லாம் கனவில் மறந்துபோகிறது.

இந்த வளாகத்தில் வசிக்கும் ஒரு பெண் துறவி, "சுவாமி! நான் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பது புரியவில்லையே." என்றாள். நான் சொன்னேன், "இந்த வளாகத்திலுள்ள யாருக்குமே தாங்கள் என்ன செய்கிறோம் என்று தெரிந்திருக்கவில்லை. இங்கு மட்டுமல்ல, உலகில் நீ எங்கு சென்றாலும் இந்தக் கேள்வி எழத்தான் செய்யும். முதலில், நீ யார் என்பதே உனக்குத் தெரியாதே. அடிப்படைக் கேள்விக்கு பதில் தெரியாதே. அஸ்திவாரம் போடுவதற்குமுன் வீடுகட்டத் தொடங்க முடியுமா?

ஆகுதல் முதலில், செய்தல் பிறகுதான். ஏதாவது ஒன்றாக ஆகாமல் நீ செயல்புரிய முடியாது. ஆனால் ஆகுதலுடன் நிறுத்திக்கொண்டு செயல்புரியாமல் இருக்க முடியும். ஆகவே ஆகுதலே முதலிடம் பெறுகிறது. நீ யார் என்பதை முதலில் அறிந்து கொண்டால் பிறகு நீ என்ன செய்கிறாய் என்பது புரிந்துபோகும். அவ்வாறு அறிந்தவனுக்கு உலகம் என்பது இல்லாமல் போகும். ஆகவே ஞானியர் உலகமும் கனவும் ஒன்று என்றனர். உலகமெனும் பெருங்கனவு என்றனர்.*

---

* உலகெ லாமொர் பெருங்கன வஃதுளே
உண்டு றங்கியி டர்செய்து செத்திடும்
கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கை யோர்
கனவி லுங்கன வாகும் ... *(பாரதியார்)*

ஒரு வேறுபாடு உண்டு. சாதாரணக் கனவு என்பது சில நிமிடமே நிலைக்கிறது. உலகம் என்னும் கனவோ நம் முழு ஆயுள்வரை பரவியுள்ளது.

சாதாரணக் கனவு தனிமனிதனுடன் சம்பந்தப்பட்டது. உலகமெனும் கனவு முழு சமூகத்தையும் உள்ளடக்கியது. உன் கனவில் நானும் வரும்படி நீ எதுவும் செய்ய முடியாது. நீ உன் நண்பனை 'இன்று என் கனவில் வா' என்று அழைக்க முடியாது. அதற்கு எந்த உபாயமும் இல்லை.

உலகமெனும் கனவு சமூகம் சார்ந்தது. உன் கண்ணிற்குத் தெரிகின்ற மரங்கள் என் கண்ணிற்கும் தெரிகின்றன. இவ்விஷயத்தில் நாம் அனைவரும் பங்காளிகள். சாதாரணத் தூக்கத்தில் வரும் கனவு மேலோட்டமாக அமைந்து உன்னுடன் முடிந்துவிடுகிறது. மயக்கம் போல் ஆழமாகவும் நீண்ட காலமும் இருப்பது உலகமெனும் கனவு. இதைக் கூட்டுக் கனவு (Collective dream) என்கிறார்கள். ஏனெனில் இது எல்லோராலும் ஒரே சமயத்தில் காணப்படுகிறது.

மனத்தத்துவ அறிஞர் ஃப்ராய்டு ஆராய்ச்சி செய்து நமது மனத்தின் கீழே இன்னொரு மனமும் உண்டு என்றார். அதற்குத் தன்னுணர்வற்ற மனம் (unconscious mind) என்று பெயர்சூட்டினார். அதை நிரூபிக்க அவர் மிகவும் சிரமப்பட்டார். உணர்வில்லாத மனம் எப்படி இருக்க முடியும் என்று மக்கள் திகைத்தார்கள். இதை வேறுவிதமாக அணுக வேண்டியிருந்தது.

ஒருவருடைய பெயர் உனக்கு நினைவிற்கு வரவில்லை. "நாக்கு நுனிவரை பெயர் வந்துவிட்டது. ஆனால் சரியாகக் கூற முடியவில்லை," என்கிறாய். அது எங்கே நழுவிப்போனது? அது இனி என்றுமே அப்பெயர் நினைவுக்கு வராது எனில் நமக்கிருப்பது ஒரு மனம்தான் எனலாம். நீ அப்பெயரை நினைவுக்குக் கொண்டுவரக் கடுமையாக முயலும்போது சிக்கல் மேலும் அதிகரிக்கிறது. அதேசமயம் அப்பெயரின் ஏதோ சிறு அங்கம் உனக்கு ஞாபகம் இருக்கிறது. திடீரென அப்பெயர் வேறு சமயத்தில், வேறு வேளையாக இருக்கும்போது உனக்கு ஞாபகம் வருகிறது. அதுவரையிலும் அப்பெயர், நீரில் விழுந்த பூச்சி

கரையேறப் பலமுறை விழுந்து முயல்வதுபோல், உனக்குக் கண்ணாம்பூச்சி ஒட்டிக்கொண்டிருந்தது. ஆகவே மேல் மனத்தின் கீழே அடி மனம் ஒன்று உள்ளது. அதில் அப்பெயர் விழுந்து விட்டது. அது மேலே வர முயல்வதில் தாமதம் உண்டானது. அந்த அடிமனத்தை ஃப்ராய்ட் தன்னுணர்வற்ற மனம் என்றார் (அசேதன மனம்).

ஃப்ராய்டின் மாணவரான கார்ல் ஜுங் இதைவிட ஆழமாக இறங்கி ஆராய்ச்சி செய்தார். அவர் அசேதன மனம் தனி நபருடன் சம்பந்தப்பட்டது. ஒவ்வொரு மனிதனுக்கும் தனித்தனி அசேதன மனம் உள்ளது. இதற்குக் கீழேயும் மனத்தின் இன்னொரு அடுக்கு உள்ளது. அதுவே கூட்டுமனம் அல்லது சமூக மனம். இது எல்லோருக்கும் பொதுவானது, சமமானது. இதை நிரூபிப்பதும் கடினம் என்றாலும் இரண்டு உதாரணங்கள் பார்ப்போம்.

நீ அமைதியாக உட்கார்ந்திருக்கிறாய். ஒரு நண்பனின் நினைவு எழுகிறது. அவன் ஒருவேளை இப்போது வரக்கூடும் என்று தோன்றுகிறது. கதவைத் தட்டும் சத்தம். எழுந்துபோய்க் கதவைத் திறக்கிறாய். சாட்சாத் அந்த நண்பனே வாசலில் நிற்கிறான். இது எப்படி நடந்தது என்று உன்னால் நம்ப முடிவதில்லை. தற்செயல் நிகழ்ச்சி என்று முடிவுகட்டுகிறாய். தற்செயல் நிகழ்ச்சி என்று நினைத்து நீ எத்தனையோ உண்மைகளை அறிந்துகொள்ளாமல் இருந்துவிடுகிறாய்.

எனது நண்பர் ஒருவர். கவிஞர். கவியரங்கத்தில் பங்கேற்க பஸ்ஸில் போகும்போது அவருக்கு ஏனோ மேற்கொண்டு போகாமல் ஊருக்குத் திரும்பிவிட வேண்டும் என்று அரிப்பாக இருந்தது. அதற்கான தேவை இருக்கவில்லை. அவர் புறப்படும் போது வீட்டில் எல்லாரும் நன்றாகத்தான் இருந்தார்கள். கவியரங்கத்தில் பங்கேற்காவிடில் சன்மானம் கிடைக்காது. கெட்ட பெயர் ஏற்பட்டு எதிர்காலத்தில் வாய்ப்புகள் கிடைக்காது.

அவர் ஒரு ஹோட்டலில் தங்கினார். இரவு 2 மணிக்கு கதவைத் தட்டும் ஓசையும் 'முன்னா' (குட்டிப்பையா) என்று கூப்பிடுவதும் காதில் விழுந்தது. கவிஞர் அரண்டுவிட்டார்.

அவரின் தந்தைதான் அவரை அப்படிக் கூப்பிடுவது வழக்கம். அவரோ ஊரில் அல்லவா இருக்கிறார். ஏதோ பிரமை என்று நினைத்துக் கவிஞர் போர்வை போர்த்திக்கொண்டு படுத்து விட்டார்.

சில நிமிடங்கள் கழித்து மீண்டும் கதவு தட்டப்படும் சத்தம். 'முன்னா' என்று அழைப்பு. கவிஞர் பதறிப்போய்க் கதவைத் திறந்தார். வாசலில், வராந்தாவில் எவருமில்லை. ஹோட்டலில் அனைவரும் உறக்கநிலையில் இருந்தனர். அவர் மீண்டும் படுக்கச் சென்றதும் 'முன்னா' என்ற அழைப்பு உரக்கவே கேட்டது. கீழே சென்று மானேஜரை எழுப்பி ஊருக்கு போன் செய்யச் சொன்னார். மானேஜர் டயலைச் சுழற்றி முயன்று கொண்டிருக்கும்போது கவிஞரின் ஊரிலிருந்து போன் வந்தது. கவிஞரை எழுப்பி அவர் தந்தை 10 நிமிடம் முன் காலமாகிவிட்ட செய்தியை அவருக்குத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டது!

இதுவே சமூகமனம், இங்கே தந்தைக்கும் மகனுக்கும் இடையே மனப்பாலம் இருந்திருக்கிறது. அவர்கள் இருக்கும் ஊர்களிடையே ஆயிரம் மைல் இடைவெளிகூட இருக்கலாம். இம்மாதிரி நெருக்கம் பெற்றோர்கள்-பிள்ளைகள், காதலர்கள், நண்பர்கள் இடையே மட்டுமின்றி, மரங்களுக்கும் அவற்றை நேசிப்பவர்களுக்கும், விலங்குகளுக்கும் அவற்றின் ஆர்வலர்களுக்கும் இடையேகூட இந்த சமூகப் பாலம் உண்டு. ஆனால் இதன் அடிப்படையில் மிக அரிதாகவே சம்பவங்கள் நிகழும். நாம் அலட்சியமாக நினைக்கும் மனத்தில் இவ்வாறு பல நுண்ணிய அடுக்குகள் உள்ளன.

ஒவ்வொருவருக்கும் தனித் தனிக் கனவு தோன்றுகிறது. ஆகவே அது தனிப்பட் மனிதனுக்குரிய அசேதன மனத் திலிருந்து எழுகிறது.

உலகம் சமூக மனத்திலிருந்து உதயமாகிறது. ஆகவே உலகப் பொருள்கள் குறித்து நமக்குள் தகராறு மூள்வதில்லை. நம்மிடையே ஒத்துப்போதல் நிகழ்கிறது. ஒரு மேஜையைப் பார்க்கும் பத்து பேர் அதை மேஜையென்றே ஒத்துக்

கொள்வார்கள். அவர்கள் எல்லோருக்கும் அது மேஜையாகவே தெரிகிறது. இதனால்தான் நீதிமன்றத்தில் சாட்சியத்திற்குச் சிறப்பிடம் தரப்படுகிறது. பத்து பேர் ஒரேமாதிரி சாட்சியம் சொன்னால் விஷயம் முடிந்துபோகிறது. வேறு சான்று தேவையில்லை. ஏனெனில் அவர்கள் கண்ணால் கண்டவர்கள் (சாட்சி-ச+அட்சி-கண் உடையவர்கள்).

உலகம் ஒரு கனவு. இதை ஆமோதிக்கும் சாட்சிகள் பலருண்டு. நீ காணும் கனவு உனக்கு மட்டுமே சொந்தம். அதில் தெரியும் உலகை இரண்டாம் மனிதர் காண முடியாது. அசேதன மனத்திற்கும் சமூகமனத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு இதுதான்.

மூட மனிதன் தன் செயல்களுக்காகக் கவலைப்படுவது ஒருபுறமிருக்க, தான் செய்யாதவற்றிற்காகவும் தன்னைக் குழப்பிக்கொள்வான். சராசரி மனிதனும்கூட தான் செய்யாத ஒன்றிற்காக அதைச் செய்ததுபோல் உணர்வதுண்டு.

**நீ**திமன்றத்தில் போலீஸ் தரப்பில் வழக்கு. இரு மனிதர்கள் ஒருவரையொருவர் தாக்கிப் பலத்த காயம் உண்டாக்கி விட்டனர். நீதிபதி காரணம் கேட்டார். அவர்கள் சிரித்தனர்! "ஐயா, நாங்கள் இருவருமே குற்றவாளிகள். காரணம் கேட்காதீர்கள். மண்டையை உடைத்ததற்கான தண்டனை மட்டும் கொடுங்கள்," என அவர்கள் வேண்டினர்.

"அதெப்படி முடியும்? உங்களுக்குள் சண்டை போட்டீர்கள் என்பது தெரிகிறது. என்ன காரணத்துக்காகச் சண்டை போட்டீர்கள்? யார் முதலில் தாக்கியது! யாருக்கு எவ்வளவு காயம் பட்டிருக்கிறது? இதெல்லாம் தெளிவானபின்தானே தண்டனையை முடிவு செய்து தீர்ப்பு வழங்க முடியும்?" என்று நீதிபதி சுட்டிக்காட்டினார்.

அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் "நீ சொல்லு," என்று உசுப்பினர். நீதிபதி கோபம் கொண்டார். "என் கேள்விக்குப் பதில் கூறாவிடில் நீதிமன்ற அவமதிப்பிற்காக இருவருக்கும் கூடுதல் தண்டனை விதிக்கப்படும்," என்று அவர் மிரட்டினார்.

வேறு வழியின்றி அவர்கள் நடந்த சம்பவத்தை மாற்றி-மாற்றிச் சொன்னார்கள்.

இருவரும் நீண்ட கால நண்பர்கள். ஒருவன் தான் எருமை மாடு வாங்க நினைப்பதாகச் சொன்னான். அதற்கு இரண்டாமவன், "நீ மாடு வாங்காதே. ஏனென்றால் நான் தோட்டம் வாங்கப் போகிறேன். உன் மாடு என் தோட்டத்துக்குள் நுழைந்தால் நமக்கிடையே தகராறு வரும். அது எதில் போய் முடியுமோ தெரியாது. எருமையை வாங்கி நம் நட்பைச் சிதைக்காதே," என்று எச்சரித்தான்?

முதலாமவனுக்கு ஆத்திரம் வந்தது? "நீ யார் என்னை மாடு வாங்குவதிலிருந்து தடுப்பதற்கு. நீ ஏன் தோட்டம் வாங்குகிறாய்? நம் நட்பு முக்கியமென நீ நினைத்தால் தோட்டம் வாங்கும் எண்ணத்தைத் துற. நான் மாடு வாங்கத்தான் போகிறேன். வாங்கிவிட்டதாக நினைத்துக்கொள்," என்றான் திமிராக.

இரண்டாவன் தரையில் ஒரு கட்டம் போட்டான். "இதோ என் தோட்டம். எங்கே உன் எருமையை உள்ளே நுழையவிடு பார்க்கலாம்," என்று சவால்விட்டான். முதலாமவன் தன் விரலை மெதுவாகக் கட்டத்தில் நுழைய வைத்தபடி, "இப்போ நீ என்ன செய்துவிடுவாய்?" என்று பதில் சவால்விட்டான்.

இன்னமும் வாங்காத மாட்டின் சார்பாகவும், வாங்காத தோட்டத்தின் சார்பாகவும் இருவரும் முட்டி மோதி மண்டையை உடைத்துக் கொண்டனர்.

இதுபோல் நீயும் சிலசமயம் ஒருவிஷயம் முதிர்ந்து வடிவம் எடுக்கும் முன்பே கற்பனையில் அது நடைபெற்றுவிட்டதாகவே நினைத்து வம்பில் சிக்கிக்கொள்கிறாய்.

ஞானி எல்லாச் செயல்களையும் புரிந்தும் சாந்தமாக இருக்கிறான். உன் உடலில் பாரம் இருப்பதுபோல் உணர்ந்தால் நீ எச்செயல் புரிந்தாலும் எரிச்சலைடைவாய். ஞானியோ தனக்குள் வெறுமையை (சூன்யத்தை) உணர்கிறான். எடையில்லாதது போன்ற அந்த நிலையில் அவனால் எழுவது, உட்காருவது, நடப்பது, பேசுவது, வேலைபார்ப்பது என்று எச்செயலையும் படபடப்பின்றி, சுலபமாக, இயற்கையாகச் செய்யமுடிகிறது.

“ஞானி தன் நடவடிக்கைகளில் சுகமாக உட்காருகிறான்; சுகமாக வருகிறான்-போகிறான்; சுகமாகப் பேசுகிறான்; சுகமாகச் சாப்பிடுகிறான்! **(சுலோகம் 235)**

சுலோக நடையில் சூத்திரங்களாக எழுதப்பட்டுள்ள ஒவ்வொரு கதையின் ஆரம்பத்திலும் கூறப்படும். ஒரே மாதிரி யான வரிகள் படிப்பவர்களைத் திகைப்பில் ஆழ்த்துகின்றன. என்னைச் சந்திக்க வந்த புத்தபிட்சு ஒருவர் இதைக் குறிப்பிட்டார்.

‘பகவான் வந்தார். அவரது நடையில் சாந்தம் தெரிந்தது. மூச்சு சீராக மிக அமைதியாக வெளிப்பட்டது. அவர் சுகமாக ஆசனத்தில் அமர்ந்தார். கண்களை மூடிக்கொண்டார். எங்கும் அமைதி நிலவியது. சற்றுத் தாமதித்து நிதானமாகப் பேசத் தொடங்கினார்.’ இந்த வரிகள் எதற்காக என்று என்னிடம் அந்த பிட்சு கேட்டார்.

நான் தெளிவுபடுத்தினேன்: “பின்னால் வரும் சூத்திரங்கள் இரண்டாம் பட்சம்தான். இந்த வரிகளுக்குத்தான் முதல் இடம். யாரிடமிருந்து இந்த சூத்திரங்கள் பிறக்கின்றனவோ அவரைப் பற்றிதான் முதலில் கூற வேண்டும். நீங்களும் இதே சூத்திரங் களைக் கூற முடியும். அதில் பெரிய பிரச்சினை இல்லை. அவை உங்களுக்குத் தெரியும்தான். ஆனால் புத்தரைப்போல் உங்களால் எழுந்து நிற்கவோ, உட்காரவோ முடியாது. புத்தரைப் போல் உங்களால் நிதானமாக மூச்சிழுத்து விடமுடியாது.”

ஜென் புத்தமதத்தைச் சேர்ந்த ஒரு பிட்சு மனநோய் மருத்துவரும்கூட. அவர் ஜென் தியான முறை பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார். ஜென் தியான முறை மூலம் மூளைக்கோளாறு களை எப்படி குணப்படுத்துவது என்பதை விளக்கியுள்ளார். சிகிச்சை முறைகளின் ஆதாரமென்று அவர் மூச்சின் நடையை (கதியைக்) குறிப்பிடுகிறார். சுவாசம் சாந்தமாக இருந்தால் சித்தமும் சாந்தமாக இருக்கும் என்கிறார் அவர்.

நாம் பொதுவாக ஒரு நிமிடத்தில் 16 முதல் 20 முறை மூச்சு விடுகிறோம். ஜென் துறவி படிப்படியாக அந்த எண்ணிக்கையைக் குறைக்கப் பயிற்சி எடுக்கிறார். ஒரு நிமிடத்துக்கு 5 என்ற

அளவுவரைகூட மூச்சுவிடுவது குறைக்கப் படுகிறது. அந்தக் கட்டத்தில் தியானம் தொடங்குகிறது?

அந்த தியானம் பலனளிக்கிறது. ஏனெனில் மூச்சின் எண்ணிக்கை குறைந்ததால் மனத்தில் தோன்றும் எண்ணங்களும் குறைந்துவிடும். எண்ணங்கள் மிகுதியாக இருந்தால் சுவாசத்தின் எண்ணிக்கையும் அதிகரிக்கிறது. கோபத்தால் வெறிபிடித்தது போன்ற நிலையில் சுவாசம் தாறுமாறாக நடக்கும். ஜென் துறவி ஒருவரின் மூளையில் ஒரு கருவி பொருத்தப்பட்டு இவ்வாறு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஜென் துறவிகள் மூச்சு மிகவும் நிதானமாக நிகழ வேண்டும் என்று கூறுகின்றனர். அப்போது மூக்கின் அருகே பறவையின் இறக்கையை வைத்தால் அது அசையாத அளவு மூச்சு நிதானம் தேவை என்கின்றனர். பிறகு அதையும் குறைத்து தியான சமயம் மூச்சு நின்றுவிட்டது போன்ற நிலைக்கு வரவேண்டும். சில சமயம் சாதகர் தான் இறந்துவிட்டதாகக்கூட அஞ்சுவார்.

தியானத்தில் உடலும் முழுமையாக மனத்துடன் பொருந்தும். மனம் அமைதியாக இருந்தால் உன் உடலும் அமைதியில் மூழ்கியிருக்கும். நீ நடப்பதில், உட்காருவதில், உன் பேச்சில், நீ எதையும் கேட்பதில்கூட தியானத்தின் சாந்தம் பிரதிபலிக்கும்.

தியானம் என்பது ஏதோ ஒரு மணி நேரம் கண்களை மூடியபடி இருந்துவிட்டு எழுந்துவிடுவதுடன் முடிந்துவிடுவ தில்லை. உண்மையான தியானம் உனது தின்சரி வாழ்க்கையின் 24 மணிநேரமும் பரவியிருக்கும். அப்போது உன் தூக்கத்தில்கூட பரம சாந்தம் நிலவும்.

ஞானி எதையும் சுகமாக, சரளமாக, அநாயாசமாகச் செய்கிறான். இது சுகாசனம் என்னும் யோக வகை ஆசனமில்லை. இது ஞானிக்கு அமைந்துவிட்ட இயற்கையான மனநிலை. நீயோ தியான சமயம்கூட சுகமாக உணர்வதில்லை. பிரார்த்தனை செய்யும்போதுகூட படபடப்பாக இருக்கிறாய். ஞானியின் விஷயம் வேறு. கடல்நீரை எங்கெடுத்துப் பருகினாலும் உப்புக் கரிக்கும்.

அதுபோல் எந்த சூழ்நிலையிலும் ஆனந்தம், சாந்தம், பிரகாசத்துடன் விளங்குவான். உன்னால் பதற்றமின்றி உட்காரக்கூட முடியவில்லை. நீ நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் போதுகூட நடப்பதுபோல் காலை ஆட்டிக்கொண்டே இருக்கிறாய். அதை நீ கவனிக்காவிடிலும் அது உன் மனம் அமைதியின்றி இருப்பதன் பிரதிபலிப்புதான்.

புத்தரின் உபதேசம் கேட்டபடி இருந்த ஒருவனது கால் கட்டைவிரல் அசைந்தாடியது. புத்தர் பேச்சை நிறுத்தி அவனிடம் கட்டைவிரல் அசைவதன் காரணம் கேட்டார். உடனே கட்டை விரல் அசைவது நின்றது. புத்தர் ஏன் அசைவது நின்றது என்றும் கேட்டார். அவன் இரண்டிற்கும் தனக்கு காரணம் தெரியவில்லை என்றான்.

"உன் கட்டைவிரல் பற்றி உனக்கத் தெரியாதா? நீ விழிப்புடன் இருக்கிறாயா, பாதித் தூக்கத்தில் உள்ளாயா?" என்று புத்தர் மிரட்டுவதுபோல் கேட்டார்.

"சுவாமி! என்னை மன்னியுங்கள். என்னால் பதில்கூற முடியவில்லை. ஏனென்றால் என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை." என்று அந்த மனிதன் பரிதாபமாகச் சொன்னான்.

உன் மனத்தில் படபடப்பு இருந்தால் உடலில் நடுக்கம் தெரியும். கட்டைவிரல் சுயமாக அசையவில்லை. உள்ளே காய்ச்சல்போல் உனக்குள் கொதிப்பு இருக்கிறது. தண்ணீர் கொதி நிலையைத் தாண்டினால் கெட்டிலின் மூடி அசைவதைப்போல், உனக்கு உணர்ச்சிக் கொந்தளிப்பு அதிகரிக்கையில் அதை எப்படியாவது வெளியேற்ற வேண்டியுள்ளது. அதற்காக முதுகைச் சொறிவாய், தலையைச் சொறிவாய், கைவீசுவாய், கொட்டாவி விடுவாய், விரலை ஆட்டுவாய், புரண்டு படுப்பாய், இப்படி ஏதாவது செய்வாய். இதனால் மனத்தில் திரண்ட மிகையான சக்தி சற்று வெளியேறுகிறது. மனமும் உடலும் சற்று இலேசாகின்றன.

சிறுவர்களால் ஒரு நிமிடம்கூட ஒய்வாக உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவர்களுக்குத் துருதுருவென்று ஏதாவது செய்தபடி இருக்க வேண்டும். ஏனெனில் அவர்கள் மனத்திலும்

உடலிலும் சக்தி நிரம்பிக்கிடக்கிறது. அம்மா பிரட்டிக் சிறுவனை நாற்காலியில் ஆடாமல், அசையாமல் உட்கார்ந்திருக்கச் செய்கிறாள்.

இப்படி எவரும் உட்காருதல் வெளிப்புற நடவடிக்கைதான். நீ உனக்குள்ளேயும் அமைதியாக உட்கார்ந்திருக்க வேண்டும். அப்போது உனக்குள் சுகத்தின் ஒளி பரவும். இதனால் கிடைக்கும் சுகம் உன்னுடன் மட்டும் நின்றுவிடாது. உனது நிழலில் வருபவர்கூட சுகமாக உணர்வார். உன்னருகில் வருபவர்கள் உனது குளிர்ச்சியால் தாங்களும் இதமாக உணர்வார்கள்.

நீ சிலரிடம் சென்றால் படபடப்பாக உணர்கிறாய். வேறு சிலரிடம் சாந்தமாக உணர்கிறாய். சிலரை அடிக்கடி சென்று சந்திக்க வேண்டும் என்று தோன்றுகிறது. சிலரை தொலைவில் தெரிந்தாலே பார்க்காமல் ஒளிந்துகொள்ள முயல்கிறாய். சிலரை ஒரு முறை சந்தித்துவிட்டால் பிறகு சந்திப்பதில் விருப்பம் ஏற்படுவதில்லை. சிலரை முதல் பார்வையிலேயே பிடித்துப் போகிறது. நிரந்தரமாகப் பிடித்துப்போகிறது. காதலில் இப்படித் தானே நிகழ்வதாகச் சொல்கிறார்கள்!*

குறிப்பிட்ட ஒருவனிடமிருந்து அவன் உன்னை உதைத்தது போல் விலகுகிறாய். இன்னொருவன் உன்னைக் கவர்ந்திழுக் கிறான். ஒருவனை நெருங்கினால் சுகமாகத் தோன்றுகிறது. இன்னொருவனிடம் சென்றால் உனது பாரமெல்லாம் இறங்கிவிட்டதுபோல் இலேசாக உணர்கிறாய். சிலரிடம் பழகினால் தலைவலிக்கத் தொடங்குகிறது! அவரைப் பார்க்காமலே இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. அவரைப் பார்த்ததால் 'மூடு' கெட்டுப் போனதாக வருந்துகிறோம். ஏனெனில் அவர் தன் துன்பங்கள், வேதனைகள், கவலைகள் முதலியவற்றை உன் தலைக்கு இடமாற்றம் செய்துவிடுகிறார்.

ஒவ்வொருவரைச் சுற்றியும் விதம்விதமான அலைகள் பரவிக்கிடக்கின்றன. அந்த எல்லைக்குள் நீ போனால் அவற்றின் நல்ல அல்லது கெட்ட பாதிப்பிலிருந்து நீ தப்ப முடியாது.

* Who ever lov'd, that lov'd not at first sight? (Marlowe)

இதனால்தான் சத்சங்கம் என்பது சமூகத்திலும் ஆன்மிகத்திலும் உயர்ந்த இடம் பெற்றுள்ளது. எனவே நாம் சாந்தமான மனிதர்களுடனேயே பழக முயலவேண்டும். அவர்களின் சாந்தம் நம்மையும் தொற்றிக்கொள்ளும்.

ஞானி சாதாரணமான அன்றாடச் செயல்களிலும்கூட எந்த உரசலுமின்றி மென்மையாக விளங்குவதைக் காணலாம். அவன் சும்மா உட்கார்ந்திருந்தாலும் அவனைச் சுற்றிலும் சக்தி பிரவாகம் சூழ்ந்திருக்கும்.

அறிவிலி சுகத்தின் நடுவிலும் துக்கத்திற்கான தயாரிப்பு களில் ஈடுபட்டிருப்பான்; துக்கத்தின் விதைகளை நட்டுக் கொண்டிருப்பான்.

ஒரு தையற்காரர். ஏழை. எனினும் மாதம் ஒரு ரூபாய்க்கான லாட்டரி சீட்டு வாங்குவார். பல்லாண்டுகளுக்குப் பின் அவருக்கு லாட்டரியில் பத்து லட்ச ரூபாய் விழுந்தது. கடையை மூடினார். சாவியைக் கிணற்றில் எறிந்தார். வாழ்க்கையில் இஷ்டப்படி ஆட்டம்போடலானார். குடிப்பழக்கம், சூதாட்டம், பரத்தையருடன் கொண்டாட்டம் என்று ஒரே ஆண்டில் மொத்தத் தொகையும் தீர்ந்துவிட்டது. வறுமை மட்டுமல்ல, பல நோய்களாலும் பாதிக்கப்பட்டார்.

புதிதாகச் சாவி தயாரித்து, கடையைத் திறந்து மீண்டும் தொழிலைத் தொடங்கினார். பழக்க தோஷம் காரணமாக மீண்டும் மாதம் ஒரு ரூபாய்க்கு லாட்டரிச் சீட்டு வாங்கினார். சிறிது காலம் சென்றபின் அவருக்கு மீண்டும் பத்து லட்ச ரூபாய் பரிசு விழுந்திருந்தது! இம்முறை தையற்காரர் சந்தோஷப்படவில்லை. எல்லா கெட்ட பழக்கங்களும் மீண்டும் வந்துவிடும்; முன்பைவிட நோய் அதிகரிக்கும் என்று அவர் நடுங்கினார்.

நீ உன்னை அறிவிலி என்று நினைக்காவிடிலும், உன் வாழ்க்கையிலும் சுகமானவை நிகழும்போது உடனே ஏதாவது துன்பங்களையும் கற்பனை செய்து உன்னால் கலங்காமல் இருக்க முடிவதில்லை. நாம் எல்லோருமே சுகத்தை முழுமையாக அனுபவிக்கத் தெரியாதவர்களாகத்தான் இருக்கிறோம்.

துன்பம் பணத்தில் இல்லை பணம் க்ாசு கவலையை உண்டாக்கும் என்று கூறுபவன் அறிவற்றவனாக இருப்பான். துன்பம் இருப்பது உன்னிடம்தான். உன் மூடத்தனத்தில்தான் துன்பம் உறைகிறது. எப்போதும் சோகமாக இருப்பது, எவ்வளவு செல்வம் சேர்ந்தாலும் சலிப்புடன் இருப்பது உனக்குப் பழக்கமாகிவிட்டது. வேடிக்கை என்னவென்றால், பணக்காரன் துன்பப்படும் அளவிற்கு ஏழை துன்பப்படுவதில்லை. ஏழை அடிப்படைத் தேவைகள் பூர்த்தியானாலே திருப்தி அடைகிறான். பணக்காரன் எத்தனை வசதிகள் பெற்றிருந்தாலும் திருப்தியின்றி மன இறுக்கத்தால் கஷ்டப்படுகிறான்.

பணத்தினால் துன்பம் தோன்றுகிறது என்று சொல்பவனுக்கு சுகத்தையும் துன்பத்தின் ஒரு வகையாகப் பார்க்கும் பழக்கம் இருந்திருக்கும். ஜனகரிடமும் கிருஷ்ணரிடமும் செல்வம் மலை போல் குவிந்திருந்தது. ஆனால் அவர்கள் சோகமாக இருந்ததாகச் செய்தி இல்லை. எல்லாமே சுகமே, எதுவும் சுகம் என்று எடுத்துக்கொள்பவன் வறமையிலும் பொறுமையாக இருப்பான்.

பணத்தைக் கண்டால் பயந்து ஓடு என்று நான் தூண்ட மாட்டேன். அது ஒரு சக்தி. சக்தி கையில் வந்தால் மனிதன் கெட்டுப்போவான் என்று பொதுவாக ஒரு கருத்து நிலவுகிறது. ஆங்கில அறிஞர் ஃப்ரான்ஸிஸ் பேகன் அவ்வாறே கூறியுள்ளார்.* இது தவறு. உன்னிடம் அடிப்படையில் கெட்ட ஆசை இருந்திருக்கும். சக்தி (பணம், பதவி) அந்த குணம் வெளிப்பட வாய்ப்பாக அமைகிறது.

காந்திஜியைப் பின்பற்றியவர்கள் சத்திய வேட்கை உடையவர்களாக, சமூக சேவை செய்பவர்களாக, ஒழுக்க சீலர்களாக இருந்தனர். சுதந்திரம் கிடைத்து ஆட்சி செய்யும் சக்தி கிடைத்தபின் அவர்களில் பலர் கெட்டுப் போனார்கள். நாற்காலியின் காரணமாக அவர்கள் தடம் புறளவில்லை. அடிப்படையிலே அவர்களிடம் கெட்ட அம்சங்கள் இருந்துள்ளன. பணமும் பதவியும் அவர்களது கெட்ட இயல்பு வெளிப்பட வசதி செய்து கொடுத்தன.

---

* Power corrupts and absolute power corrupts absolutely.

ஞானி கடை வைத்திருந்தாலும் அதில் சாந்தமாக விளங்கு வான். அறிவிலி கோயிலில் அமர்ந்திருந்தாலும் படபடப்புடனும் கவலையுடனும் காணப்படுவான். ஞானி கடையிலும் உட்கார்ந் திருப்பான். அதேசமயம் அவன் தனக்குள்ளும் சுகமாக உட்கார்ந்திருப்பான். ஞானி கடை நடத்துவதில் முரண்பாடு இல்லை.

அறிவிலிதான் கடையில் இருக்கும்போது கடவுள் நினைவு எழுவதில்லை என்று புலம்புவான். எந்தக் கடையும் இல்லாத இடத்திற்குப் போனால்தான் நான் ஆத்ம சிந்தனையில் ஈடுபட முடியும் என்பான். ஆனால் அவன் எங்கே போனாலும் அறியாமையும் அவனுடன் சேர்ந்துதானே வரும்.

முல்லா நஸ்ருத்தீன் தன் கழுதையிலிருந்து கீழே விழுந்தார். அவர் சமாளித்து மீண்டும் ஏறியதும் கழுதை ஆஸ்பத்திரி உள்ள திசையில் சென்றது. இதை பார்த்தவர்கள் வியப்பிலாழ்ந்தனர். சிறிது நேரத்தில் நஸ்ருத்தீன் வீடு திரும்பினார். சந்திக்க வந்தவர்கள் அவருக்கு இலேசாகத்தான் அடிபட்டதற்காக மகிழ்ச்சி தெரிவித்தனர். சிலர் கழுதையைப் பாராட்டினர். "கழுதை புத்தி என்று மட்டம் தட்டுகிறார்களே. உன் கழுதை எவ்வளவு புத்திசாலியாக உள்ளது! உன்னை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக் கொண்டு போனதே," என்று கழுதையைப் புகழ்ந்தனர். நஸ்ருத்தீன் எரிச்சலுடன் சொன்னார், "ஆமாம், பெரிய புத்திசாலிக் கழுதைதான். எந்த ஆஸ்பத்திரிக்குத் தெரியுமா? அதற்குப் பழக்கமான கால்நடை வைத்தியசாலைக்குத்தான்."

அறியாமையிலிருந்துதான் விடுபட வேண்டுமே தவிர குடும்பத்திலிருந்து ஓடிப்போவது பயன் தராது. அறியாமையி லிருந்து விடுபட்டால் உலகப் பற்று சுயமாகவே நீங்கிவிடும். அறியாமை மிஞ்சியிருந்தால் காசிக்குப் போனாலும், கங்கையில் நீராடினாலும் லாபமில்லை.

'ஞானி தனது சுபாவம் காரணமாக, தன் நடவடிக்கைகளில் சாதாரணமான மக்களைபோல் நடந்துகொள்வதில்லை. சலனமற்ற மானசரோவரம் ஏரிபோல் அவன் கவலைகளின்றி இருப்பதால் அவன் பொலிவுடன் காணப்படுகிறான்.' (சுலோகம் 236)

ஞானி வேண்டுமென்று குறிப்பிடும் விதமாக நடந்து கொள்வதில்லை. சுபாவமாகவே அவனது நடத்தை மற்றவர்களிடமிருந்து வித்தியாசப்படுகிறது. அவன் இயல்பாகவே சாந்தமாக இருக்கிறான். நாமோ சாந்தமாக இருக்கக் கடும் முயற்சி செய்யவேண்டியுள்ளது. அப்படி வலுக்கட்டாயமாகப் பெறப்பட்ட சாந்தம் வெளியுடலில் பிரதிபலித்தாலும் மனத்தில் கொந்தளிப்பு நீடிக்கும்.

முல்லா நஸ்ருத்தீன் ஒருமுறை ஒரு கோழியைத் திருடிவிட்டார்! கைது செய்யப்பட்டார் அவர். நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டது. வக்கீல் குற்றச்சாட்டிற்கு என்ன பதில் சொல்ல வேண்டும், எப்படிச் சொல்ல வேண்டும் என்றெல்லாம் கற்றுக்கொடுத்தார். பதிலை மனப்பாடம் செய்வித்தார். திருப்பி ஒப்பிக்கவும் சொன்னார்.

வழக்கு நடந்தது. வக்கீல் சொன்னதை நஸ்ருத்தீன் எழுத்து மாறாமல் அப்படியே திருப்பிச் சொன்னார். நீதிபதி பல கேள்விகள் கேட்டார். எதிர்த்தரப்பு வக்கீலும் கேள்விகள் கேட்டு மடக்கினார். ஆனால் நஸ்ருத்தீன் அசைந்து கொடுக்கவில்லை. ஏற்கெனவே அவர் சில முறை பிறர் கோழிகளைத் திருடியவர். ஊரில் அவருக்குக் கோழித் திருடன் என்று பெயருண்டு. நீதிபதிக்கு இந்த விவரம் தெரியும். ஆனால் நஸ்ருத்தீன் வலுவான வாதங் களை ஒப்பித்ததால் நீதிபதி அவரை தண்டிக்க முடியவில்லை. "நஸ்ருத்தீன், உமக்கு விடுதலை. நீர் போகலாம்," என்று தீர்ப்பளித்தார்.

ஆனால் நஸ்ருத்தீன் புறப்படாமல் நின்றார். அதைப் பார்த்து நீதிபதி, "உம்மைப் போகச் சொன்னேனே. இன்னும் என்ன சந்தேகம்?" என்றார். "அப்படின்னா கோழியை நானே வச்சுக்கிட லாமா, எஜமான்," என்று அப்பாவியாகக் கேட்டார் நஸ்ருத்தீன்!

உள்ளே செல்வது வெளிப்பட்டாக வேண்டும். திருட்டுத் தனத்தை எவ்வளவு காலம் மறைக்க முடியும்? வக்கீல் சொல்லிக் கொடுத்தது பயனின்றிப் போனது. ஒரு விஷயத்தை மறைக்க மேலேயிருந்து எவ்வளவு திணித்தாலும் குட்டு ஒருநாள் வெளிப்பட்டே தீரும்.

அறிஞர் குர்ஜியேஃப் தன்னுடன் ஒரு மனிதன் மூன்று மணி நேரம் தங்கினால் போதும். அவனது உண்மையான குணத்தைக் கண்டுபிடித்து விடுவேன் என்கிறார். ஏனென்றால் அவ்வளவு நேரம் ஒருவனால் நல்லவனாகவோ, கெட்டவனாகவோ நடிக்க முடியாது என்கிறார்.

ஒருவரை நீ அடிக்கடி சாலையில் பார்க்கிறாய். வணக்கம் தெரிவிக்கிறாய். அவரைப் பண்பாளர் என மதிப்பிடுகிறாய். அந்த ஒரு நிமிடச் சந்திப்பில் அவர் தன்னைச் சுதாரித்துக் கொள்ள முடியும். உன்னைப் பார்த்துப் புன்சிரிப்பு சிரிக்கக்கூடும். அவரது முகத்தில் மகிழ்ச்சியும் தெரியலாம். நெருங்கிப் பழக வாய்ப்புக் கிடைத்தால்தான் உண்மை நிலவரம் தெரியும்.

காதல் பிறக்கும்போது ஆணும் பெண்ணும் ஒருவரை மற்றவர் மிகையாக மதிப்பிடுகின்றனர். தங்கள் காதலைப்போல் இதுவரை உலகத்தில் ஏற்பட்டதில்லை, இனியும் ஏற்பட முடியாது என்று இறுமாப்புக் கொள்கின்றனர்.

இதுவரை விண்ணில் பறப்பதுபோல் உணர்ந்த அவர்கள் திருமணத்திற்குப்பின் தரையில் இறங்குகின்றனர். இதுவரை அவர்களைப் பிணைத்திருந்த கவர்ச்சி என்னும் பிளாஸ்தர் உதிருகிறது. காதல் கசந்து காணாமல் போகிறது.

ஞானி எந்த சூழ்நிலையிலும் தன் சுபாவத்திலிருந்து மாறமாட்டான் கும்பல் சுயசிந்தனையின்றி இயங்குவதுபோல் அவன் நடந்துகொள்ள மாட்டான். அவன் தன் தனித்தன்மையை என்றும் இழப்பதில்லை. பிறருடன் ஒத்துப் போவதற்காக அவன் தன் ஆளுமையில் மாற்றம் செய்துகொள்வதில்லை. இதனால் சிலருக்கு அவனைப் பிடிப்பதில்லை. அதை அவன் பொருட் படுத்துவதில்லை.

ஆகவே கும்பல் ஞானிமீது எப்போதும் கோபமாக இருக்கிறது. அவர் இறந்தால் அமர்க்களமாக அடக்கம் செய்வதும், ஆராதனை செய்வதும் வேறு விஷயம். ஏனெனில் இறந்துவிட்ட ஞானியால் அபாயம் ஏதுமில்லை. அவர் உயிருடன் இருக்கும்போது கும்பல் அவருடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்துத்

தாழ்வு மனப்பான்மை கொள்கிறது. ஞானியான தங்கத்தின் முன்னிலையில் தான் பித்தளை மட்டுமே என்று கும்பல் அவமானமாக உணர்கிறது.

மகாவீரர் ஆடையின்றி நிர்வாணமாக நின்றார் என்று கூறப்படுகிறது. அதற்கு அப்படியே அர்த்தம் எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. அவர் நிஜமாக, சுபாவமாக எப்படியிருந்தாரோ அந்த நிலையிலேயே நீடித்தார் என்று அர்த்தம் கொள்ளலாம். அதாவது, அவர் தன் சுபாவப்படி போவாரே தவிர, கூட்டத்தைப் பின்பற்ற மாட்டார். மகாவீரர், புத்தர் போன்றவர்கள் தங்களை தரிசிக்க வருபவர்களுக்கு ஏற்றபடி தோன்றவும் நடந்து கொள்ளவும் முயன்றதில்லை. ஆனால் பின்னாளில் அவர்களின் கொள்கைகள் மதமாக வளர்ந்து, மடங்கள் அமைந்தபோது அவற்றின் தலைவர்கள் பக்தர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிக் கொள்வதற்காக, பக்தர்களின் எதிர்பார்ப்பிற்கேற்ற தோற்றம் எடுத்துக் கொண்டனர் பக்தர்கள் எதிர்பார்த்த ஆச்சாரங்களை (நடத்தை விதிகளைக்) கடைப்பிடித்தனர்.

ராமருக்கும் கிருஷ்ணருக்குமுள்ள வேறுபாடு கவனிக்கத் தக்கது. ராமர் மரியாதை எல்லைகளை மீறியதில்லை. அவர் சமூகத்திற்கேற்றபடி நடந்துகொண்டார். கிருஷ்ணர் தன் சுபாவப்படியே சென்றார். அவர் சுதந்திரமானவராக விளங்கினார். ராமர் பண்பாளர், கண்ணியமானவர் என்ற முறையில் நாட்டு மக்களால் மதிக்கப்பட்டவர்.

ராமரை, ராமர் வாழ்ந்த விதத்தை மக்கள் முழுமையாக ஏற்றுக்கொள்கிறார்கள். ஆனால் கிருஷ்ணரின் வாழ்க்கையை முழுமையாக ஏற்றுக்கொள்வதில் சங்கடமுள்ளது. பக்தர்கள் பிரிந்து கிருஷ்ணரின் வாழ்வில் தங்களைக் கவர்ந்த பகுதியை மட்டும் தனி வழிபாட்டு சம்பிரதாயமாக உருவாக்கியுள்ளனர். உதாரணமாக, இந்திக் கவிஞர் சூர்தாஸ் கிருஷ்ண பக்தி இலக்கியத்தில் தலைசிறந்தவராகப் போற்றப்படுகிறார். ஆனால் அவர் கிருஷ்ணரின் பால லீலைகளை மட்டும் வர்ணிப்பதுடன் நிறுத்திக் கொண்டார். இள்ளஞன் கிருஷ்ணனை அவர் பாடுபொருளாக எடுத்துக்கொள்ளவில்லை. கோபியர்களுடன்

கிருஷ்ணன் கேளிக்கைகள் புரிந்ததை வர்ணிப்பது துறவியான அவருக்கு கஷ்டம் தந்தது.*

மகாத்மா காந்திக்கு கீதை கிருஷ்ணரைத்தான் பிடிக்கும். பாகவதத்தில் வரும் கிருஷ்ணர் பெண்கள் நடுவிலேயே அதிகம் வாழ்ந்தவர் என்பதால் காந்திஜி அவரை ஆபத்தானவராகக் கருதினார். ஆனால் பகவத்கீதை கிருஷ்ணர் என்ன செய்கிறார். உபதேசச் சொற்பொழிவு மட்டும்தானே செய்கிறார். அந்நூலில் அவரது வாழ்க்கை பற்றி ஒரு குறிப்பும் கிடையாதே. காந்திஜி கீதாகிருஷ்ணனையும் முழுமையாக ஒப்புக்கொள்ளவில்லை. அகிம்சாவாதியான அவர் கிருஷ்ணர் அர்ச்சுனனைப் போரிடத் தூண்டுவதை எப்படி ஆதரிக்க முடியும்?

ஆகவே காந்திஜி மழுப்பலாக பாரதப் போர் ஓர் உருவகம் மட்டுமே என்கிறார். போர் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கு மிடையே நடந்ததாக எடுத்துக்கொள்வதற்குப் பதிலாக அவர் நல்ல சக்திகளுக்கும் தீயசக்திகளுக்கும் இடையே நடந்த போர் என்று கற்பனைசெய்யச் சொல்கிறார். போரிடுதல் மட்டுமல்லாமல் போர் தொடங்கத் தூண்டுதல் தருவதும் அகிம்சைக்கு எதிரானது. போரிடத் தூண்டுவதையும் பாவச்செயல் என்று காந்திஜி எழுதியும் பேசியும் வந்தார்.

அகிம்சை மட்டுமல்ல, கிருஷ்ணர் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் அடங்கியவர் அல்லர். அவர் சமூகக் கட்டுப்பாடுகளுக்கும் அடங்கியிருக்கவில்லை. அவர் முழுமையான சுதந்திரத்துடன் வாழ்ந்தார். வாழ்க்கையை வளைக்காமல் அது தனது இஷ்டப்படியே நடைபெற விட்டுவிட்டார்.

காந்திஜி ‘கீதை என் தாய்’ என்றார். ஆனால் இறக்கும் தருணத்தில் அவர் ‘கிருஷ்ணா’ என்று கூப்பிடவில்லை. ‘ஹே ராம்!’ என்ற இரண்டு சொற்கள்தாம் அவரது வாயிலிருந்து கேட்டது. வாழ்நாள் முழுதும். எப்பெயர் மனத்தில் ஆழ்ந்து பதிந்துள்ளதோ அதுவே மரணத்தின்போது தன்னிச்சையாக

* தவத்திரு குன்றக்குடி அடிகளார் திருக்குறளுக்கு அரியதோர் உரை படைத்துள்ளார். ஆனால் காமத்துப்பாலை அவர் தொடவே இல்லை என்பது ஒப்பிடத்தக்கது.

வெளிவரும். இது ஆன்மிகத்திலும் மனத்தத்துவத்திலும் பொதுவாக உள்ள கோட்பாடு.

'அறிவிலியின் வைராக்கியம் அவன் எதையும் விடுதலில் (பரிக்கிரகம்) காட்டும் தீவிரத்தில் தெரியவரும். ஆனால் ஆசைகளெல்லாம் உடலில் கரைந்து மறைந்துவிட்ட நிலையில் உள்ள ஞானிக்கு விருப்போ, வெறுப்போ இருக்க முடியாது.' (சுலோகம் 238)

அறிவிலி ஆரம்ப காலத்தில் பணத்தைக் கெட்டியாகப் பிடித்தவனாக இருப்பான். பிற்காலத்தில் பணத்தை உதறி எறியச் சொல்லுவான். ஆனால் இரண்டு நிலைகளிலும் பணத்தின் மீதுதான் பார்வை பதிந்துள்ளது. முதலில் தங்கத்திற்காக அலைகிறான். பிறகு தங்கத்தை ஒரு மண்வகை என்று ஏசுகிறான். அது மண் எனில் ஏன் தங்கம் என்ற சொல்லைக் கூறுகிறான்? தங்கம் தங்கம்தான். அதை அவன் தற்சமயம் மண் என்று கருதுவதாகத் தானே அர்த்தம்.

மராட்டிய மொழிக் கதை ஒன்று. கணவன்-மனைவி. முறையே, ராங்கா, பாங்கா என்று பெயர். ராங்கா காட்டில் விறகு வெட்டித் தள்ளுவான். அவன் பின்னாலேயே வரும் அவன் மனைவி வெட்டிய கட்டைகளைத் திரட்டிச் சுமந்துவருவாள். ராங்கா பேராசைப்படாதவன். அன்றாடத் தேவைக்கு அதிகமாக எதையும் வைத்துக் கொள்ளாதவன்.

ஒரு நாள் ராங்கா மரங்களை வெட்டியபடி முன்னேறிய போது ஓரிடத்தில் தங்கக் காசுகள் நிறைந்த பை கிடப்பதைக் கண்டான். அவன் உடனே அங்கே ஒரு குழி வெட்டி, அதில் பணப்பையைப் போட்டு, குழியை மண்ணால் நிரப்பி மூடிவிட்டான்.

பின்னாலேயே வந்த மனைவி சந்தேகப்பட்டு, "அங்கே எதற்கு மண்ணை நிரப்புகிறீர்கள்?" என்று கேட்டாள். அந்த விறகுவெட்டி எப்போதும் உண்மையே பேசுவதாக சபதம் மேற்கொண்டிருந்ததால் வேறு வழியின்றி அவன் நடந்ததைச் சொன்னான். "நாமோ தினமும் அரைப் பட்டினி. நீயோ பெண்.

தங்கத்தைப் பார்த்து உன் மனம் சபலப்படக்கூடாது என்பதற்காகக் குழியில் போட்டு மூடிவிட்டேன்," என்றான்.

மனைவி பலமாகச் சிரித்தாள். கணவன் திகைத்துப்போய், "இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டான்.

"சிரிக்காமல் என்ன செய்வது? மண்ணை மறைப்பதற்காக நீங்கள் அதன்மீது மண்ணைப் போடுவது வேடிக்கையாகத்தான் இருக்கிறது," என்றாள் மனைவி.

தியாகமும் சந்நியாசமும் சிறிது வேறுபடுகின்றன. தியாகத்தில் நாம் விடும் பொருள் எவ்வகையிலாவது நீடிக்கிறது. தங்கத்தை மண்ணில் புதைத்தாலும் தங்கத்தை ராங்காவால் மறக்க முடியவில்லை. அதை அவன் மண்ணுக்கு சமம் என்று கூறுவதுடன் நின்றுவிடுவான். அவன் மனைவி சந்நியாசி நிலையை அடைந்துவிட்டவளாகத் தெரிகிறாள். அவள் தங்கம் என்றும் சொல்லைக்கூட கூறவில்லை. நேரடியாக மண் என்றே கூறிவிடுகிறாள்.

தங்கத்தில் மோகம் கொள்ளுதல் பைத்தியக்காரத்தனம். அதைத் துறந்து ஓடுதல் இன்னொரு வகையான பைத்தியக் காரத்தனம். தங்கத்தைப் பற்றி விழிப்புப் பெறுதல்தான் முக்கியம். உடல் இருக்கும்வரை ஆசைகள் இருக்கும். ஆனால் 'நான் உடல் அல்லன்' என்பதை உணர்ந்தால் ஆசைகள் நம்மை ஒன்றும் செய்யா. அத்தகையவன் தான் யார் என்பதை அறிந்திருப்பான்.

'நான் என்பது இந்த உடல் இல்லை' என்று உணர்ந்தவன் ராகம்-விராகம் (பற்று-வைராக்கியம்) என்னும் இரண்டு நிலைகளையும் கடக்கிறான். வைராக்கியம் மட்டும் போதாது. அது ஓர் எதிர்மறையான நிலை மட்டுமேயாகும். முதலில் பெண்கள் பின்னால் ஓடினாய். ஒரு கட்டத்தில் சலித்துப்போய் வைராக்கியம் வந்துவிட்டதாகக் கூறுகிறாய். பெண்களை ஏசுகிறாய். இதுவும் பெண்கள் பற்றிய நினைப்புதானே.

என் நண்பர் ஒருவர் ஒருநாள் என்னிடம் வந்து, "இனி சந்நியாசியாக வேண்டியதுதான்," என்றார். "ஏன்? என்ன நடந்தது?" என்று விசாரித்தேன். "நான் நடத்திவந்த கம்பெனி

திவாலாகி விட்டது. இனி வாழ்க்கையில் என்ன மிச்சமிருக்கிறது.'' என்று சலித்துக்கொண்டார். இதுவா துறவறம்? இதற்காகவா துறவறம்? துறவறம் என்பது வெறுப்பின் காரணமாக மேற்கொள்ளும் வாழ்க்கை அமைப்பு அன்று. அது ஆக்க பூர்வமானது.

இது வைராக்கிய நிலை மட்டுமே. இதைக் கடந்து வீதராகம் என்றொரு நிலை உண்டு. இது பற்றையும் பற்றின்மையையும் கடந்த நிலை; தனக்குள் வேரூன்றிவிட்ட நிலை. உலகைப் பிடித்துவைத்துக் கொள்ளும் ஆர்வம் இல்லை. அதை உதறித் தள்ளிவிட வேண்டுமென்ற பிடிவாதமும் இல்லை. உலகம் எப்படியுள்ளதோ அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும்.

திடீரென உலகம் காணாமல்போய் ஞானி மட்டுமே எஞ்சி நின்றாலும் அவன் கவலையுற மாட்டான். அவனைப் பொறுத்த வரையிலும் உலகம் ஏற்கெனவே காணாமல் போன ஒன்றுதான். உலகம் உப்பி பலமடங்காக வளர்ந்தாலும் அவன் பொருட்படுத்த மாட்டான்.

அறிவிலியின் கண்ணோட்டம் எப்போதும் இது பிடிக்கும்-அது பிடிக்காது என்று ஊசலாடியபடியே இருக்கும். எல்லா பொருள்களும் இவ்வாறு இரண்டாகப் பிரிவதை ஞானி அறிந்திருந்த போதிலும் அவன் குறிப்பாக எதையும் விரும்புவதோ, வெறுப்பதோ கிடையாது.

அறிவிலியின் கண்ணோட்டம், 'இப்படிச் செய்வேன், அப்படிச் செய்வேன்; இது பிடித்துள்ளது, அது பிடிக்கவில்லை; இது பிரியமானது, அது வெறுப்பேற்றுகிறது; இதை ஆதரிக்கிறேன், அதை எதிர்க்கிறேன்' என்று அமையும்.

ஒரு சமயம் அவன் பண மோகம் கொண்டிருப்பான். வேறொரு சமயம் பணத்தை விஷமென்பான். ஆனால் விருப்பும் வெறுப்பும் ஒன்றுக்கொன்று சிரசாஸனம்தான் (தலைகீழாய் நிற்றல்).

தன்னில் நிலைபெற்றவனும், தனது வீட்டை அடைந்தவனும், தனது மையத்தில் ஊன்றிவிட்டவனும், தனது உண்மையான சுபாவப்படி இருப்பவனுமான ஞானியும் முரண்படுகின்ற அதே

உலகப் பொருள்களால்தான் சூழப்பட்டுள்ளான். ஆனால் அவற்றால் அவன் பாதிப்படைவதில்லை.

ஞானிக்கும் எது சரி-எது தவறு, எது அழகு-எது அழகு குறைந்தது, எதைச் செய்யலாம்-எதைச் செய்யக்கூடாது, எதைச் சாப்பிடலாம்-எதை உண்ணலாகாது என்பதெல்லாம் தெரியும். ஆனால் அவன் இதன் காரணமாக பிரியம்-வெறுப்பு என்னும் இரண்டு தீவிர உணர்ச்சிகளுக்கும் ஆளாவதில்லை.

அறிவிலியின் சிந்தனையின் எல்லை இது நல்லது-இது கெடுதல்; எதைச் செய்யலாம்-எதைச் செய்யக்கூடாது; எதைப் பெறுவேன்-எதை இழப்பேன் என்பதாகும். இந்த இரண்டு நிலைகளைக் கடந்தும் ஒரு நிலை இருக்கக்கூடும் என்று அவனுக்குத் தோன்றுவதில்லை. 'நான் செய்தலையும் செய்யாமையையும் கடந்தவன்; சுகம்-துக்கம் இரண்டும் கடந்தவன்; அழகு-அழகின்மை இரண்டையும் கடந்தவன்' என்று வாழ்க்கையை நோக்கும் பார்வை அவனுக்கில்லை.

ஞானி எதைச் செய்யலாம்-எதைச் செய்யக்கூடாது; எதைத் தேர்ந்தெடுக்கலாம்-எதைப் புறக்கணிக்க வேண்டும் என்பதை யெல்லாம் அறிந்திருப்பான். அதே சமயம் அவன் தான் இந்த இரட்டை நிலையைக் கடந்தவன் என்ற உணர்வும் இருக்கும். 'நான் இவற்றால் தொடப்படவில்லை. நான் காண்பவன்; நான் காட்சியில்லை,' என்று கூறுவான்.

கண்கள் இருப்பதால் எல்லாக் காட்சிகளும் தெரியத்தான் செய்யும். ஆனால் அவன் தன்னை பார்ப்பவன் என்று மட்டுமே கூறிக்கொள்வான். நீயும் அதே காட்சிகளைக் காண்கிறாய். ஆனால் அவற்றை பார்ப்பவன் நீ என்பதை மறந்துவிடுகிறாய்.

எனது கிராமத்தில் ஒரு சாமியார் இருந்தார். மக்களோ பக்தி காரணமாக அவரை யோகிகளில் முதன்மையான பரமஹம்சர் என்று கருதினர். அவரை தரிசிக்கத் தொலைவிலிருந்தெல்லாம் மக்கள் வந்தனர். அவரை தரிசித்து அவர்கள் மகிழ்ந்தனர். அவருக்குச் சரியாகப் பேசக்கூட வராது. அவரது உளறலுக்கு மக்கள் தாமாகவே ஆழ்ந்த அர்த்தம் செய்து கொண்டார்கள்.

அதை வழிகாட்டியாகக் கொண்டு தங்கள் வேலைகளைச் செய்தார்கள். வெற்றி பெற்றால் குருவின் ஆசீர்வாதம் என்று நினைத்தார்கள். தோற்றால் குருவின் உபதேசத்தை நாம்தான் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்று தங்களைத் தேற்றிக் கொண்டனார். எனக்கு அவரைச் சிறுவயதிலிருந்தே தெரியும். அவரைப் போன்ற வடிகட்டிய முட்டாளை நான் பார்த்ததில்லை. ஐரோப்பாவில் இத்தகையவரை பைத்தியக்காரர்களுக்கான தனி மருத்துவமனையில் அடைத்திருப்பார்கள். அங்கே பரமஹம்ச நிலையை அடைந்த யோகிகளைப் புரிந்துகொள்ள முடியாமல் சிறையில்கூட அடைக்கிறார்கள். இங்கோ சில முட்டாள்களை பரமஹம்சர் என்று கருதி மக்கள் மடம் அல்லது ஆசிரமம் கட்டித்தருகிறார்கள்.

பரமஹம்சரும் மற்றவர்களுக்குத் தெரிபவை எல்லாம் காண்கிறார். அதே சமயம் அவர் கூடுதலாக ஒன்றையும் காண்கிறார். அவர் எதைப் பார்க்கிறாரோ அது உன் கண்ணுக்குத் தெரிவதில்லை. பரமஹம்சர் எதையும் பார்க்கும்போது அதைப் பார்க்கின்ற தன்னையும் பார்க்கிறார்.

அஷ்டாவக்ரரின் ஒவ்வொரு சுலோகமும் முக்கிய மானதாகும். ஒரு சுலோகத்தில் கூறப்பட்டதையாவது நீ உன் வாழ்க்கையில் கடைப்பிடித்தால் கடவுள் உனக்குள் இறங்குவார். ஒவ்வொரு சுலோகமும் உன் வாழ்க்கையில் வெவ்வேறு கதவுகளைத் திறக்கும். சில சுலோகங்களின் அர்த்தம் ஒரே மாதிரியாகத் தோன்றலாம். காரணம், சத்தியத்தை எல்லா முகப்புகளிலிருந்தும் பார்ப்பதற்காக அவை அவ்வாறு அமைந்துள்ளன. இதனால் சத்தியத்தின் சகல பரிமாணங்களையும் நீ தெரிந்துகொள்வது வசதிப்படும்.

நாம் எதைத் தேடுகிறோமோ அதுதான் கிடைக்கும். நாம் எதைத் தேடுகிறோமோ அதுதான் கிடைக்கவும் முடியும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**கிழக்கு நாடுகளைச் சேர்ந்த சத்குருமார்களை மனத்தத்துவ நிபுணர்கள் என்று ஏன் அழைக்கப்படுவதில்லை? சத்குரு உளவியல் வல்லுநரிடமிருந்து எவ்வகையில் வேறு படுகிறார்?**

மனத்தத்துவ அறிஞர் மனம் பற்றி அறிந்திருப்பார். ஆனால் தியானம் பற்றி அறிந்திருக்கமாட்டார். இவை வெவ்வேறு விதமான அறிவுகள். மனத்தைக் கடந்து செல்லாமல் மனத்தை அறிய முடியாது. சாட்சி மனப்பான்மை உள்ளவன் மனத்தை அறிந்தவ னாக இருப்பான். மனத்தை அறிய, மனத்திலிருந்து வேறுபட வேண்டும்; அதைக் கடந்துசெல்ல வேண்டும். அதைவிட உயரமாக எழும்ப வேண்டும். மனத்தால் சூழப்பட் டிருப்பவர்கள் மனத்தை அறிய முடியாது.

நாம் மனம் ஆகவே மனிதர்கள் என்று நினைப்பவர்களால் மனத்தை எப்படிப் புரிந்துகொள்ள முடியும். ஒன்றை அறிய அதற்கும் நமக்கும் இடையே இடைவெளி தேவை. நானும் நீயும் ஒருவரையொருவர் பார்க்க முடிகிறது. ஏனெனில் நம்மிடையே இடைவெளி உள்ளது.

மனத்துக்கும் நமக்குமிடையே இடையே இடைவெளி ஏற்படுத்திக் கொள்ள உதவுவதுதான் தியானம். மனத்தையும் ஒரு காட்சிப்பொருளாக ஆக்கிக்கொள்வதற்கான ஏற்பாடுதான் தியானம். நீ உன் உடலும் மனமும் உன்னிடமிருந்து தனிப்பட்டு இருப்பதுபோல் உணர முடிந்தால் எல்லாவற்றையும் கடந்தவனாகிறாய்.

மனவியலார்கள் மனம் பற்றிய சில பாட புத்தகத் தகவல்கள் மட்டுமே அறிந்தவர்களாவர். அத்தகவல்கள் எங்கிருந்தே கடன்-வாங்கியவையாகும். அவை மற்ற அறிஞர்கள் சொன்னதன் தொகுப்பாகும். சில மனிதர்களை பரிசோதனைக்கு எடுத்துக் கொண்டு அவர்கள் நடந்து கொள்ளும் விதங்களை ஆராய்ந்து, மதிப்பிட்டு, பொதுவான சில கொள்கைகள் வகுக்கப்பட்டன. அவை ஊகங்களே. எல்லோருக்கும் அவை பொருந்தா. ஒவ்வொருவனின் மனமும் தனித்தன்மை கொண்டது.

மனத்தத்துவ மருத்துவர்கள் மூளைக்கோளாறுகளை குணப்படுத்துகிறார்கள். இந்த சூழ்நிலையிலேயே அவர்கள் பல்லாண்டு பணி புரிவதால் அவர்களுக்கு மனக்கோளாறு உண்டாகி மருத்துவமனையில் சேர்க்கப்படுவதுண்டு. சிலர் தற்கொலையும் செய்துகொள்கிறார்கள். அவர்கள் மனம் சம்பந்தமான அறிவியல் தகவல்கள் பெறுகின்றனர். அந்த அடிப்படையில் அவர்கள் நோயாளிகளுக்கு மன ஆரோக்கியம் சம்பந்தமான ஆலோசனை வழங்குகின்றனர். அவற்றை அவர்களே பின்பற்றுவதில்லை என்பது வருத்தமான விஷயம்.

பல்வேறு தொழில்களில் ஈடுபடுபவர்களில் சிலர் தற்கொலை செய்து கொள்கின்றனர். அதை மன்னிக்கலாம். ஆனால் மனத்தத்துவ நிபுணர் தற்கொலை செய்து கொள்வது முரணானது. ஏனெனில் அவருக்குத் தன் மனம் இயங்கும் விதம் தெரியும்; அதைக் கட்டுப்படுத்தும் விதமும் தெரியும்.

மனத்தத்துவ மருத்துவர் ஒருவர் நோயாளி தனது நோய் பற்றி கூறுவதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். நோயாளி சொன்னார், "எப்பொழுதும் என் உடம்பின்மீது புழுக்கள் ஊர்வதாக உணர்வு உள்ளது. இது பிரமை என்பது எனக்குத் தெரிந்தே இருக்கிறது. ஆனால் நாள் முழுவதும் புழுக்கள் என் உடம்பில் ஏறுவதாக, இறங்குவதாக, தலைமேல் நெளிவதாக, காலின்கீழ் மிதிபடுவதாகத் தோன்றுகிறது. இச்சமயம் அவை என் ஆடைகளுக்குள் நுழைந்துவிட்டதாக நினைக்கிறேன்." இவ்வாறு கூறியபடியே நோயாளி எழுந்துநின்று ஆடைகளை உதறப் போனார்.

உடனே டாக்டர் தடுத்து, "இந்தாப்பா, என் எதிரேயே ஆடைகளை உதறாதே. அப்புறம் அந்தப் புழுக்கள் எல்லாம் என்மேல் வந்து விழும்," என்றார்!

மனத்தத்துவ நிபுணர் மனம் பற்றி புத்தகப் பாடங்கள் படித்திருக்கிறார். ஆனால் அவர் மனம் பற்றி விழிப்புப் பெற்றிருக்கவில்லை. ஆகவே நாம் சத்குருக்களை மனத்தத்துவ வல்லுநர்கள் பிரிவில் சேர்ப்பதில்லை.

மனத்தத்துவ நிபுணர்கள் என்ன செய்கிறார்கள்? வாழ்க்கையின் சீரான பாதையிலிருந்து நழுவியவர்கள் மற்றும் அதனால் மனநோயாளியானவர்களை மீண்டும் வாழ்க்கைத் தண்டவாளத்தில் ஏற்றிவைப்பதைத்தான் மனமருத்துவர்கள் செய்கிறார்கள். புத்தி பேதலித்தவர்களை சொஸ்தப்படுத்தி மீண்டும் சமூகத்தின் அங்கமாக்குகிறார்கள். நோயாளியை முன்பிருந்த சாமான்ய நிலைக்குக் கொண்டுவருகிறார்கள்.

சத்குரு எவ்வகை நோய் குறித்தும் சிந்திப்பதில்லை. அவரது பணி உடலால் ஆரோக்கியமாக இருப்பவர்களை மனத்தாலும் ஆரோக்கியமாக இருக்க உதவுவதுதான்.

மனவியலார் ஆரோக்கியம் குறைந்தவனுக்கு அதை மேம்படுத்திக் கொள்ள உதவுகிறார். மறுபடியும் அவன் அலுவலுகத்துக்கோ, தொழிற்சாலைக்கோ சென்று வேலையைத் தொடருவதற்கு உதவுகிறார். அவன் மனைவி-பிள்ளைகளுடன் குடும்ப வாழ்க்கையில் இணைய உதவுகிறார்.

சத்குருவோ தன்னை அறிந்திராத ஒருவனுக்குத் தனது நிஜமான முகவரியை, ஆத்மாவின் முகவரியை அறிமுகப்படுத்து கிறார். தனது வாழ்க்கையின் ஆழ்ந்த தோற்றுவாயை அறிந்து கொள்ள உதவுகிறார். அவனை வாழ்க்கையின் பரம சத்தியத்துடன் இணைக்கிறார்.

மனவியல் வல்லுநர் உன்னை சமூகத்தின் அம்சமாக்குகிறார். சத்குரு உன்னை சத்தியத்தின் அம்சமாக்குகிறார்.

சமூகமோ ஏற்கெனவே நோயாளியாக உள்ளது. இதன் அம்சமாகி நீ ஆரோக்கியம் பெற முடியாது. ஏனெனில் மருத்துவ

மனையில் இல்லாதபோதிலும் சமூகத்தில் பெரும்பாலோர் எவ்விதத்திலாவது மூளை பாதிப்பிற்கு ஆளாகியுள்ளனர். மூளைக்கோளாறு உள்ளவர்கள் பெரும்பான்மையோராக இருக்கும் சமூகத்தில் ஆரோக்கியமான மனமுள்ளவன் தான் பைத்தியமாகக் கருதப்படுவான்.

கலீல் ஜிப்ரானின் ஒரு கதையில் ஒரு நகரத்தில் இரண்டு கிணறுகள். ஒன்று பொதுமக்களுக்கு, மற்றது அரசருக்கு. ஒரு மந்திரவாதியின் சாபம் காரணமாக, பொதுக் கிணற்றின் நீரைக் குடித்த மக்கள் அனைவரும், மந்திரிவரையிலான எல்லா அரசு ஊழியர்களுக்கும் பைத்தியம் பிடித்துவிட்டது. ராஜா மட்டுமே ஆரோக்கிய மனம் பெற்றிருந்தார். ஆனால் மற்ற எல்லோரும் ஒரு தரப்பில் சேர்ந்துவிட்டதால் அரசருக்குத்தான் பைத்தியம் என்று அவரைத் தாக்கத் தொடங்கினார்கள். வேறு வழியின்றி அரசரும் பொதுக்கிணற்றுக்குச் சென்று அத்தண்ணீரைக் குடித்துப் பைத்தியமாக மாறினார். உடனே மக்கள் எதிர்ப்பைக் கைவிட்டு நாட்டுக்கேற்ற ராஜா என்று அவரைக் கொண்டாடினார்கள்.

சமூகத்தில் எல்லோரும் பணத்தைத் துரத்தியபடி ஓடுகிறார்கள். யாராவது ஒருவன் அவர்களுடன் சேராமல் பின்தங்கிவிட்டால் அவனை சந்தேகக்கண் கொண்டு பார்ப்பார்கள். "இவன் பணத்தில் அப்படியென்ன இருக்கிறது என்று கேட்கிறானே. இவனை மனநல மருத்துவர் மூலம் பரிசோதிக்க வேண்டும்" என்பார்கள்.

நியூயார்க்கில் அப்படி ஒரு சம்பவம் நடந்தது. ஒரு பெரும்பணக்காரன் பாங்கிலிருந்து பத்தாயிரம் டாலர் எடுத்தான். வழியில் தென்பட்டவர்களுக்கு ஆளுக்கு ஒரு நூறு டாலர் நோட்டைக் கொடுத்தபடி முன்னேறினான். கூட்டம் சூழ்ந்து விட்டது. போலீஸ் அதிகாரிகள் விரைந்து வந்து அவனைப் பிடித்துக் கொண்டனர். "என் பணத்தை நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன்? நீங்கள் யார் அதைப் பற்றி கேட்க?" என்று அவன் பதிலுக்கு அவர்களை மிரட்டினான்.

போலீசார் அவனை நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தினர். மனநல மருத்துவரும் வரவழைக்கப்பட்டார். நீதிபதி அந்த

மனிதனை மருத்துவமனையில் பரிசோதித்து அவனுக்குப் பைத்தியமா இல்லையா என்று அறிக்கை தரச் சொன்னார். மருத்துவர் அவனைப் பரிசோதிக்க வேண்டிய அவசியமில்லை. அவன் செய்தது அவன் பைத்தியம் என்றே நிரூபிக்கிறது என்றார்.

எதிர்க் கூண்டில் நின்ற அந்த செல்வந்தன் உடனே, "டாக்டர், நான் பைத்தியம் என்று எழுத்துமூலம் சான்றிதழ் கொடுத்து விடுங்கள். நான் பாங்கிற்குப் போய் பணம் எடுத்து மக்களுக்குக் கொடுக்கப் போகிறேன். இது எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. வாழ்க்கையில் நான் இவ்வளவு ஆனந்தம் அடைந்ததே இல்லை. நான் பைத்தியம் என்று நீங்கள் சர்டிபிகேட் கொடுத்தால், அதைப் பார்த்து போலீஸ்காரர்கள் என்னை தொந்தரவு செய்யாமலிருப்பார்கள். மறுபடியும் என்னைப் பிடித்து இங்கே கொண்டுவரமாட்டார்கள்," என்றார்.

இதேபோல் சமூகத்தில் வன்முறை இயற்கைதான் என நினைக்கிற மக்களிடையே அன்பே கடவுள் என்று ஒருவர் பிரச்சாரம் செய்தால், அவரைக் கிறுக்கு என்று கருதித் தூக்கில்தானே போடுவார்கள். இயேசுநாதரின் கதை அதுதான் அவரது அறிவுரைகள் சமகால மக்களுக்கு உளறலாகத் தோன்றியது. இன்றுகூட அவர் சொன்னதை நடைமுறைப்படுத்த முடியாது என்றே பெரும்பான்மையோர் நினைக்கிறார்கள். அவர் சொன்னது என்ன? 'உன்னை ஒருவன் ஒரு கன்னத்தில் அறைந்தால் நீ அவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு. ஒருவன் உன் கோட்டைப் பறித்துக் கொண்டால் நீ உன் சட்டையையும் கழற்றி அவனுக்குக் கொடு உன்னை வெறுப்பவர்களை நேசி. உன்னைத் திட்டுபவர்களுக்கும் ஆசி கூறு.' இப்படியெல்லாம் ஒருத்தன் கூறுவானா? கூறலாமா? இந்தப் புதிய சிந்தனை மக்களைக் குழப்பியது. இயேசு சிலுவையில் அறையப்பட்டார். அப்போதும் அவர் தன்னை தண்டித்தவர்களை மன்னிக்குமாறு கடவுளை பிரார்த்தித்தார். தவறு செய்தவர்களை 777 முறை மன்னிக்கலாமென்றார்.

யதார்த்த வாழ்க்கையில் என்ன நடக்கும்? நீ ஒருவனைக் கன்னத்தில் அறைகிறாய். அவன் இயேசு வாசகத்தை நினைவில்

கொண்டு மறு கன்னத்தைக் காட்டுகிறான். நீ பதறிப்போய் அவனிடம் மன்னிப்பா கேட்பாய்? 'திமிர்பிடிச்ச பயல்' என்று கருவிக்கொண்டு அவனது மறு கன்னத்தையும் அல்லவா பதம் பார்ப்பாய்? இதுதான் உலக வழக்கம்.

இன்னொரு விபரீதம் நடக்கலாம். "இயேசுநாதர் இரண்டு கன்னங்களுடன் நிறுத்திக் கொண்டார். அதற்குமேல் எதையும் தடுக்காததால் நீ இப்போது என்னிடம் உதைவாங்கப் போகிறாய்," என்று கூறி அவன் உன்னைத் தாக்கலாம்.

சத்குரு நீ கூட்டத்தோடு சேர்ந்துவிடாதபடி தடுத்து நிறுத்துகிறார் மனநல மருத்துவரோ நீ உலகத்தோடு ஒட்ட ஒழுகுவது தான் 'நார்மல்' எனக் கூறுகிறார். ஆகவே சத்குருவும் மனத்தத்துவ நிபுணரும் சமமில்லை. அஷ்டாவக்ரரின் கண்ணோட்டப்படி, ஞானி மக்கள் கூட்டம் செய்வதுபோல் நடந்து கொள்வதில்லை. ஆட்டுமந்தையின் குணம் அவரிடம் கிடையாது. அவர் குறிப்பிட்ட எவரையும் பின்பற்றுவதில்லை. அவர் சுதந்திரமானவர். அவர் தனது ஆத்மா காட்டும் வழியில் செல்கிறார். ஆத்மா கூறுவதையே செய்கிறார். அதற்காக அவர் எதை வேண்டுமானாலும் இழக்கத் தயாராக இருக்கிறார்

சாக்ரட்டீசுக்கு மரண தண்டனை விதிக்கும்போது நீதிபதிக்கே அவர் மேல் சற்று இரக்கம் உண்டானது. "உங்கள் உபதேசங்கள் தவறானவை என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ள மறுப்பதால்தான் அரசாங்கம் தண்டனை தருகிறது. சரி, நீங்கள் அப்படி ஒப்புக்கொள்ளாவிடிலும் பரவாயில்லை. இனிமேல் நான் எந்த பிரச்சாரமும் செய்யமாட்டேன் என்று அறிவித்தால்கூட போதும். உங்கள் தண்டனையை ரத்துசெய்து விடுகிறேன்," என்றார் நீதிபதி.

சாக்ரடீஸ் திருப்பிக் கேட்டார், "பிறகு நான் வாழ்க்கையில் மேற்கொண்டு என்ன செய்வது? பிறகு நான் வாழ்வதில் என்ன அர்த்தம் இருக்கும்? சத்தியத்தை பற்றி பேசாமல், சத்தியத்தைப் பரப்பாமல் இருப்பதைவிட, இறப்பதே நல்லது. நான் மௌனியாக இருக்க முடியாது."

தானே விரும்பி சாவை வரவேற்றார் சாக்ரடீஸ். அதைத் தவிர்க்க வழிகள் கூறப்பட்டும் அவற்றைப் புறக்கணித்தார். நீதிபதி அவரைப் பைத்தியக்காரர் என்றே நினைத்தார்.

பள்ளிக்கூடம் ஒன்றில் ஒரு வகுப்பில் கணித ஆசிரியர் கேள்வி கேட்டார். "ஓர் அறையில் பத்து ஆடுகள். அவற்றில் ஒன்று குதித்து வெளியேறினால் அறையில் எத்தனை ஆடுகள் மிஞ்சியிருக்கும்?" இது கழித்தல் கணக்கு. ஒவ்வொரு மாணவனும் ஒன்பது என்று விடையளித்தனர். கடைசியில் மிஞ்சிய ஒருவன் கணிதத்தில் மிகவும் பின்தங்கியவன். அவன் சொன்னான், "அறையில் ஒரு ஆடுகூட மிஞ்சியிருக்காது!"

ஆசிரியர் கோபித்தார். "இவ்வளவு எளிய கணக்குக்குக் கூட உனக்கு விடை தெரியவில்லையே. பத்தில் ஒன்று போனால், விடை ஒன்பதுதானே" என்றார்.

அப்பையன் சொன்னான், "சார், எனக்கு கணக்கு வராதுங்கிறது உண்மைதான். ஆனா எங்க வீட்டில நிறைய ஆடுகள் இருக்கு. அவை என்ன செய்யும்னு எனக்குத் தெரியும். ஆடுகளுக்கும் கூட்டல்-கழித்தல் தெரியாது. ஒரு ஆடு வெளியேறினா மீதி எல்லா ஆடுகளும் குதிகுதிச்சு அதன் பின்னாலேயே போயிடும்."

சத்குரு உன்னை இத்தகைய நிலையிலிருந்து வெளியே கொண்டுவருகிறார். கூட்டத்தின் போக்கு தினமும் மாறியபடி இருக்கும். சத்குரு உன்னை என்றும் மாறாத, நிரந்தரமான கடவுளுடன் இணைக்கிறார்.

நீ மனத்தளவில் நோயாளியாக இருக்கும்போது மனநல மருத்துவரிடம் செல்கிறாய். ஆனால் நீ எல்லா விதத்திலும் ஆரோக்கியமாக இருந்தும் வாழ்க்கையில் எந்த சாரமும் கிடையாது. அர்த்தம் கிடையாது என்னும் முடிவிற்கு வரும்போது சத்குருவிடம் செல்கிறாய்.

என்னிடம் வருபவர்கள் தலைவலி என்றோ, உடல்நிலை சரியில்லை என்றோ சொன்னால் டாக்டரைப் பார்த்து சிகிச்சை செய்துகொள்ளுங்கள் என்று அனுப்பிவிடுவேன். டாக்டர்கள் பிறகு எதற்காக இருக்கிறார்கள்?

எல்லாம் சரியாக இருப்பதுபோல் தோன்றினாலும் எதுவும் சரியில்லைபோல் அதிருப்தியாக உணர்ந்தால் அப்பொழுது நீ என்னிடம் வா. பணம், பதவி, சமூக கௌரவமிருந்தும் கையில் சாம்பல்தான் மிஞ்சியதாகத் தோன்றுகிறது. வெற்றி கிடைத்தும் இதயம் நிரம்பவில்லை. ஒரு பூவும் மலரவில்லை. ஒரு பாட்டும் கிளம்பவில்லை. தொண்டை வறண்டு கிடக்கிறது. வெளியே எங்கும் பசுமை. மனமோ பாலைவனமாக உள்ளது. மனத்தில் கடும் வெப்பம். சிறிதும் குளிர்ச்சியில்லை.

இப்போதுதான் குருவைத் தேடக் கிளம்பு. நீ பெற்ற வெற்றிகள் தோல்வியாகத் தெரியும்போது, நீ பெற்றுள்ள செல்வம் உன் மனம் ஏழையாய் இருப்பதைக் காட்டும்போது, வாழ்க்கை பாழாகிவிட்டதாக நினைக்கும்போது குருவைத் தேடி புறப்படு.

மருத்துவர் உன் குரு அல்லர். உனக்கு அடிபட்டால் அவரிடம் சென்று மருந்தும் கட்டும் போட்டுக்கொள்கிறாய். கட்டணம் செலுத்தினாய். நன்றிகூட சொல்ல வேண்டியதில்லை. அத்துடன் அவருடனான தொடர்பு முடிகிறது. குருவுடன் ஏற்படும் தொடர்பு அன்பின் அடிப்படையிலானது. அது இதயபூர்வமான தொடர்பு. அவருக்கு நீ எவ்வளவு கட்டணம் செலுத்தினாலும் போதாது.

சத்குருவை அடைந்ததும் உன் உள்ளத்தில் சத்தியத்தின் கிரணம் பிரவேசிக்கும். புதிய அறிவென்னும் சன்னல் திறக்கும். காதில் தெய்விக சங்கீதம் கேட்கும். அலைபாயும் மனம் அவரெதிரே அசையாமல் தங்கும். உள்ளே உறங்கும் ஏதோ ஒன்று விழிப்பதுபோல் உணர்வாய்.

மனமருத்துவர் சிகிச்சை என்ற பெயரில் ஏதாவது செய்கிறார். ஊசியாவது போடுகிறார். சத்குரு எதுவும் செய்வதில்லை. அவரது முன்னிலையில் உனக்குள் சுயமாகவே ஏதோ மாற்றம் நிகழ்கிறது. கர்த்தா உணர்வைக் கைவிட்டதால்தான் அவர் சத்குரு ஆனார். ஆகவே அவர் யாரையும் மாற்ற நடவடிக்கை எடுப்பதில்லை. அவர் முன்னிலையில் மற்றவர்கள் தாமாகவே நெகிழ்வதை உணர்கிறார்கள்.

சத்குருவுடன் நமக்கு அன்பின் அடிப்படையிலான தொடர்பு அமைய வேண்டும். இல்லாவிடில் பலன் விளையாது. அவர் உனது உள்ளத்தில் குடியேறிவிடும் அளவிற்கு நீ அவரை நேசிக்க வேண்டும். காதலர்களின் காதலைவிட நீ பன்மடங்கு அதிகமாக குருவை நேசிக்க வேண்டும். காதலின் இந்த உச்சபட்ச நிலைதான் பக்தி. காதலர்களின் அன்பு சமமானது. பக்தி நிலையில் அன்பு உன்னை சமர்ப்பண உணர்விற்குக் கொண்டுசெல்கிறது.

மனநல மருத்துவரும் தன்னிடம் வரும் நோயாளிகளைப் போலவே மனக் குழப்பங்களால் பாதிக்கப்படுவதுண்டு. சத்குரு அந்தக் குழப்பங்களால் பாதிக்கப்படுவ்தில்லை. அவர் மனக் குழப்பங்களுக்கு அப்பாற்பட்டவர். அத்தகையவருடளான தொடர்பு (சத்சங்கம்தான்) பலன் தரும். அவர் உன் கையைப் பற்றினால் கடவுளே உனக்கு அபயகரம் நீட்டியதுபோலாகும். ஆகவே இந்திய மரபில் குருவை பிரம்மா, விஷ்ணு, மகேசன் என்று துதிக்கிறோம்.

நமது மனம் பள்ளத்தில் விழுந்துவிடாதபடி குருதான் தாங்கிப் பிடிக்கிறார். வாழ்க்கைப் பிரவாகம் வறண்டிருக்கும்போது அவர்தான் வெள்ளம் வருமென நம்பிக்கை அளிக்கிறார்.

சத்குருவைத் தேட வேண்டும். மனமருத்துவரை வாங்க வேண்டும். பணம் செலவழித்தால் மனமருத்துவர் கிடைப்பார். மனத்தையே காணிக்கையாகச் சமர்ப்பித்தால் சத்குரு கிடைப்பார். இருவரும் வெவ்வேறு.

## இரண்டாவது கேள்வி

> **ஓஷோ அவர்களே! நான் இறக்கவே விரும்புகிறேன். இந்த உடலில் நீடிக்க விரும்பவில்லை. உள்ளத்தில் உங்களன்பை நிரப்பிக் கொள்ள ஆசை. என்னை அமுத மயமாக்கிக் கொள்ள ஆசை நான் சூனிய நிலைக்குப் போய்விட விரும்புகிறேன்.**

**இ**தே உணவு இங்கேயுள்ள பலர் மனத்தில் தோன்றியிருக் கிறது. நான் பேசும்போது "உங்களை அழித்துக் கொள்ளுங்கள்,

உங்களை காலியாக்கி (வெற்றிடமாக்கிக் கொள்ளுங்கள். கடவுள் உங்களுக்குள் வந்து இறங்கட்டும்'' என்கிறேன். அதைக் கேட்டு உங்களுக்குள் ஆவேசம் பிறக்கிறது. ஆனால் அழித்துக் கொள் வதை உடலுடன், உயிருடன் சம்பந்தப்படுத்திவிட்டீர்கள். அது தவறு.

அழித்துக்கொள்ளச் சொல்வது ஆசைப்படும் குணத்தைத் தான். பணத்தாசை, பதவியாசை என்று ஆசை எதுவாயினும் அதுதான் அகங்காரமாக மாறுகிறது. அகங்காரம் இருக்கும்வரை 'நீ' என்பவனும் நீடிக்கிறாய்.

இதுவரையிலும் உனக்கு எப்படி வாழ்வது என்றறியும் ஆசை இருந்தது. இப்பொழுது உன்னை எப்படி சூனியமாக்கிக் கொள்வது என்று என்னைக் கேட்கிறாய். இந்த இரண்டு நிலை யிலும் ஆசை இருக்கிறது. முன்பு பணம் தேடினாய். இப்போது ஆன்மிகத்தைத் தேடுகிறாய். முன்பு பதவியைத் தேடினாய். இபபோது முதன்மைப் பதவியை (பரமபதமெனப்படுவதை) விரும்புகிறாய். முன்பு சுகம் தேடினாய். இப்போது சுவர்க்கமே கேட்கிறாய். இதுவரை பல்வேறு ஆசைகளின் பின்னால் ஓடினாய். இப்போது ஆசைகள் அற்றவனாக வேண்டுமென உனக்குப் புதிய ஆசை தோன்றியிருக்கிறது.

நீ இறந்துபோக ஆசைப்படு என்று நான் சொல்லவில்லை. ஆனால் ஆன்மிக உலகிலும்கூட ஆசைப்படுவது கிடைப்ப தில்லை. நிர்வாண நிலையை அடைய ஆசைப்பட்டால் அது கிடைக்காமல் போய்விடும் என்று புத்தர் சொன்னார். அஷ்டாவக்ரரும் மோட்ச ஆசை இருந்தால் முக்தி தொலைவில் சென்றுவிடும் என்று அடிக்கடி எச்சரிக்கிறார். மோட்சமும் உன்னைக் கட்டித்தான் போடும். எனவே அதையும் விரும்பாதே. எந்த விருப்பமும் இல்லாமல் மனம் வெற்றிடமாகிவிட்டால் அங்கே இறையுணர்வு வந்து நிரம்பும். தியானம் செய்ய ஆசைப்படுவதாகக் கூறுவதும் தவறு. சட்டெனத் தியானத்தில் இறங்க வேண்டும். ஆசை தோன்ற இடைவெளி தரக்கூடாது. அதுதான் தியானத்திற்கான முதல் நிபந்தனை.

திபெத்து நாட்டுக் கதை. இமயமலைத் தொடர்களின் நடுவே மறைவாக ஓரிடத்தில் ஒரு குளம். அருகே ஒரு மரம். அந்த இடத்தைத் தேடி அலைந்து கண்டுபிடித்து அந்த மரத்திலிருந்து குதித்தால் முன்பைவிட நல்ல உருமாற்றம் ஏற்படும். பறவைகள் விழுந்தால் மனிதர்களாக மேலெழும்பும். மனிதன் குதித்தால் தேவனாக மாறுவான்.

ஒருமுறை ஆண்-பெண் குரங்கு ஜோடி அம்மரத்தின் மீது உட்கார்ந்திருந்தன. அவை ஒரு மனிதன் தற்செயலாக அங்கு குளிக்க வந்து ஒளிவீசும் தேவனாக மாறியதைப் பார்த்தன. குரங்குகளும் அதுபோல் ஆக குளத்தில் குதித்தன. அவை அழகான மனிதர்களாக, கணவன்-மனைவியாக, வெளியே வந்தன.

ஆண் குரங்கு, "நாம் மீண்டும் ஒருமுறை குளத்தில் குதிப்போம். நாம் பார்த்த மனிதன் தேவன் ஆனதுபோல், நாமும் தேவ உடல் பெறுவோம்," என்றது. பெண் குரங்கு ஒத்துக்கொள்ளவில்லை. இரண்டாம் முறை குதித்தால் என்ன நடக்கும் என்று தெரியாத நிலையில் அது ஆபத்தான முயற்சி என்று தடுத்தது. "பேராசை பெருநஷ்டம் என்று உனக்குத் தெரியாதா? குரங்குகளாயிருந்த நாம் மனிதர்களாகி விட்டதே மிகப்பெரிய மாற்றம்தானே," என்றது.

கணவனாக மாறிய குரங்கு நீரில் குதித்தது. பாவம்! அது வெளியேறியபோது மீண்டும் குரங்காக மாறியிருந்தது! அந்தக் குளத்தின் விசேஷம் என்னவென்றால், முதல் முறை மூழ்கினால் முன்பைவிடச் சிறந்த பிறவி கிடைக்கும். மீண்டும் அதில் மூழ்கினால் முதலிலிருந்த உருவமே திருப்பி வந்துவிடும்!

அக்குளப்பக்கம் வந்த ஓர் அரசன் பெண்ணாக மாறிய குரங்கை மணந்துகொண்டு அரசியாக்கினான். அதைக் கண்டு மீண்டும் குரங்காக மாறிய கணவன் குரங்கு ஓலமிட்டது. அவர்கள் செல்வதைத் தடுக்க எவ்வளவோ முயன்றது. அதன் சேட்டைகளைச் சகிக்க முடியாமல் சேவகர்கள் அதைப் பிடித்துக் கூண்டில் அடைத்துவிட்டனர்!

தியானம் என்பது இப்படிப்பட்ட குளம்தான். அதில் மூழ்குவதே சமாதி. அதன் விளைவாக எது கிடைக்கிறதோ அதில்

திருப்தியடைய வேண்டும். அதிக தியானம், அதன் மூலம் அதிக சமாதி, அதன்மூலம் அதிகப் பலன் என்றெல்லாம் பேராசைப்படக் கூடாது.

கேள்வி கேட்டவர் சாக, நிர்வாணம் பெற, சூனிய நிலையை அடைய, சமாதியில் ஆழ்ந்துபோக விரும்புகிறேன் என்றெல்லாம் சொல்கிறார். இவை உயர்தரமான விருப்பங்களாயினும் எல்லா விருப்பங்களும் நம்மைக் கட்டிப்போடுகின்றன.

**சா**த்தானுக்கு ஒருமுறை தனது தொழில் அலுத்துவிட்டது. அவன் தொழிலைத் துறந்து சந்நியாசியாகிவிட நிச்சயித்தான். அதற்குமுன் தன்கீழ் வேலைபார்த்த அடிமைகளை ஏலத்தில் விற்றுவிட ஏற்பாடு செய்தான். பொய், பொறாமை, சோம்பல், கர்வம், வன்முறை, பிறர் பொருள் அபகரிப்பு முதலிய பல அடிமைகளை நிறுத்தி, ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தி விலை கூறினான்.

அரசியல்வாதிகள், வியாபாரிகள், தொழிலதிபர்கள் போன்றோர் தங்களுக்குத் தேவையான அடிமையை வாங்கிச் சென்றனர். கடைசியில் மிஞ்சிய அடிமை ஒரு பெண். மற்ற அடிமைகளைப் போலன்றி இவள் தனி அழகுடன் விளங்கினாள். இவளா அடிமை என்று பார்வையாளர்கள் வியந்தனர். அவள் கழுத்தில் தொங்கிய விலைச்சீட்டின் மூலம் அவளுக்குத்தான் அதிகபட்ச விலை வைக்கப்பட்டிருந்ததெனத் தெரிந்தது.

ஒருவர் துணிந்து சாத்தானிடம், "மற்ற அடிமைகளை நாங்கள் பார்த்ததுமே அடையாளம் கண்டுகொண்டோம். ஆனால் இவள் யாரென்று என்று எங்களுக்குத் தெரியவில்லை. இவளா அடிமை? இவளுக்குத்தான் அதிகபட்ச விலை வைக்கப் பட்டுள்ளது. இந்த தேவி யார்?" என்று விசாரித்தார்.

சாத்தான் விளக்கினான்: "இவள்தான் எனக்கு பிரியமான வளும் விசுவாசமானவளுமான அடிமை. இவள் மூலம் நான் யாரையும் என் வசப்படுத்திவிட முடிந்தது. இவள் என் வலது கையாகத் திகழ்ந்தவள். இவள் பெயர் பேராசை."

பேராசை காரணமாக மனிதன் "இதை அடைவேன், அதை அடைவேன்" என்று தொடங்கி, எது எவ்வளவு கிடைத்தாலும் இன்னமும் வேண்டும் என்று துடிக்கிறான். அதே கண்ணோட்டம் ஆன்மிகத்திற்குப் பொருந்தாது.

சந்நியாசம் என்பது சத்தியத்தை அடைவதற்கான பேராசை அன்று. பேராசை என்பதையே தியாகம் செய்வதுதான் சந்நியாசம். சந்நியாசம் மோட்சம் பெறுவதற்கான புதிய விருப்பம் இல்லை. எல்லா வகையான விருப்பங்களும் பயனற்றவை என்பதை அறிந்து கொள்வதே சந்நியாசம்.

நீ மேன்மேலும் விரும்பாதே. விரும்பும் மனப்பான்மையைத் துறந்துவிடு. உடனே நீ சாத்தானின் பிடியிலிருந்து விடுபடுவாய். விருப்பத்தைக் கைவிட்டதும் நீ இதுவரை விரும்பியது நிகழத் தொடங்கும்! நீ விரும்புகிறாய் என்பதன் காரணத்தால் அது இதுவரை தடைப்பட்டிருந்தது.

கேள்வி கேட்டவர் தான் இறக்க விரும்புவதாகச் சொன்னார். மரணம் ஒருநாள் நிகழத்தான் போகிறது. அதற்கேன் அவசரப் படுகிறாய்? சாவு என்பது வாழ்க்கையின் சிகர நிலை, உச்சபட்ச நிலை, கடைசி கீதம். வாழ்க்கையைப் புரிந்துகொண்டால் சாவும் புரிந்துபோகும். 'இருத்தல்' புரிந்துவிட்டால் 'இல்லாமல் போதலும்' புரிந்துவிடும்.

ஆகவேதான் உலகத்தைத் துறந்து ஓடாதே என்று நான் அறிவுறுத்துகிறேன். உலகத்தைத் தெரிந்து கொண்டால் மோட்சத் தையும் தெரிந்து கொண்டதுபோல்தான். உலகைப் புரிந்து கொள்ளாமல் நீ மோட்சத்தை அறியக் கிளம்பிவிட்டாய். அவ்வாறு செய்தால் மோட்சமும் உனக்கு ஒரு புதிய உலகமாக மட்டும் அமைந்துவிடும்; தெய்விக நிலைக்கு உன்னை உயர்த்தாது.

## மூன்றாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் அடிக்கடி 'நடனம்' என்னும் சொல்லைக் கூறுகிறீர்கள். அது என்ன நடனம்? அது எப்பொழுது நடைபெறுகிறது?**

ஆம், நடனம் எனக்கு பிரியமான சொல். நான் நடனத்தை ஒருவகையான பூஜை முறை என்றே கருதுகிறேன். அது ஒரு வகையான தியானமும்கூட. நடனத்தைவிட சுலபமான வழிபாட்டு முறையும் கிடையாது. ஏனெனில் நடன சமயம் உன்னிலிருந்து மிக எளிதாக நழுவிச் சென்றுவிடுகிறாய். அந்த சமயம் நீ உன்னையே மறந்த பரவச நிலையில் இருக்கிறாய்.

நீ நடனமாட ஆட உன்னிடமிருந்து உயிர்சக்தி பிரவாகிக்கிறது. நீ நதியாகப் பொங்கிப் பாயப் பிறந்தவன். இப்போது ஜடமாகக் கிடக்கிறாய். நீ ஆடினால் சலனம் உண்டாகி, குளம்போல் தேங்கிக் கிடக்கும் நீ நதியாக பிரவாகிப்பாய். நீ பனிக்கட்டிபோல் கிடக்காதே. உருகு. அலைகளால் நிரம்பு. இயக்கம் கொள். இவை நடைபெற எழுந்தாடு.

நடனமாடும்போது நீ மகிழ்ச்சியாக இருக்கிறாய். சோகமாக உள்ளவனும் நடனமாடினால் சில நிமிடங்களில் தனது சோகம் நீங்கியதை உணர்வான். சோகமும் நடனமும் ஒரே சமயத்தில் நிகழக்கூடியவை அல்ல. அழுதுகொண்டே எவனும் நடனமாட முடியாது. அப்படி ஆடினாலும் சில நிமிடங்களில் அழுகை காணாமல் போய்விடும். நடனத்திற்கு துக்கம் என்றால் என்ன என்பது தெரியாது. அது ஆனந்தத்தை மட்டுமே அறிந்திருக்கிறது.

ஆகவே இந்துக்கள் பரமேசுவரனின் உருவத்தை நடராஜர் என்றழைத்தனர். கிருஷ்ணரை நடனமாடும் விதத்தில் சித்திரித்தனர். அதெல்லாம் காரணத்துடன்தான். வாழ்க்கையே நடனமயம்தான். ஆகவே நீ கூனிக் குறுகி உட்காராதே.

நடனம் எப்பொழுது நடைபெறும் என்று கேட்டாய். ஒரு நடன நிகழ்ச்சியைக் கூர்ந்து கவனி. நடனமாடுபவர் தன்னையே மறந்துபோகிறார். அதாவது, அவரே இல்லாமல் போகிறார். நடனம் மட்டுமே மிஞ்சுகிறது. நிகழ்ச்சியைப் பார்க்கும் நீயும் இல்லாமல் போகிறாய். ஆடுபவரின் முகம்கூட மறந்துவிடுகிறது. நடனம் மட்டுமே தெரிகிறது.

ரஷ்யாவைச் சேர்ந்த நிஜின்ஸ்கி[1] சிறந்த நடனக் கலைஞராவர். அத்தகைய கலைஞர்போல் வரலாற்றில் வேறு எவரும் கிடையாது என்று கூறப்படுகிறது.[2] அவர் நடனத்தினூடே தாவி எழும்புவார். அந்த ஆற்றலை விஞ்ஞானிகளும் விளக்க முடிந்ததில்லை. புவிஈர்ப்பு விசை கோட்பாட்டின்படி அந்த அளவு அந்தரத்தில் நிற்றல் சாத்தியமில்லை. நிஜின்ஸ்கியால் நடனமாடும் போதுதான் அப்படிச் செய்ய முடிந்தது. அன்றாட சாதாரண வாழ்வில் நம் அளவுதான் அவர் தாவுவார்.

1 Vaslav Nijinsky (1890-1950) புகழ்வாய்ந்த ரஷ்ய 'பாலே' நடனக்காரர். முப்பது வயதிலிருந்தே மனநோயாளியானார்.

2. His status as a legend is unequalled in the history of dance.

அவர் சில விநாடிகள் அந்தரத்தில் நிற்பது எப்படி சாத்தியமாகிறது என்று அவரிடம் கேட்டிருக்கின்றனர். அவர் சொன்னார், "எனக்கே இதன் ரகசியம் பிடிபடவில்லை. தானாகவே அவ்வாறு நிகழும்போது எனக்கே திகைப்பு ஏற்படுகிறது. அந்த சமயம் நான் பறவையைப்போல், எடையே இல்லாதவன்போல் உணர்கிறேன். ஒன்று மட்டும் நிச்சயம். அந்த சமயம் நான் உடல் இருப்பதையே உணர்வதில்லை. நான் இல்லாதவனாகி விடுகிறேன்."

ஆனால் இந்த ஆற்றல் நம் யோக சாஸ்திரங்களிலும் தந்திர நூல்களிலும் கூறப்பட்டுள்ளது.

அறிவியல் கூறுகிறது—நியூட்டன் மரத்தடியில் உட்கார்ந்திருந்தபோது மரத்திலிருந்து பழம் விழுந்தது. எப்பொருளும் மேலேயிருந்து கீழ்நோக்கித்தான் இறங்கும் என்று அவர் உணர்ந்தார். கல்லை மேல்நோக்கி எறிந்தாலும் அது கீழேதான் வந்துவிழும். பூமி எல்லாப் பொருள்களையும் தன்னை நோக்கியே இழுக்கிறது.

நியூட்டனால் பார்க்க முடியாத ஒன்றைப் பழங்காலத்திலேயே நம் தேசத்து ஞானிகள் பார்த்துவிட்டனர். கிருஷ்ணர், அஷ்டாவக்ரர் முதலிய ஞானிகள் கண்டுபிடித்தது என்னவென்றால், அகங்காரம் முற்றிலும் நீங்கிய சில நிமிடங்களின்போது மனிதன் மேல்நோக்கி எழும்புகிறான். இதற்குக் கடவுள் ஈர்ப்பு விசை என்று பெயர் கொடுக்கலாம். இதை பழைய நூல்களில் வாயுத்தம்பனம் (levitation) என்பார்கள்.

இதுதான் நிஜின்ஸ்கிக்கு நடந்தது. நடனத்தில் மிகவும் ஆழ்ந்துபோய், தானே இல்லாது போனதுபோன்ற அவரிடமிருந்து இந்த அந்தரத்தில் நிற்கும் ஆற்றல் வெளிப்பட்டிருயீகறது.

இதையே அஷ்டாவக்ரரும் சொல்கிறார். நடனம் பற்றி விளக்கும்போது அவர், 'கர்த்தா என்பவனை நீங்கவிடு. கடவுள் உடனே உன்னை ஏற்றுக்கொள்ள வாய்ப்பளி' என்கிறார். 'கடவுளே, நீயே என்னைத் தாங்கிப்பிடி. என் வாழ்க்கை என்பது நீ கொடுத்ததுதான். மரணம் தரவுள்ளவனும் நீயே. நீ என்னை என்ன செய்வதாக இருந்தாலும் நான் குறுக்கிடமாட்டேன்' என்று அறிவித்துவிடு.

நாம் ஏன் பிறந்தோம் என்பது நமக்குத் தெரியாது. நாம் ஏன் இறக்க வேண்டும் என்றும் நமக்குத் தெரியாது. நாம் தொடக்கமும் முடிவும் அறிந்திருக்கவில்லை. நடுவாழ்க்கை குறித்து நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? ஆரம்பத்தில் நம்மைத் தாங்கியவன், முடிவில் நம்மைத் தாங்கப் போகிறவன் நடுப்பகுதியை மட்டும் தாங்காமலா போய்விடுவான்?

இப்படியாகக் கடவுள் பொறுப்பில் தள்ளிவிடுபவனை அஷ்டாவக்ரர் பார்வையாளன் (சாட்சி) என்கிறார். அவன் செய்பவனும் (கர்த்தா) அல்லன், அனுபவிப்பவனும் (போக்தா) அல்லன்.

நர்த்தகனே இல்லாது போவதுதான் வெற்றிகரமான நடனம். அவ்வாறு நடனம் மட்டுமே மிஞ்சுவதுபோல் நாட்டியமாட வேண்டும். உள்ளிருந்து சக்தி பொங்க வேண்டும். அகங்காரம் மிச்சமிருக்கக் கூடாது.

நடனம்தான் உன்னைக் கடவுளிடம் சுலபமாக இட்டுச் செல்லும். நடனமாடுவது இயற்கையானது. காட்டுவாசிகள் இப்பொழுதும் கூட்டு நடனம் ஆடிக் களிக்கிறார்கள். நாகரிக வளர்ச்சி பெற்றவர்கள் ஆடிக் காட்டக் கூச்சப்படுகிறார்கள். இயந்திரம்போல் செயல்படுகிறார்கள்.

கடவுள் உன்னை ஸ்பரிசித்தால் நீ நடனமாடுவாய். நீ நடனமாடினால் கடவுள் உன்னைத் தொடுவார். எது முதலில் நடைபெறும் என்னும் ஆராய்ச்சி வேண்டாம். கோழி முதலிலா, முட்டை முதலிலா என்பதுபோல்தான் உன் நடனம் பற்றிய ஆராய்ச்சியும் அமையும். கடவுள் தொட்டு நீ ஆடுவதும், நீ ஆடி கடவுளைத் தொடுவது ஒன்றன் பின் ஒன்றாக ஒரு வட்டம்போல் அமைந்துள்ளன.

எனவே ஆடு. இதயபூர்வமாக ஆடு. கருமித்தனம் செய்யாமல் முழுமையாக ஆடு. ஒரு கட்டத்தில் நீ என்பவன் இல்லாமல் போய்விடுவாய். நடனம் மட்டும் தொடர்ந்து நடக்கும்!

நடனம் எப்பொழுது நடைபெறுகிறதென்று கேட்டாய். 'நீ' என்பவன் இருக்கும்வரை உண்மையான நடனம் நிகழ்வதில்லை. தாளக் கணக்குப்படி நிதானமாக ஆடும்போது உண்மையான நடனம் நிகழ்வதில்லை. சுதந்திரமாக, ஆவேசமாக, மெய்ம்மறந்து நீ ஆடும்போது உண்மையான நடனம் அப்போது நிகழ்கிறது.

நான்காவது கேள்வி

**ஓஷோ அவர்களே! தங்களிடம் தீட்சை பெறும்போது அழகான புதிய பெயர் சூட்டுகிறீர்கள். குறிப்பிட்ட பெயரை வைப்பதன் ரகசியமென்ன? பின்னணி என்ன?**

பெயரில் என்ன இருக்கிறது? ஆகவே எப்பொழுதும் அழகான பெயரே வைக்கிறேன். நான் சொல்லாவிட்டாலும் எப்பெயருக்கும் அர்த்தமுண்டுதான். ஆனால் நீ வேலை செய்யும் நேர்த்தி உன் பெயருக்குப் புதிய கௌரவம் தரும்.

உனக்குப் புதுப் பெயர் தருவதன் மூலம் உனக்குப் புது அழகு உண்டாக்குகிறேன். அதன் மூலம் உனக்குப் புதிய பொறுப்பு வழங்குகிறேன். அதை நிறைவேற்றுவது உன் கடமையாகிறது. புதிய பெயர் உனக்கு சவால் போன்றது. புதிய பெயர் உனக்குத் தூண்டுதல் தந்து உன்னை ஆன்மிகத்தில் முன்னேற்றும்.

உனக்கு அழகிய பெயர் கொடுத்து உன்னிடம் நான் எதிர்பார்ப்பதை மறைமுகமாகத் தெரியப்படுத்துகிறேன். உன்னிடம் ஆன்மிக அழகு மிளிர வேண்டுமென மறைமுகமாக ஆசி கூறுகிறேன்.

ஒரு பையனுக்குப் பெற்றோர் பாபவிமோசனன் என்று பெயர்வைத்தனர். ஆனால் முழுப்பெயரையும் சொல்வது சிரமமாக இருந்ததால் மக்கள் அவனை 'பாவி' என்றே அழைத்தனர்! சிலர் வேண்டுமென்றே அல்லது கேலியாக 'பாவி' என்று கூப்பிட்டனர்.

அவன் தன் குருவிடம் சென்று வேறு பெயர் சூட்டுமாறு வேண்டினான். அவர் சொன்னார், "நீ ஊருக்குள் செல். எதிர்ப்படுகின்றவர்களின் பெயரைக் கேள். எந்தப் பெயர் பிடித்திருக்கிறதோ அதை என்னிடம் வந்துசொல். நான் மந்திரம் ஓதி உனக்கு அப்பெயர் சூட்டுகிறேன்" என்றார்.

பாபவிமோசனன் புறப்பட்டான். எதிரே ஒருவன் கம்பால் தரையைத் தட்டியபடியே தடுமாறிக்கொண்டு வந்தான். பார்வை இழந்த அவனிடம் பெயர் கேட்டான். 'கமல லோசனன்' (கமலக்கண்ணன்) என்று பதில் வந்தது!

அதிர்ச்சியடைந்த பாபவிமோசனன் முன்னேறினான். அடுத்து எதிரே வந்தவனைப் பலமுறை கேட்டும் பதில் கூறவில்லை. அவனுக்குக் காது கேட்கவில்லை என்பதைப் புரிந்துகொண்ட விமோசனன் எழுதிக் காட்டிப் பெயர் கேட்டான். கர்ணன் என்று பதில் வந்தது!

அடுத்து அவன் பிண ஊர்வலம் வருவதைப் பார்த்தான். இறந்தவர் பெயர் என்ன என்று விசாரித்தான். சிரஞ்சீவி என்று சொன்னார்கள்!

சிறிது தொலைவில் ஒரு மரத்தடியில் ஒரு பிச்சைக்காரன் பிச்சை கேட்டான். பாபவிமோசனன் சில காசுகளைத் தட்டில் போட்டுவிட்டு அவனிடம் பெயர் கேட்டான். தனராஜன் என்று பெயர் வந்தது!

பாபவிமோசனன் குருவிடம் திரும்பினான். "சுவாமி! பெயருக்கும் ஆளுக்கும் சம்பந்தமில்லை என்று புரிந்து கொண்டேன். ஆகவே என்னை பாவி என்று மற்றவங்க கூப்பிடும் போது நான் பாவம் செய்தவன் என்று சொல்வதாக அர்த்தம் கொள்ளமாட்டேன்," என்றார்.

குரு சொன்னார், "அது மட்டுமல்ல, அவர்கள் பாவி என்று உன்னை அழைக்கும்போது பாபவிமோசனா என்று கூப்பிடுவதாக நினைத்துக்கொள்."

நான் உனக்குப் புதிய பெயராக சச்சிதானந்தன் என்று சூட்டினால் நீ இப்போது அப்படி உள்ளதாக அர்த்தமில்லை. நீ அப்படி ஆக வேண்டுமென்பது எதிர்பார்க்கப்படுகிறது.

பழைய கதை ஒன்று. கடவுள் எல்லா வகையான படைப்புகளையும் உண்டாக்கியபின் மனிதனை உருவாக்கினார். களிமண்ணைப் பிசைந்து அவனைப் படைத்தார். எல்லா தேவர்களையும் அழைத்து, மனிதனைக் காண்பித்து, "இதுதான் (இவன்தான்) என் படைப்புகளிலேயே தலைசிறந்தது," என்று அறிவித்தார்.

ஒரு தேவதை துணிச்சலாகக் கேட்டது: "இது உங்கள் தலைசிறந்த படைப்பெனில் இதை ஏன் அனைத்திலும் அற்பமான மண்ணில் தயாரிக்க வேண்டும்? மிகச் சிறந்த ஒன்றின்

அடிப்படை மிக மட்டமானதாகவா இருக்க வேண்டும்? வெள்ளி அல்லது தங்கத்தால் படைத்திருக்கலாமே.''

கடவுள் விளக்கம் தந்தார்: ''உன்னதமான நிலையை அடைவதற்கு அற்பமானதிலிருந்து பயணம் தொடங்க வேண்டும். சுவர்க்கத்திற்கு எழும்பும்போது கால் நரகத்தில் ஊன்றியிருக்கும். தங்கத்திலோ, வெள்ளியிலோ எதையேனும் விதைத்தால் அது முளைக்குமா? மண்ணில் நடப்படுவது முளைத்து வளரும். அதன் வளர்ச்சிக்கு எல்லையில்லை. மண்ணிலிருந்து மனிதனைப் படைத்ததால் அவன் வளர்ந்து உயர்ந்துகொண்டே செல்ல வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது.''

தங்கமும் வெள்ளியும் செத்த உலோகங்கள். ஆனால் மண் உயிரோட்டமுடையது. நடாமல் மண்ணில் எறியப்பட்ட விதையும் முளைத்துவிடுகிறது.

மானிட வாழ்க்கை பயணம் போன்றது. அதற்கு முடிவு கிடையாது. மனிதன் மேலும் வளர வாய்ப்புள்ளது. நீ பாட்டு கொண்டுவந்துள்ளாய். இன்னும் பாட ஆரம்பிக்கவில்லை. உன்னிடம் சொந்தமாக வீணை உள்ளது. ஆனால் உன் விரல்கள் இன்னமும் தந்திகளைத் தீண்டவில்லை.

நான் உனக்குப் புதுப்பெயர் அளிக்கும்போது உன் வளர்ச்சிக்கு வாய்ப்புத் தருகிறேன். நீ சச்சிதானந்தமயமாக வேண்டும் என எதிர்பார்த்து உனக்கு அப்பெயர் வைக்கிறேன்.

உனக்கு நான் தரும் பெயர் நீ சென்றடைய வேண்டிய இடத்தைச் சுட்டிக்காட்டுகிறது. கடினமான பயணம்தான். கல்லும் முள்ளுமான பாதை. வழி தவறவும் கூடும். எனினும் உன் புதுப்பெயர் தொலைவிலிருந்து ஒளிரும் நட்சத்திரம்போல் வழிகாட்டும். நீ தடுமாறினால், 'சச்சிதானந்தா, நிமிர்ந்து நில், முன்னேறு' என்று புதுப்பெயர் உனக்கு உற்சாகமளிக்கும்.

சச்சிதானந்தா, இனிமேல் உன்னால் திருட முடியுமா? கொலைசெய்ய முடியுமா? சோகமாக, கவலையாக இருக்க முடியுமா? உன் பெயரே உன்னை இப்படியெல்லாம் செய்யாதபடி தடுத்துவிடும்.

## கடைசிக் கேள்வி

**ஞான புருஷர்கள் எதற்காகவாவது கண்ணீர் விடுவார்களா?**

**ஞா**னிகளைப் பற்றி எதுவும் இறுதியாகச் சொல்ல முடியாது. அவர்கள் வானத்தைப் போல விசாலமானவர்கள். அவர்களின் செயல்களுக்கு எல்லைக்கோடு போட முடியாது. அவர்கள் பூரணமானவர்கள். பூரணத்தில் புன்சிரிப்புக்கு மட்டுமல்ல, கண்ணீருக்கும் இடமுண்டு.

ஜென் குரு ஒருவர் ஜப்பானில் முக்தியடைந்தார். அவரின் சீடரான ரிஜாயி குருவைவிடப் புகழ்வாய்ந்தவராக இருந்தார். அவர் மூலமாகத்தான் மக்கள் அவரின் குருவை அறிந்திருந்தனர். அவர் குருவின் உடலருகே உட்கார்ந்து அழலானார். அருகே இருந்தவர்கள் தடுத்தார்கள். 'ஞானியாகிய நீங்கள் அழுதால் மக்கள் என்ன எண்ணுவார்கள்? ஞானி என்பவர் அழலாமா?' என்று கேட்டனர்.

அதற்கு ரிஜாயி, "அப்படியானால் நான் ஞானியில்லை என்று நினைத்து கொள்ளுங்களேன். அழுகை வரும்போது நான் என்ன செய்ய முடியும்? என் குரு எது எனக்கு சுபாவமாக உள்ளதோ அதையே செய்யச் சொன்னார். தற்சமயம் கண்ணீர் விடுவதுதான் எனக்கு இயற்கையாகத் தோன்றகிறது," என்றார்.

"நீங்கள்தானே ஆத்மா மரணமில்லாதது என்று உபதேசிக்கிறீர்கள். பிறகு ஏன் அழவேண்டும்?" என்று மக்கள் நினைவூட்டினர்.

"நான் அழுவது ஆத்மாவின் காரணமாக அல்ல. மனித உடலும் மதிப்புடையதுதான். இதோ குருவின் உடல் கிடக்கிறது. இனி அவரது தரிசனம் உடலளவில் கிடைக்காது என்பது வருத்தம் தரத்தானே செய்யும். நான் சுபாவமாக எப்படியோ அப்படியே இருந்துவிட்டுப் போகிறேன்," என்றார் ரிஜாயி.

ரிஜாயி ஓர் உண்மையான ஞானி. தேவைப்படும்போது தயக்கமில்லாமல் அவரால் அழ முடிந்தது. நாம் பார்க்கும் பல துறவிகள் பிறர் எதிரே அழுவதை கௌரவக் குறைவாக நினைக்கிறார்கள். துறவி அழுவது துறவறத்துக்கு முரணானது

என்று மக்கள் கருதுவதால் துறவி தனக்கு சுபாவமானதை வெளிப்படுத்த முடியவில்லை. உணர்ச்சியில்லாத இயந்திரம்போல் அவர் செயல்பட வேண்டியுள்ளது. இந்த போலித் தன்மைதான் துறவறத்திற்கு முரணானது. ஞானி என்பவர் சகஜமாக, இயற்கையாக இருக்க வேண்டும்.

புத்தர் யாத்திரை காலத்தில் சொந்த ஊருக்கும் வந்தார். அவர் தன் தந்தை-மனைவி-மகனைச் சந்திக்க விரும்பினார். சீடர் ஆனந்தர் தடுத்தார். "இது தங்களுக்கு அழகன்று. ஞானிக்கு ஏது தந்தையும், தாரமும், தனயனும்? ஞானம் பெற்றபின் அந்த உறவுகள் தாமாக நீங்கி விடுகின்றன," என்று சுட்டிக்காட்டினார்.

புத்தர் விளக்கினார்: "நான் ஞானியானேன்தான். ஆனால் அவர்கள் ஞானம் பெற்றவர்களில்லையே. அவர்களுக்கு இப்போதும் என்மீது பாசம் தொடர்கிறது. நான் முக்தனானேன் என்றாலும் கடமையும் மிஞ்சியுள்ளது. எனக்குப் பிறப்பளித்தவர் என் தந்தை. என் மனைவி யசோதரை நான் நள்ளிரவில் விட்டுச்சென்றதற்காக இன்னமும் கோபமாக இருக்கிறாள். நான் மன்னிப்புக் கேட்காதவரையிலும் அவள் என்னை மன்னிக்கமாட்டாள். என்னை மன்னித்துவிட்டால் அவளுக்கும் பாரம் நீங்கிவிடும்."

ஆனந்தர் புத்தரின் பெரிய தந்தையின் மகன். வயதில் மூத்தவர். தம்மை புத்தரின் அண்ணனாகக் கருதியவர். அவர் தீட்சை பெறும் முன் நிபந்தனை விதித்தார். அதாவது, 'நான் எப்பொழுதும் உன்னுடன் இருப்பேன். இரவில் உன் அறையிலேயே தூங்குவேன். உன்னை நிழல்போல் பின்பற்றுவேன். உன்னை விட்டு என்னைப் போகச் சொல்லக் கூடாது. பக்கத்து ஊரில் உபதேசம் செய்யக்கூட அனுப்பக்கூடாது.' புத்தர் இதற்கு ஒத்துக்கொண்டார்.

ஆனால் புத்தர் மீண்டும் தன் அரண்மனையில் பிரவேசித்து மனைவியைச் சந்திக்கும் சமயம் ஆனந்தரும் சேர்ந்து வந்தது புத்தருக்கு சங்கடமாக இருந்தது. அவர் ஆனந்தரிடம் சொன்னார், "இன்று மட்டும் சற்றே விலகியிரு. அவள் குலப்பெண். உன் எதிரில் முகத்தை மறைத்துக்கொள்ள வேண்டியிருக்கும். அவளால் தன் உணர்ச்சிகளை சுதந்திரமாக

வெளியிட இயலாது. உன் எதிரில் வெளிப்படையாக அழவோ, கோபிக்கவோ முடியாது."

"ஞானிக்கு ஏது மனைவி?" என்று ஆனந்தர் மடக்கினார்.

"ஆனந்தா, ஞானிகளை பற்றி கவலைப்படாதே. நான் வரையறைக்குள் கட்டுப்படாதவன்," என்று கூறியதும் ஆனந்தர் விலகிக் கொண்டார்.

அவர் சொன்னது உண்மை. ஆனந்தர் அகன்றதால் யசோதரை சுதந்திரமாக அழுதாள், கூக்குரலிட்டாள். "என்னைக் கேட்காமல் ஏன் ஓடிப் போனீர்கள்? நீங்கள் செல்வதைத் தடுத்திருப்பேன் என்று நீங்களாகவே எப்படி முடிவுகட்டினீர்கள்? என் அன்பை நீங்கள் நம்பவில்லையா? நீங்கள் செல்லும்போது உங்கள் திருவடிகளைத் தொட்டு வணங்கியிருப்பேனே. நான் சத்திரியப் பெண். என் தைரியத்தின்மீது நம்பிக்கை வைத்து, என்னை எழுப்பி, விஷயத்தைச் சொல்லிவிட்டு நீங்கள் போயிருக்கலாம்," என்றெல்லாம் யசோதரை புத்தரை ஏசினாள்.

புத்தர் ஒரு வார்த்தைகூட பதில் சொல்லாமல் அப்படியே நின்றார். யசோதரை கண்களைத் துடைத்தபடியே, "ஏன் மவுனம் சாதிக்கிறீர்கள்? வாயைத் திறந்து ஏதாவது சொன்னால் என்ன கெட்டுப்போய்விடும்?" என்று கேட்டாள்.

புத்தர் அமைதியாகப் பதிலளித்தார். "நான் சொல்வதற்கு என்ன உள்ளது? இப்போது இங்கு வந்துள்ளானே அவனல்லன் இங்கிருந்து போனவன். இப்போது வந்துள்ளவனான என்னை நீ துளிக்கூட அறிந்துகொண்டவள் இல்லை. என்னைக் கவனித்துப் பார். சென்றவனல்லன் வந்துள்ளவன். அதே உடல் என்று உன் கண்ணுக்குத் தெரிகிறது. ஆனால் ஆளுமை மாறிப்போனது. பழைய ராஜகுமாரனின் இடத்தில் பிட்சு வந்துள்ளான். நீ எவ்வளவு காலம்தான் சென்றதையே பிடித்துக்கொண்டு தொங்குவாய்? நடந்தது நடந்து முடிந்துவிட்டது. எனக்கு என்ன நேர்ந்ததோ அதைக் கொடுக்கத்தான் இப்போது வந்துள்ளேன். நான் பரமானந்த நிலையை அடைந்துள்ளேன். அதில் நீயும் பங்குபெறு," என்று அழைத்தார்.

யசோதரை பிட்சுணியாகத் துறவறம் மேற்கொண்டாள்.

புத்தர் யசோதரையை ஆனந்தரிடம் பேசச் சொன்னார். "நான் ஆனந்தரையும் அழைத்து வந்திருந்தால் நீ மனம் திறந்திருப்பாயா?" என்று கேட்டார்.

அதற்கு அவள், "ஆனந்தர் எதிரில் நான் மனம் திறந்து பேசியிருக்கமாட்டேன். உங்களை மன்னித்திருக்கவும் மாட்டேன். முதலில் திருடனைப் போல் சொல்லாமல் ஓடினீர். இப்போது என்னைப் பேசவிடாமலிருக்கத் துணையுடன் வந்து நிற்கிறீர். மற்றவர் எதிரில் என் இதயத்து ரணங்களை எப்படிக் காட்ட முடியும்? நல்லவேளையாகத் தனியே வந்தீர். நான் மனக் குமுறலையெல்லாம் கொட்ட முடிந்தது. உங்களைச் சரியாகப் புரிந்துகொண்டு உங்கள் வழியில் நானும் வந்து சேர்ந்து விட்டேன்." என்றாள்.

ஞானி என்பவரை வரையறுக்க முடியாது. ஒவ்வொரு பூக்களும் ஒவ்வொரு விதம் என்பதுபோல் ஒவ்வொரு ஞானியும் தனி ரகம். கிருஷ்ணர், ராமர், புத்தர், மகாவீரர், இயேசுநாதர் முதலிய எத்தனையோ ஞானிகள் தோன்றியும் ஒருவரைப்போல் மற்றவர் கிடையாது. ஒவ்வொருவரும் அபூர்வம் (அ+பூர்வம்=பூர்வத்தில், முன்பிருந்தது கிடையாது).

ஞானி கண்ணீர் விடுவாரா, மாட்டாரா என்பது அவரது சுபாவத்தைப் பொறுத்தது. அவர் தமது சுபாவப்படி நடந்து கொள்ளும் வரையிலும் எதுவும் தவறில்லை. கிருஷ்ணரின் வாழ்க்கையே இதற்கு சாட்சி. அவரது சுபாவமும் ராமரின் சுபாவமும் மிகவும் வேறுபட்டவை. ஆனால் அவர்கள் தத்தம் சுபாவப்படியே நடந்துகொண்டதால் நாம் அவர்களை வணங்குகிறோம்.

கிருஷ்ணர் போரில் கொல்லச் சொல்கிறார். மகாவீரர் நுணுக்கமான பூச்சியும் வாய்க்குள் போய் செத்து விடக் கூடாதெனத் தண்ணீரை வடிகட்டிப் பருகினார். அவர் ஆடையின்றி நின்றார். கிருஷ்ணர் பெண்களுடன் நடனமாடினார். புத்தர் அசைவின்றி மரத்தின்கீழ் உட்கார்ந்திருந்தார். நாளை ஒரு புதிய ஞானி தோன்றினால் அவர் எப்படி இருப்பாரென இப்போதே கூறமுடியாது.

ஹரி ஓம் தத்ஸத்!

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

ஸர்வாரம்பேஷு நிஷ்காமோ யஸ்சரேத் பாலவன்முனி: |
ந லேபஸ்தஸ்ய சுத்தஸ்ய க்ரியமானே அபி கர்மாணி || 240
ஸ ஏவ தன்ய ஆத்மக்ஞ: ஸர்வ பாவேஷு ய: ஸம: |
பஸ்யன் ச்ருண்வன் ஸ்ப்ருஷன் ஜிக்னன்னஸ்நந்நிஸ் தர்ஷ மானஸ: || 241
க்வ ஸம்ஸார: க்வ சாபாஸ: க்வ ஸாத்யம் க்வ ச ஸாதனம் |
ஆசாஷஸ்யேவ தீரஸ்ய நிர்விகல்பஸ்யேவ ஸர்வதா || 242
ஸ ஜயத்யர்த்த ஸந் ந்யாஸி பூர்ண ஸ்வ ரஸ விக்ரஹ: |
அக்ருத்ரிமோ அனவாச்சின்னே ஸமாதிர்யஸ்ய வர்த்ததே || 243
பஹுநாத்ர கிமுக்தேன க் ஞாததத்வோ மஹாஷ்ய: |
போக மோக்ஷ நிராகான்ஹீ ஸதா ஸர்வத்ர நீரஸ: || 244
மஹதாதி ஜகத்வைதம் நாம மாத்ர விஜ்ரும்பிதம் |
விஹாய சுத்த போதஸ்ய கி க்ருத்யம் அவஷிஷ்யதே || 245

'முனிவர் எனப்படுபவர் எல்லாச் செயல்களிலும் பற்றின்றி ஈடுபடுவார். குழந்தைபோல் களங்கமின்றி நடந்துகொள்வார். அந்த புனிதர் செய்யும் கர்மங்கள் ஒருபொழுதும் ஒட்டுவதில்லை.' (சுலோகம் 240)

பொதுவாக, நாம் எந்த வேலையையும் ஏதோ ஒரு விருப்பத்துடன்தான் ஆரம்பிக்கிறோம். நமது நோக்கம் ஒரு பலனைப் பெறுவதாக இருக்கிறது. ஓர் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளவே வேலை செய்கிறோம்.

ஞானி ஒன்றை எதிர்பார்த்துச் செயலைத் தொடங்குவதில்லை. அவன் அடைய வேண்டியது என்று எதுவும் இல்லை. அவன் குறிப்பிட்ட விதமாக ஆகவேண்டுமென ஏங்கியதில்லை. ஆயினும் மூச்சுள்ளவரையிலும் கடமைகள் நீடிக்கும். ஆனால் அவற்றைக் கடவுள் தன்னைக் கருவியாகக் கொண்டு தன் மூலம் செய்விக்கிறார் என்று அவன் நினைக்கிறான். தான் பேசுவது, இயங்குவது கடவுள் தன் மூலமாகச் செய்கிறார் என்று அவன் கருதுகிறான்.

ஞானியிடம் அகங்காரம் நீங்கிவிட்டதால், தன் செயல்களைத் தொடங்குபவரும் முடித்துவைப்பவரும் கடவுளே என்று அவன் நம்புகிறான்.

அறிவிலி செயல்களைப் புரிபவன் தான் என நினைக்கிறான். இதனால் அவன் உலகப் பற்றுகளால் கட்டப்படுகிறான். கர்மங்கள் நம்மைக் கட்டுப்படுத்துவதில்லை. 'நான் செய்கிறேன்' என்னும் திமிர்தான் நம்மைப் பிணைக்கிறது.

**க**ற்குவியல் ஒன்று மாளிகை அருகே கிடந்தது. ஒரு சிறுவன் ஒரு கல்லை எடுத்து மாளிகையின் ஜன்னலை நோக்கி வீசினான். கல் மேலே எழும்பியபோது அது கீழே கிடந்த மற்ற கற்களிடம், "பாருங்கள், எனக்குச் சிறகு முளைத்துவிட்டது. ஆகாயத்தில் பறக்கத் தொடங்கிவிட்டேன்," என்று கூவியது.

இந்த கல்லுக்கு அகங்காரம்! தான் மேலே எழும்பிய காரணம் தெரியாமல் தனக்குச் சிறகு முளைத்து விட்டதாகக் கற்பனை செய்கிறது. தன்னைப் பறக்க விட்டவன் வேறொருவன் என்று அதற்குத் தெரியவில்லை. தானே அந்தப் பெருமைக்கு உரிமை கொண்டாடியது.

மேலெழும்பிய கல் ஜன்னல் மேல் பட்டதும் அங்கு மூடியிருந்த கண்ணாடிப் பகுதி நொறுங்கிப் போனது. கல் சிரித்தது. 'என் வழியில் யாராவது குறுக்கிட்டால் இப்படித்தான் சிதைந்து போவார்கள்' என்று அது தனக்குள் ஆணவமாகக் கூறிக் கொண்டது.

உண்மையில் கண்ணாடியைக் கல் உடைக்கவில்லை. தன் மீது எது பட்டாலும் உடைவது கண்ணாடியின் சுபாவம். இங்கே கல் கர்த்தா இல்லை. அது கண்ணாடியை உடைக்கும் நோக்கம் கொண்டிருக்கவில்லை. ஆனால் கண்ணாடி உடைந்தபின் கல் அதைத் தன் சாதனையாகக் கருதுகிறது அது அடிப்படையில் ஒரு கருவி போன்றதே. செயலைத் தொடங்கிவைத்தவன் அதை எறிந்த சிறுவன். சுபாவம் என்பது கடவுள். சுபாவப்படி நடப்பதை தான் செய்ததாக எடுத்துக்கொள்ளக் கூடாது.

கண்ணாடி உடைந்தபின் கல் அறைக்குள் போடப்பட்டிருந்த கம்பளத்தின் மீது விழுந்தது. கம்பளத்தின் மென்மையை அது சுகமாக உணர்ந்தது. தன்னை வரவேற்பதற்காக கம்பளம் விரிக்கப் பட்டிருப்பதாக அது கற்பனை செய்தது. கண்ணாடி உடைந்த சத்தம் கேட்டு வேலைக்காரன் ஓடிவந்தான். தன்னை வரவேற்க மாளிகையின் சொந்தக்காரரே பதற்றத்துடன் வருவதாகக் கல் நினைத்தது. வேலைக்காரன் கல்லை மீண்டும் குவியலில் எறிந்தான். நீண்ட பயணத்திற்குப் பின் சொந்த ஊருக்குத் திரும்புவதாகக் கல் கூறிக்கொண்டது. மற்ற கற்களிடம் தன் பயணம், போர் வெற்றி, கம்பள சுகம், வரவேற்பு, மாளிகைச் சொந்தக்காரர் விடைகொடுத்து அனுப்புதல் ஆகியவை குறித்துப் பெருமைப்பட்டுக் கொண்டது.

மனிதனும் இப்படித்தான் நடந்துகொள்கிறான். ஆரம்பமும் சரி, முடிவும் சரி, உன் கையில் இல்லை. மூச்சு நின்று போனால் நீ என்ன செய்ய முடியும்? கடவுள் உன்னை மூச்சுவிடச் செய்கிறார். அதை அவர் நிறுத்திவிட்டால் நீ என்ன முயற்சி செய்தாலும் மீண்டும் மூச்சுவிட முடியாது. நீ மூச்சுவிடவில்லை. மூச்சுவிடுதல் தானாக நிகழ்கிறது.

கிருஷ்ணன் தமது கீதையில் செயல்களின் பலனின் எதிர்பார்ப்பைக் கடவுளிடம் ஒப்படைக்கச் சொல்கிறார். ஆனால் இது இறுதி நிகழ்ச்சி. அஷ்டாவக்ரரோ செயலின் ஆரம்பத்தையே கடவுளிடம் ஒப்படைக்குமாறு கூறுகிறார். ஆரம்பத்திலேயே சமர்ப்பண உணர்வு உதித்துவிட வேண்டுமென்கிறார். முதல் படியிலேயே தடுக்கி விழுபவன் கடைசிப் படியை அடைவது நிச்சயமில்லை.

இதனால்தான் நான் கிருஷ்ணன் அருளியதை கீதை என்றும், அஷ்டாவக்ரர் மொழிந்ததை மகாகீதை என்றும் அழைக்கிறேன். மகாகீதை ஞான வேரின் நுனிவரை ஆழமாக இறங்குகிறது.

செயல்களைத் தொடங்கும்போது, 'நான் செய்வேன், நான் காண்பிப்பேன், நான் இப்படி ஆவேன், என் மூலம் இப்படி நடக்கும்' என்னும் அறிவிப்புகளை மனத்தளவில்கூட செய்யாதே. இந்தப் பக்குவம் வந்தால் நீ ஞானியாகிவிடுவாய்.

ஆரம்பத்தின் பொறுப்பை நீ கைவிடாவிடில் முடிவின் பொறுப்பும் உனக்கு வசமாகாது; உன் இஷ்டப்படி எதுவும் முடியாது. நீதான் உன் பிறப்பிற்குக் காரணமென்றால் நீதான் உன் மரணத்திற்கும் காரணமாவாய். ஆனால் மரணம் உன் அதிகாரத்தில் இல்லை. எனவே ஆரம்பத்தின் மீதும் உனக்கு உரிமை கிடையாது.

கிருஷ்ணன் பழத்தை (பலனைக்) கைவிடச் சொல்கிறார். அஷ்டாவக்ரரோ விதையையே கைவிடுமாறு சொல்கிறார்.

பிராமணர் ஒருவர் தோட்டம் அமைத்தார். அங்கே விளைந்த செடி-கொடி-மரங்கள், பூ-காய்-கனிகள் மிகவும் அழகாக இருந்தன. 'இதற்கு நான்தான் காரணம்' என்று பிராமணர் திமிர் பிடித்தவராக இருந்தார். அவரது கொட்டத்தை அடக்க, கடவுள் பிராமண வேடத்தில் அங்கு வந்தார். தோட்டத்தின் நேர்த்தியைப் பாராட்டினார். தோட்டச் சொந்தக்காரரான பிராமணர் வழக்கம்போல் தன்னால்தான் தோட்டம் இவ்வளவு அழகாக ஆனது என்று பெருமை பேசினார்.

கடவுளின் திட்டப்படி ஒரு பசு தோட்டத்துக்குள் நுழைந்து பூச்செடிகளையெல்லாம் துவம்சம் செய்தது. பிராமணர் கடுங் கோபத்துடன் குண்டாந்தடியை வீசினார். மாடு செத்துப்போனது. பிராமணன் அரண்டுபோனான். பசுவைக் கொல்வது (கோஹத்யா) மாபெரும் பாவமாயிற்றே. அதை மறைக்கவும் முடியாது. தான் பசுவின் மீது தடி வீசியதை எதிரில் நிற்கும் பிராமணர் பார்த்து விட்டார்.

நிலைமையைச் சமாளிக்கத் தோட்டக்கார பிராம்ணர் விளக்கம் தந்தார். "பசுவை நான் கொல்லவில்லை. எச்செயலுக்கும் நான் கர்த்தா அல்லன். கடவுள்தான் எல்லாம் செய்பவர். அவர் அர்ஜுனனிடம், 'நீ கொல்வதற்கு முன்னால் நான் கொன்று விட்டேன். நீ என் கருவிமட்டும்தான். இன்று இப்படி இந்தப் பசு இறக்க வேண்டும் என்பது கடவுளின் விருப்பம். அதற்கு அவர் என்னைக் கருவியாக உபயோகித்தார். விஷயம் அவ்வளவுதான்," என்றார்.

வந்த பிராமணர் சிரித்தார். "அப்படியானால் இந்த தோட்டம் போடும்போதும் நீர் கருவியாக இருக்கவில்லையா? அப்போது மட்டும் நீர் கர்த்தாவாக இருந்தீரா? செடி வளர்த்தது நீர் என்றால், பசுவைக் கொன்றது மட்டும் கடவுளா?" என்று கேட்டார்.

இந்த சுலோகத்தில் 'முனி' என்னும் சொல் வருகிறது. முனி என்பது மௌனி, மௌனம் என்பவற்றுடன் சம்பந்தமுள்ள சொல். தானாக, கர்த்தா உணர்வுடன் பேசாதவன் முனிவன். கடவுள் தமது விருப்பப்படி தன் மூலம் பேசுகிறார் அல்லது மவுனமாக இருக்கிறார் என்று அவன் முடிவாகக் கருதுகிறான்.

**கோ**ல்ரிஜ் ஆங்கில மகாகவிகளில் ஒருவர். அவர் எழுதியிருந்த பல கவிதைகள் நடுவிலேயே நின்று போயிருந்தன. நான்கு வரிப் பாடல்கள் சில மூன்று வரிகளுடனேயே நின்றன. அந்த நாலாவது வரியையும் பூர்த்திசெய்து தருமாறு பலர் சொன்னபோது கவிஞர், "அவற்றை நிரப்ப நான் யார்? எவன் பாடலை ஆரம்பித்து வைத்தானோ அவனே அதை முடிக்கட்டும்," என்று கூறிவிட்டார்.

அவர் சொன்னார்: "மீதி வரிகளை நிரப்ப நான் எவ்வளவோ முயன்றேன். நான் புதிதாக இயற்றிய வரிகள் ஏற்கெனவே தாமாக வந்திறங்கிய வரிகளுடன் ஒப்பிட முடியாத படி மட்டமாகத் தெரிந்தன. ஆகவே கடவுள் என் மூலமாக எத்தனை வரிகள் தருகிறாரோ அதனுடன் திருப்திகொண்டு விட்டேன். நான் கருவி மட்டுமே. கடவுள் விரும்பும்போது கருவியாக நான் இயங்கி அவர் முணுமுணுக்கும். வரிகளை

எழுதுவேன். அவர் மூன்று வரிகளோடு நிறுத்திக் கொண்டால் அது அவர் இஷ்டம்."

இந்தக் கண்ணோட்டம் காரணமாகக் கவிஞரால் ஏழு கவிதைகளைத் தான் முழுமையாகத் தர முடிந்தது. ஏராளமான கவிதைகளை அரைகுறையாக விட்டுச் சென்றார். முன்பு கூறியபடி, அவரை முனிவர் எனலாம். ஏனெனில் முனிவர் சுயமாக எதுவும் பேசுவதில்லை. நீ உண்மையான ஞானியிடம் கேள்வி அல்லது சந்தேகம் கேட்டால் அவர் தமக்கு எல்லாம் தெரிந்ததுபோல் சட்டென்று பதில் கூறமாட்டார். மானசீகமாகக் கடவுளை வேண்டி, அப்போது கடவுளின் மூலமாக மனத்தில் தோன்றுவதை உனக்குத் தெரிவிப்பார். இந்தப் பதில் ஞானியிடமிருந்து வருகிறது. ஆனால் இது ஞானியின் பதிலன்று. பதில் கூறும் குரல் ஞானியிடமிருந்து எழும்புகிறது. ஆனால் அது ஞானிக்குச் சொந்தமானதன்று.

முனிவர் என்பவர் தன்னைப் பொறுத்தவரை சூனியம்போல் இருப்பார். ஒருவன் சூனியமாகும்போது மவுனமாக இருப்பதும் சேர்ந்தே வரும். மனிதன் தனக்குள்ளே மெதுவாகப் பேசும் அந்தச் சிறு குரலைக் கேட்க வேண்டுமானால் அவன் பேசக்கூடாது. அவன் தொடர்ந்து பேசிக்கொண்டே போனால் அந்தக் குரல் கேட்காது.

ஞானி குழந்தையைப் போன்றவன். குழந்தைக்குத் தானாக எதுவும் தெரிந்திருப்பதில்லை என்பதுபோல் ஞானியும் தனக்கெதுவும் தெரியாது என்றே நினைக்கிறான். குழந்தைக்குப் பெற்றோர் எதையெல்லாம் காண்பிக்கிறார்களோ, எதையெல்லாம் அறிமுகப்படுத்துகிறார்களோ, அந்த அளவிற்கு மட்டுமே குழந்தை தெரிந்துகொள்கிறது. ஞானியும் தான் அறிந்ததைக் கடவுள் கொடுத்ததாக எண்ணிக்கொள்கிறான். இயேசுநாதரும் குழந்தை போல் கபடமற்றவர்களாக ஆகின்றவர்களே சுவர்க்க சாம்ராஜ்ஜியத்தில் பிரவேசிக்க உரிமை பெற்றவர்கள் என்கிறார். எல்லாக் குழந்தைகளும் சுவர்க்கத்தில் நுழைவார்கள் என்று இதற்கு அர்த்தமில்லை. குழந்தையின் களங்கமற்ற சுபாவமுடைய எவ்வயதினரும் சுவர்க்கத்துள் செல்லலாம்.

குழந்தைக்குத் தன் அறியாமை தெரிந்திருப்பதில்லை. ஞானி எல்லாம் அறிந்திருந்தும் தனக்கு எதுவும் தெரியாது என்று அடக்கமாக இருப்பான்.

**உ**பநிடதக் கதை ஒன்று. உத்தாலகரின் மகன் ஸ்வேதகேது குருகுலப் படிப்பை முடித்துவிட்டு வீடு திரும்பினான். அவன் நடந்துவந்த விதமே அவனுக்கு கர்வம் தலைக்கேறியுள்ளது என்பது தந்தைக்குப் புரிந்தது. மகன் தந்தையின் கால் தொட்டுக்கூட வணங்கவில்லை.

உத்தாலகர், "மகனே! எதை அறிந்துகொண்டால் எல்லா வற்றையும் கற்றுவிட்டதாகக் கருதப்படுமோ அதை நீ கற்றுக்கொண்டு வந்துள்ளாயா?" என்று கேள்வி எழுப்பினார்.

மகன் திருதிருவென விழித்தான். இப்படி ஒரு பாடம் இருப்பதாக அவனுக்குத் தெரியாது. குருவும் குறிப்பிட்டதில்லை.

தந்தை சொன்னார், "அப்படியானால், மகனே, நீ குருகுலத் துக்குத் திரும்பிச் செல். நமது குடும்பத்தில் பெயரளவிற்கு மட்டும் பிராமணர்களாக இருந்தவர்கள் கிடையாது. உண்மையான பிராமணர்களுக்கே நம் குடும்பத்தில் இடமுண்டு. பிரம்மத்தை அறிந்த பிறகே நம் குடும்பத்தினர் பிராமணர்களாயினர். பிராமண குடும்பத்தில் தற்செயலாகப் பிறந்த காரணத்திற்காக நாம் பிராமணர்கள் ஆகிவிடவில்லை. நீ சென்று பிரம்மத்தைத் தேடு. பிரம்மனை அறிந்தவன் பிராமணன் ஆகிறான். அவ்வாறு பிராமணனாகி நீ நம் குடும்பத்தில் வந்து சேர்ந்து கொள்."

ஒரு வகை அறிவு வெளியிலிருந்து கிடைக்கிறது. நீ வெளியிலிருந்து அதைத் திரட்டுகிறாய். வெளியிலிருந்து பெறும் அறிவு வெளியிலேயே நின்றுவிடுகிறது. அது உள்ளறிவு ஆவதில்லை. அது உன் உள்ளுலகில் ஒளியேற்றுவதில்லை. அது கடன் வாங்கிய அறிவு, ஊசிப்போன அறிவு, எச்சில்படுத்தப்பட்ட அறிவு. நீ உன்னை அறிய வேண்டும்; உனக்குள் ஒளிந்திருப் பவனை அறிய வேண்டும். அவனை அறிந்து கொண்டால் சகலத்தையும் அறிந்துகொண்டது போல்தான்.

ஒவ்வொரு குழந்தையும் கல்வி கற்கிறது. பட்டங்கள் வந்து சேர்கின்றன. ஞானியும் குழந்தையாக இருந்தவன்தானே. அவனும் பள்ளிக்கூடம், கல்லூரி, பல்கலைக்கழகம் இங்கெல்லாம் படித்துப் பட்டம் பெறுகிறான். காலப்போக்கில் இவற்றில் சாரமில்லை என்பதை உணர்ந்து ஏட்டறிவைக் குப்டையில் எறிகிறான். மீண்டும் குழந்தைபோல் ஆகிறான்.

குழந்தை அந்தந்த நிமிடத்தில் வாழ்கிறது. தாயார் கோபித்தால் அழுகிறது. பகைமை உணர்வு கொள்கிறது. சில நிமிடங்களிலேயே அது எல்லாவற்றையும் மறந்து தாயின் மடியில் விழுகிறது. ஆனால் நாம் வளர்ந்தபின் நம்மை யாராவது திட்டினால், அவமதித்தால் மனத்தில் முடிச்சு விழுகிறது. அது எத்தனை ஆண்டுகளானாலும் நெகிழ்வதில்லை. திட்டியவர் இறந்துபோயிருந்தாலும் வசவுச்சொல் உன் மனத்தில் பசுமையாக நீடிக்கிறது.

நீரில் கோடிழுத்தால் இழுக்கும்போதே மறைந்துவிடும். மணலில் கோடிழுத்தால் காற்று பலமாக வீசும்வரை அல்லது யாராவது மிதிக்காத வரையில் நீடிக்கும். கல்மேல் கோடு செதுக்கினால் நூற்றாண்டுகளுக்கு நீடிக்கும். குழந்தைப் பருவத்தில் எதுவும் மனத்தில் நிற்பதில்லை. என்றைக்கு உன் மனத்தில் முடிச்சு விழுகிறதோ அன்று உன் குழந்தைப் பருவம் விடைபெறுகிறது. ஞானியிடம் என்றும் பிறரைப் பழிவாங்காத குழந்தைத் தன்மை நீடிக்கிறது.

புத்தரைப் பார்க்க வந்தவர்களில் ஒருவன் அவர் மீது எச்சில் துப்பிவிட்டான்! புத்தர் ஒரு துணியால் முகத்தைத் துடைத்துக் கொண்டபின் "சகோதரா, மேற்கொண்டும் எதுவும் சொல்ல விரும்புகிறாயா?" என்று கனிவுடன் கேட்டார். புத்தரின் சீடர் ஆனந்தர் இதைக் கண்டு கடுஞ்சினம் அடைந்தார். பிறப்பால் சத்திரியர். அந்த சுபாவம் புத்தருடன் 20 ஆண்டுகள் இருந்தும் முடிச்சுப் போட்டிருந்தது. ஆகவே அவர், "பிரபு, அனுமதி கொடுங்கள். நான் இவன் கழுத்தைத் திருகிக் கொன்று விடுகிறேன்," என்று கர்ஜித்தார். புத்தர் அவரை அடக்கினார்.

“ஆனந்தா, இவன் என் மீது துப்பியது வருத்தம் தரவில்லை. உன் கோபம்தான் எனக்கு வியப்பூட்டுகிறது. என்னுடன் 20 ஆண்டுகளாக நீ இருக்கிறாய். உன் பழைய பழக்கம் இன்னுமா நீங்கவில்லை? இவன் ஏதோ சொல்ல விரும்பினான் என்பதுதான் என் அபிப்பிராயம். இவன் மொழி சரியாக அறிந்திராதவனாக இருப்பான். சரியான வசவுச் சொற்களும் நினைவுக்கு வந்திருக்காது. அவனது இயலாமை எச்சிலாக வெளிப்பட்டது.” என்று புத்தர் பெருந்தன்மையாகப் பேசினார்.

பல சமயம் உன்னைச் சந்திக்க வந்தவரை நீ தழுவிக் கொள்கிறாய். சிலசமயம் கை குலுக்குகையில் பிறர் கையைக் கூடுதலாக அழுத்துகிறாய். பிறகுக்கு மாலை சூட்டுகிறாய். சில சமயம் உன் கண்களில் நீர். ஏன் இப்படி? சில சூழ்நிலைகளில் மொழி உதவுவதில்லை. வாய்ச் சொற்கள் பயனின்றிப் போகின்றன. இப்போது வந்தவன் உள்ளத்திலும் ஏதோ ஓர் எண்ணம் முள்ளாய்த் தைத்துக் கிடந்தது. அது எச்சில் மூலம் வெளிப்பட்டு பாரம் நீங்கியவனாகிவிட்டான்.

புத்தரும் ஆனந்தரும் பேசியதை எச்சில் துப்பியவன் கவனித்தான். வீடு திரும்பியபின் அவன் குற்ற உணர்வால் துடித்தான். மறுநாள் அவன் மீண்டும் புத்தரிடம் வந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டினான்.

புத்தர் நகைத்தார். “உனக்கென்ன பைத்தியமா? உன்னை யார் மன்னிப்பது. நீ எவனைத் திட்டினாயோ அவன் இப்பொழுது எங்கே இருக்கிறான்? கடந்த 24 மணியில் கங்கை நதி எவ்வளவோ பாய்ந்து ஓடிவிட்டது. நீ கங்கையை ஏசினாலும் மறுநாள் நீ ஏசிய கங்கை அதே இடத்தில் இருக்காதே. நீ யாரிடம் மன்னிப்புக் கேட்க வந்திருக்கிறாய்? என் மனத்தில் உன்னைக் குறித்துப் பகைமை முடிச்சு இல்லாதபோது நான் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? காற்று வீசியது, சென்றது. அதுபோல் இவ்விஷயத்தை எடுத்துக்கொள். வருந்தாதே.” என்று அறிவுரை கூறினார்.

புத்தர் தொடர்ந்தார்: "கடந்த காலம் சென்றுவிட்டது. சென்றது மீளாது. அது குறித்துச் சிந்தை செய்து கவலையில் விழ வேண்டாம். உடலழுக்கைப் போக்க நீராடுவதைப்போல், மனத்தை சுத்தமாக்கிக் கொள்ள தியானம் மேற்கொள்."

தியானம் என்பதற்கு ஸ்நானம் என்றும் அர்த்தம் கொள்ளலாம். தினமும் குளிப்பதுபோல் தினமும் தியானம் செய். மனமாசு நீங்கியபின் நீ புத்துணர்ச்சி பெறுவாய். குழந்தைபோல் சுத்தமாக ஆவாய்.

மனம் சுத்தமாகிவிட்டால் கர்மங்கள் நம்மைப் பற்றாது. சுத்தமான மனம் தன்னை கர்த்தா என நினைக்காது. கர்த்தா உணர்வு இருந்தால்தான் கர்மம் அதனுடன் ஒட்டிக்கொள்ளும்.

கர்மம் அடிப்படையில் நம்மைக் கட்டிப்போடுவதில்லை. கர்மத்தின் மீதும் அதன் பலன் மீது உள்ள ஆசைதான் கட்டுகிறது. ஆகவே கிருஷ்ணன் அர்ஜுனனைப் போரில் ஈடுபட்டு கர்மம் புரி என்று சொல்லவில்லை. கர்ம பலன் மீது ஆசை வைக்காதே என்று எச்சரிக்கிறார். பலன் ஆசையைக் கைவிட்டால் கடவுள் உன் சார்பில் களத்தில் இறங்குவார்.

அஷ்டாவக்ரர் கூறுகிறார்—எந்த வேலையைத் தொடங்கினாலும் பலனில் ஆசைப்படாதிருப்பதில் கவனம் செலுத்து: செயல் (கர்மம்) தன் போக்கில் நடைபெறட்டும். செயல் புரிதல் வாழ்க்கைக்கு சுபாவமானது. செயல் நின்றுபோவதில்லை. அதன் யாத்திரை தொடரட்டும். ஆனால் உனக்குள் நீ வெற்றிடமாகிவிடு. நீ செயலைச் செய்யாதே; செயலை நிகழவிடு! புத்தர், மகாவீரர், கிருஷ்ணர், இயேசுநாதர் முதலிய எல்லா மகான்களும் வாழ்க்கை முழுதும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தனர். சிறப்பு என்னவென்றால் அவர்கள் எதையும் தாங்கள் செய்தாக நினைத்ததில்லை.

'ஆத்ம ஞானம் பெற்று மனத்தைக் கடந்தவன் பார்த்தல், கேட்டல், ஸ்பரிசித்தல், முகர்தல், உண்ணுதல் முதலிய எல்லா சூழ்நிலைகளிலும் ஒரே சுவையை உணர்கிறான். அவன் போற்றுதலுக்குரியவன்.' **(சுலோகம் 241)**

நம்மால் உடலைக்கூட கடக்க முடிவதில்லை. பசியெடுத்தால் 'எனக்குப் பசியெடுக்கிறது' என்கிறோம். இதேபோல், 'எனக்குத் தலை வலிக்கிறது' என்கிறோம். நுணுக்கமாகப் பார்த்தால் பசி உடலில் உண்டாகிறது, தலைவலி உடலில் உண்டாகிறது என்பது ஒருபுறம். அப்படிப் பசி தோன்றுவதையும், தலை வலிப்பதையும் உணருபவன் இன்னொரு புறம் என்று வேறுபாடு இருப்பது தெரியவரும்.

ஒருவன் உன்னைத் திட்டினால் மனத்திற்குக் கஷ்டமாக இருக்கிறது. ஆனால் கஷ்டப்படும் மனமும், மனம் கஷ்டப் படுகிறது என்பதை அறிபவனும் தனித்தனியானவை. நீ தனியாக மனத்தின் பின்னால் நிற்கிறாய். குளத்தில் கல் விழுந்தால் வளையங்கள் தோன்றுவதை நீ விலகி நின்று பார்ப்பதுபோல், திட்டு என்ற கல் மனமாகிய ஏரியில் எறியப்பட்டால் அதன் விளைவுகளை வெளியிலிருந்து பார்க்கும் பக்குவம் பெறுகிறாய்.

நீ உடலில்லை. நீ மனமில்லை. இவை இரண்டையும் கடந்து வரையறுக்க முடியாதவனாக நீ உள்ளாய். இந்த நிலையை சாட்சி மனப்பான்மை என்கிறோம்.

மனத்தின் பாதிப்பைக் கடந்துவிட்டால், சுகம்-துக்கம் இரண்டும் எந்த விளைவையும் ஏற்படுத்துவதில்லை. அத்தகையவன் தன்னை யாராவது திட்டினாலும் பூமாலை சூட்டினாலும், தனக்கு வெற்றியோ, தோல்வியோ எது நேர்ந்தாலும், முள்ளால் குத்தினாலும் மலரால் வருடினாலும் ஒரேமாதிரியாக இருப்பான். இதை சமரச மனப்பான்மை என்கிறோம்.

இன்பம்-துன்பம், வாழ்வு-சாவு, நட்பு-பகைமை, இரவு-பகல் என்பவை எல்லாம் சமமான அதிகாரமும் உடையவை. சுகம் வேண்டும் என்று கேட்காதே. துன்பம் வேண்டாமென்று கேட்காதே. எதுவுமே வேண்டும் என்று கேட்காதே. எது நடந்தாலும் சரி. நீ சமரச சாட்சியாக இருந்துவிடு. சலனமற்ற இந்நிலை போற்றுதலுக்கு உரியது.

நமக்குள்ளே விசேஷமான பகுதி ஒன்று உள்ளது. அது எந்த உணர்வினாலும் தொடப்படுவதில்லை. அதுதான் உனது

ஆத்மா. அதை நாம் அறிந்துகொண்டால் கடவுளையும் அறிந்துகொண்டுவிட்ட மாதிரிதான்.

ஜனகர் அரண்மனையில் ஆடம்பர சூழ்நிலையில் வாழ்ந்தவர். அதே சமயம் எதிலும் பற்றின்றி சாட்சி மனப்பான்மையும் பெற்றிருந்தார். மகாவீரரும் புத்தரும்கூட சாட்சி மனப்பான்மை கொண்டிருந்தனர். ஆனால் அவர்கள் அரண்மனை வாழ்வை தியாகம் செய்துவிட்டு வெளியேறியவர்கள். ஜனகரோ தாமரை இலை நீர் போல் சுகத்தின் நடுவில் ஒட்டாமல் வாழ்ந்தவர்.

ஒரு குரு தன் சீடன் ஒருவன் ஆன்மிகப் பயிற்சியில் மிகவும் பின்தங்கியிருந்தது கண்டு வருத்தமடைந்தார். "நீ ஜனகருடன் சில நாள் இரு. நீ ஞானம் பெறுவாய்." என்று கட்டளையிட்டார். சீடன் திகைத்தான். துறவு வாழ்க்கை நடத்தும் தன் குருவால் சொல்லித்தர முடியாத அப்படியென்ன விஷயம் அரச வாழ்க்கை நடத்தும் ஜனகருக்குத் தெரிந்திருக்கப் போகிறது என்று குழம்பினான். குருவின் கட்டளையை மீற முடியாதென்பதால் மிதிலை நகருக்குச் சென்றான்.

அவன் ஜனகரின் அரச சபையை அடைந்தபோது அங்கு பாட்டும் நடனமுமாக இருந்தது. அரச நர்த்தகியர் குழுவாக நடனமாடிக் கொண்டிருக்க, சபையோர்கள் ரசித்து சந்தோஷமாக இருந்தனர். சீடன் ஜனகரைப் பார்த்து உரத்த குரலில் சொன்னான்:

"மகாராஜா! என் குரு அனுப்பியதால்தான் நான் இங்கு வந்தேன். எங்கோ, ஏதோ தவறு நடந்திருக்கிறது. நான் செய்த எந்த பாவத்திற்கு தண்டனையாக அவர் என்னை உங்களிடம் அனுப்பினாரோ தெரியவில்லை. இங்கு வந்துவிட்டதால் உங்களை நான் ஒரு கேள்வி கேட்டாக வேண்டும். நீங்கள் ஞானம் பெற்றவர் என்றொரு கருத்து எங்கும் பரவியிருக்கிறதே அது உண்மையா, வதந்தியா, அரசியல் பிரச்சாரமா? இந்தப் பேரரசு, இந்த அரண்மனை, ஐஸ்வர்யம், ஆட்சிக் கடமைகள் இவற்றின் நடுவில் வீற்றிருக்கும் நீங்கள் எப்படி ஞானம் பெற்றவராக இருக்க முடியும்? தியாகத்தின் மூலமாகத்தானே ஞானம் கிடைப்பது வழக்கம்."

ஜனகர் நேரடியான பதில் கூறாமல் சீடனிடம், "இதைப் பற்றி விவாதிக்க இப்போது அவகாசமில்லை. உனக்கு ஓர் அகல்விளக்கு தருகிறேன். நீ இதை எடுத்துக்கொண்டு அரண்மனை முழுவதையும் சுற்றிப் பார்த்துவிட்டுவா. பிறகு நாம் பேசுவோம். ஆனால் வழியில் எங்கும் விளக்கு அணையக்கூடாது. அணைந்தால் வழி தவறிவிடும். நீ சுற்றிச் சுற்றி வரவேண்டியது தான். என்னை மீண்டும் சந்திக்க முடியாது," என்று எச்சரித்தார்.

மாபெரும் மாளிகை. ஏராளமான அறைகள். எதிர்பாராத திருப்பங்கள். ரகசியப் பாதைகள். வழியையும் கவனித்தபடி, விளக்கும் அணையாமலிருப்பதில் கவனம் செலுத்தி, ஜனகரிடம் திரும்பி வருவதற்குள் அவன் திணறிவிட்டான்.

"அரண்மனையை நன்கு சுற்றிப் பார்த்தாயா? எப்படி இருக்கிறது?" என்று ஜனகர் விசாரித்தார்.

சீடன் அலறினான், "போதுமடா சாமி! நான் விளக்கைப் பார்ப்பேனா, அரண்மனையைப் பார்ப்பேனா?" ஜனகர் அவனைத் தட்டிக்கொடுத்தார். "நாம் நாளைய தினம் பேசுவோம். நீ ஆசிரமத்திலிருந்து நடந்துவந்ததாலும், அரண்மனைக்குள் சுற்றியதாலும் களைத்துவிட்டாய்," என்று கூறி, படுக்க அழைத்துச் சென்றார்.

அழகான படுக்கையறை. விலையுயர்ந்த கட்டில், மெத்தை. அங்கே படுக்கச் சொல்லிவிட்டுக் கிளம்பும் சமயம் ஜனகர், "அதோ பார்த்தாயா, மேலே ஒரு கத்தி தொங்குகிறது. நீ தூங்கிவிட்டால் அது உன்மேல் விழுந்து உன்னை இரண்டாக வெட்டிவிடும்," என்று எச்சரித்தார்.

பாவம், சீடன் இரவெல்லாம் தூங்கவில்லை. இலேசாகக் கண்ணை மூடினாலும் கத்தி தன் மேல் விழுந்துவிடுமோ என நடுங்கினான். ஜனகர் காலையில் வந்து சந்தித்தார். "எப்படிக் கழிந்தது இரவு? படுக்கை வசதியாக இருந்ததா?" என்று கேட்டார்.

"படுக்கையாவது, தூக்கமாவது?" சீடன் குமுறினான். காட்டில் என் குடிசையில் ஆனந்தமாகத் தூங்குவது வழக்கம். முதலில் விளக்கைக் கொடுத்து சித்திரவதை செய்தீர். இரவில்

தலைக்குமேல் தொங்கும் கத்தியைக் காண்பித்து பயமுறுத்தினீர். நான் அப்பாவி. என்னை வம்பில் மாட்டிவிட்டீர்கள். என்னைத் திரும்பிப்போக விடுங்கள்,'' என்று கெஞ்சினான்.

''சரி. நீ சாப்பிட்டுவிட்டுக் கிளம்பலாம். பிறகு நாம் உன் அனுபவம் குறித்து விவாதிப்போம். நீ கிளம்பிய பிறகு உன் குரு எனக்கு நேரடியாக ஒரு செய்தி அனுப்பியுள்ளார். சாப்பிட்ட பிறகு என்னுடன் சர்ச்சையில் ஈடுபட்டு உனக்கு ஞானம் பிறக்காவிடில் உன்னைக் கழுமரத்தில் ஏற்றிக் கொன்றுவிடச் சொல்லியிருக்கிறார்,'' என்று ஜனகர் தெரிவித்தார்.

சீடன் சாப்பிட உட்கார்ந்தான். ருசியான அரண்மனை விருந்து. ஆனால் அவனால் ரசிக்க முடியவில்லை. மனத்துக்குள் நடுங்கினான். பதினான்கு ஆண்டுகள் குருவிடம் படித்தும் கிடைக்காத ஞானம் ஜனகருடன் சிறிது நேரத்தில் விவாதத்தில் ஈடுபட்டால் எப்படிக் கிடைக்கும் என்று அவனுக்குப் புரியவில்லை.

''சாப்பாடு எப்படி இருந்தது? குருகுல பத்திய உணவு சாப்பிட்டு நாக்கு செத்துப்போயிருக்குமே,'' என்றார் ஜனகர்.

''என்ன சாப்பிட்டேன் என்றே எனக்கு நினைக்கவில்லை. என்னைக் கழுமரம் நினைவே ஆக்கிரமித்திருந்தது. எப்படியாவது இங்கிருந்து தப்பி ஓடிவிட உதவுமாறு கடவுளை வேண்டுகிறேன்,'' என்று சீடன் பரிதாபமாகக் கூறினான்.

''நீ தாராளமாக இங்கிருந்து செல்லலாம். நான் என்ன சொன்னேன் என்று குரு உன்னைக் கேட்பாரல்லவா? அதையும் கேட்டுக்கொண்டு போ,'' என்றார் ஜனகர்.

1. நேற்றிரவு நீ விளக்கை ஏந்தி அலைந்தாய். அது அணைந்து போகுமோ என்று அஞ்சினாய். அரண்மனையின் அழகை நீ அனுபவிக்க முடியவில்லை. அவ்வாறே வாழ்க்கை என்பதும் ஒரு விளக்கு. இதுவும் எந்த நிமிடமும் அணைந்துவிடக் கூடியது. அணைந்துபோனால் நீ சாவின் இருட்டில் அலைய வேண்டியிருக்கும். விளக்கு அணை வதற்கு முன்பே வாழ்க்கையைப் புரிந்துகொண்டுவிட

வேண்டும். நான் அரண்மனையில் இருக்கிறேன்தான். ஆனால் அரண்மனை எனக்குள் இல்லை.

2. இரவு உனக்கு நேராகக் கத்தி தொங்கியதால் நீ தூங்க வில்லை. அந்தக் கத்தி எல்லா நேரமும் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. நம் எல்லோருக்கும் மேற்புறமாகத் தொங்கியபடி உள்ளது. அந்தக் கத்தி சாவின் அடையாளம். அதன் மூலம் எல்லோர் தலைக்கும் ஆபத்துதான். கத்தி எந்த நிமிடமும் நம் மேல் விழலாம். இதை உணர்ந்த என்னால் அரச கேளிக்கைகளில் எப்படி இன்புற முடியும்? அவை என் கண்ணெதிரே நிகழ்கின்றன. ஆனால் கண் வழி புகுந்து அவை என் மனத்தினுள் நுழைவதில்லை.

3. தலைசிறந்த உணவு உனக்கும் பரிமாறப்பட்டது. ஆனால் அது உனக்கு ருசிக்கவில்லை. எனக்கும் இத்தகைய அரச விருந்து பிடித்தமாக இல்லை. மிக ருசியான உணவும் தொண்டைக்கு அப்பால் உணரப்படுவதில்லை. நானும் சாப்பிடுகிறேன். ஆனால் சாப்பாடு என்னைச் சாப்பிட விடுவதில்லை.

ஜனகர் கூறும் 'நான் மாளிகையில் இருக்கிறேன். ஆனால் மாளிகை எனக்குள் இல்லை. நான் உலகில் இருக்கிறேன். ஆனால் உலகம் எனக்குள் இல்லை' என்பதுதான் ஞானியின் முதன்மையான லட்சணம். அவன் கர்மங்களைச் செய்துவந்தாலும் எதிலும் அவன் ஒட்டுவதில்லை. இதுவே சாட்சி நிலை, மனத்தைக் கடந்த நிலை.

மனத்தைக் கடந்துவிட்டால் உனக்கு ஒரு சுவைதான் (ஏக ரசம்) இருப்பதாகத் தோன்றும். மனத்தில் பலவிதமான சுவைகள் (ரசங்கள்) இருக்கும். காரணம், நமக்கு இருப்பது ஒரு மனம் அல்ல, பல!

மகாவீரர் இதனால் மனிதனை பஹுசித்தவான் (பல மனசுக்காரன்) என்கிறார். நம் மனம் விட்டு-விட்டு மாறியபடியே உள்ளது. காலை-பகல்-மாலை என்று நமது மனநிலை வெவ்வேறு விதமாக அமைகிறது. இதை மனத்தத்துவ இயல் Polypsychic என்கிறது.

ஞானி குர்ஜியேஃப் ஒவ்வொருவனும் தனி நபர் இல்லை, ஒரு கூட்டம் என்கிறார். காலையில் மகிழ்ச்சியாகத் தெரிந்தாய். மாலையில் சோகமாகத் தெரிகிறாய். ஆகவே வெவ்வேறு மனம் இருப்பது தெளிவு. நண்பனிடமிருந்து கடிதம். சந்தோஷமாகப் பிரிக்கிறாய். அதிலுள்ள செய்தியைப் படித்து அடுத்த நிமிடமே துக்கப்படுகிறாய்.

இவ்வாறு மனமென்னும் பச்சோந்தி நாள் முழுதும் நிறத்தை மாற்றியபடி உள்ளது. ஒரே பொருளான கடவுளுடன் நீ ஒன்றினால்தான் உன் மனம் ஒரே சுவையில் (ஏக ரசம்) ஆழ்ந்திருக்கும்.

'எப்பொழுதும் வானத்தைப்போலே துடைத்துவிடப்பட்ட ஞானிக்கு உலகமோ, உலகத் தோற்றமோ, சாதிக்க வேண்டிய வையோ, அதற்கான சாதனங்களோ எப்படி இருக்க முடியும்?' **(சுலோகம் 242)**

**து**டைத்துவிடப்பட்ட நிலையில் மனத்தில் சாட்சி உணர்வு மட்டுமே இருக்கும். உலகம் என்பது மனத்தின் பிரமை. சீடன் ஜனகரின் அரண்மனையில் அலைந்ததுபோல் மனம் உலகில் சுற்றித் திரிகிறது. விளக்கு எரியும் வரையிலும் வழி தவறாது.

சாட்சி மனப்பான்மை பெற்றுவிட்டவனுக்கு அதற்கு அப்பால் அடைய வேண்டியது எதுவும் மிஞ்சியிராது. ஆகவே எதையும் அடைவதற்கான கருவிகளோ, உபாயங்களோ அவனுக்குத் தேவைப்படா. அவன் மோட்சம் தேடியும் செல்வதில்லை. சாட்சியானாலே முக்தி பெற்றுவிட்டதாக அர்த்தம்.

**ஒ**ரு கிராமத்தில் விசித்திரமான சாமியார் ஒருவர், எங்கு சென்றாலும் ஒரு மூட்டையைச் சுமந்தபடி காணப்படுவார். அந்த மூட்டையின் பக்கவாட்டில் 'மாயை' என்று பெரிய எழுத்துகளில் எழுதப்பட்டிருந்தது. சாமியார் வழியில் கிடக்கும் வண்ணக் காகிதங்களைத் திரட்டி மூட்டைக்குள் போட்டுக் கொள்வார்.

மக்கள் காரணம் கேட்டால் சாமியார், "இவை என் உயிருக்கு சமம். இவை தொலைந்தால் நான் உயிர் தரியேன். நான் திவாலாகிவிடுவேன். இவை திருடப்பட்டால் தற்கொலை

செய்துகொள்வேன். இதுதான் என் சொத்து. இதை வைத்து இந்த கிராமத்தில் இடிந்துள்ள கோட்டையை மீண்டும் கட்டுவேன். அதன் மீது என் கொடி பறக்கும். நான் ராஜாவாக இருப்பேன். இந்தக் காகிதங்கள் மூலம் பெரிய படகு தயாரிப்பேன். அதில் பயணித்துப் பிறவிக் கடலைக் கடப்பேன்,'' என்று விதம் விதமான அறிவிப்புகள் செய்து வந்தார்.

ஒருமுறை அங்கு ஒரு ஞானி வந்தார். அவர் மக்களிடம், "அந்த சாமியாரைக் கிறுக்கு என நினைக்காதீர்கள். இவரைக் கேலி செய்யாதீர்கள். இவரை வழிபடுங்கள். அவர் உங்களுக்காக, உங்கள் சார்பாகத்தான் மூட்டை சுமக்கிறார். நீங்கள் மாயையில் மூழ்கியிருப்பதை அவர் இப்படி நினைவூட்டுகிறார். நீங்கள் 'இதை சாதிப்பேன்-அதை சாதிப்பேன்' என்றெல்லாம் செய்யும் ஆர்ப்பாட்டத்தைத்தான் அவர் தான் செய்யப் போவதாகச் சுட்டிக்காட்டுகிறார். உங்கள் மனக்கோட்டையை அவர் தமதாக உருவகப்படுத்திச் சொல்கிறார்,'' என்று விளக்கினார்.

சாமியார் சிரித்தபடியே ஞானியைப் பார்த்து, "அவர்களுக்கு புத்திமதி கூறாதீர்கள். அவர்களுக்கு எது சொன்னாலும் ஏறாது. நான் பல ஆண்டுகளான முயன்றும் இவர்கள் புரிந்துகொள்ள வில்லை. அவர்கள் என் தோளிலுள்ள மூட்டையை மட்டும பார்க்கிறார்கள். தங்களிடம் உள்ள மூட்டை அவர்களின் கண்ணுக்குத் தெரிவதில்லை.* மக்கள் என் மூட்டையைப் பார்த்து என்னைக் கிறுக்கு என்கின்றனர். உண்மையில் அவர்களே பைத்தியக்காரர்கள்,'' என்றார்.

ஆகவே நாம் விழிப்புப் பெறவேண்டும். இல்லாவிடில் மீண்டும்-மீண்டும் பிறப்பு-இறப்பிற்கு ஆளாவோம். இதை எப்படித் தடுப்பது என்பது பற்றி கிழக்கத்திய ஞானிகள் சிந்தனை செய்திருக்கிறார்கள். அதற்கோர் உபாயம் உண்டு. உனக்குள்

---

* பாரதியார் குள்ளச்சாமி என்பவரை குருவாக துதித்தார். இந்த சாமியார் பழங்கந்தை அழுக்கு மூட்டை சுமந்து வருவதைக் கண்டு பாரதியார் பித்தருடைய செய்கை ஏன் என்று கேட்க, சாமியார் சொன்னார்:

புறத் தேநான் சுமக்கின்றேன் அகத்தி னுள்ளே
இன்னதொரு பழங்குப்பை சுமக்கி றாய்நீ

பிறப்பு-இறப்பு இல்லாத ஒன்று (அ்ம்ருத) உள்ளது. அது அமுத சொரூபமானது. அது உனக்குள் ஜொலிக்கும் வைரமாகும். அதைத் தேடு. அதுவே உனது செல்வம்.

இதற்காக அதிகத் தொலைவு அலைய வேண்டியதில்லை. உடலினுள் மனம் இருக்கிறது. அதற்கு நேர் பின்னால் சாட்சித் தன்மை உள்ளது. இந்த இரண்டிற்குமிடையே ஓர் அங்குல இடைவெளிகூட இல்லை. கொஞ்சம் உள்நோக்கிச் சரிந்துபோ. நீ பிறவிகள் தோறும் எதைத் தேடினாயோ அது உனக்குக் கிடைத்துவிடும்.

சாட்சித் தன்மை ஆகாயம் போன்றது. ஆகவே அது எல்லைகளற்றது. ஆனால் மேகங்கள் வந்தால் ஆகாயம் தெரியாததுபோல் மனத்தில் எண்ணங்கள் எழும்புகையில் சாட்சித் தன்மை தற்காலிகமாக மறைந்து போகிறது.

'தன்னுடைய செயல்களின் பலனைத் துறந்து பூரணமான ஆனந்த சொரூபம் பெற்ற ஞானி ஆன்மிக வெற்றிவீரனாகிறான். அவன் மேற்கொள்ளும் இயல்பான சமாதி இடைவிடாமல் முன்னேற்றம் காணும்.' **(சுலோகம் 243)**

**நா**ம் நம் செயல்களுக்கான அர்த்தம் தேடுகிறோம். அர்த்தம் என்பதற்கு பலன்கள், விளைவுகள் என்று பொருளுண்டு. சந்நியாசி கடமைகளைச் செய்வான். பலன்களைக் கடவுள் பொறுப்பில் தள்ளிவிடுவான். 'கடவுள் என்னை இட்டுச் செல்கிற படி செல்வேன். மூழ்கடித்தால் மூழ்குவேன். அவர் ஆட்டு விக்கின்றபடி ஆடுவேன்' என்று கூறுபவனே சந்நியாசி.

இவ்வாறு தன்னை இறைவனிடம் ஒப்படைத்துவிட்டவனின் வாழ்வில் ஆன்மிக ரசம் பெருக்கெடுக்கிறது. உன் அகங்காரம் தான் அந்த அருவியை ஓடவிடாமல் பாறைபோல் தடுக்கிறது.

சமாதி நிலை இயல்பாக வாய்த்தால்தான் தொடர்ந்து நிகழும். அது முயற்சியின்றி சுபாவமாக அமைய வேண்டும். இங்குதான் பதஞ்சலியும் அஷ்டாவக்ரரும் வேறுபடுகின்றனர். பதஞ்சலி கூறும் சமாதி யமம், நியமம், பிராணயாமம், தியானம், தாரணை என்ற நீண்ட பயணத்தின் முடிவில் சாத்தியமாகிறது. அதற்குத்

திட்டமிட வேண்டும். முயற்சி மேற்கொள்ள வேண்டும். இவ்வாறு தன்னை வருத்திக்கொள்ள வேண்டும். இயற்கையாக அமையாமல், 'பெற்றே தீருவேன்' என்னும் பிடிவாதத்துடன் பின்பற்றப்படுவதால் இவ்வழி சங்கல்ப மார்க்கம் எனப்படுகிறது.

அஷ்டாவக்ரர் சமர்ப்பணத்தை வலியுறுத்துகிறார். 'நான் முயன்று சமாதிநிலையை அடைவேன்' என்னும் அகங் காரத்தைக் கைவிடச் சொல்கிறார். நீ அகங்காரத்தால் முதலில் உலகை ஜெயித்தாய். இப்பொழுது கடவுளையும் ஜெயிக்க நினைக்கிறாய். ஒரே தாவலில் சமாதி நிலையை அடையலாம். அதற்குரிய வழி 'கடவுளே! உமது விருப்பமே எனது விருப்பம் ஆகுக' என்று நீ உன்னை ஒப்படைத்து விடுவதுதான்.

இதுவே சகஜ (இயல்பான) சமாதி என்பது. இங்கே உனது தனிப்பட்ட முயற்சிக்கு இடமில்லை. தனிப்பட்ட பயிற்சிகளால் உன்னைத் துன்புறுத்திக்கொள்ள வேண்டியதில்லை.

பொதுவாக, மக்கள் மேற்கொள்ளும் சமாதி செயற்கையானது. உண்ணாநோன்பு மேற்கொள்ளுகிறாய். உடல் மெலிவடைகிறது. எண்ணங்கள் தோன்றப் போதுமான சக்தி பெருகுவதில்லை. இந்த எண்ணமில்லாத நிலையை சமாதி என நினைத்து மக்கள் ஏமாறுகிறார்கள். ஆனால் இது பட்டினியால் பாம்பு அரை மயக்கத்தில் கிடப்பது போன்ற நிலைதான். நோன்பு முடித்து எதையும் நீ சாப்பிட்டதும் மனமென்னும் பாம்பு படமெடுக்கும். மனத்தைக் கட்டாயப்படுத்திப் பலன் பெற, முடியாது.

**ஹா**ர்வர்ட் பல்கலைக்கழகத்தில் ஒரு பரிசோதனை நடந்தது. சில மாணவர்களை உண்ணாவிரதம் மேற்கொள்ளுமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. ஏழு நாள் ஆன பின் அவர்களுக்கு ஹாலிவுட் நடிகைகளின் கவர்ச்சிப் படங்கள் கொண்ட பத்திரிகைகள் வழங்கப்பட்டன. உடல் சக்தி இழந்தால் மனமும் உலர்ந்து போயிருந்த நிலையில் மாணவர்கள் அந்த பத்திரிகைகளைத் தொடக்கூட இல்லை.

எட்டாவது நாள் அவர்கள் சாப்பிட அனுமதிக்கப்பட்டார்கள். உடனே உடலில் சக்தி பெருகியது. மனத்தில் எண்ணங்கள்

எழுந்தன. அவர்கள் உடனே அந்த பத்திரிகைகளை மீண்டும் பெற்று ஆர்வமாகப் படிக்கத் தொடங்கிவிட்டார்கள்!

இந்த பரிசோதனை மூலம் நாம் தெரிந்துகொள்வது என்னவென்றால் உடலுக்கு சக்தி கிடைக்காவிடில் மனத்துக்கு சக்தி கிடைக்காது. உடலின் வழியாகத்தான் மனத்தில் சக்தி ஏறுகிறது. இந்த வழியாக சக்தி இல்லாமல் போவது முக்தியன்று. முக்தி என்பது மகாசக்தி திரண்ட நிலையில் நடைபெறுகிறது.

ஆகவே நான் சுபாவமான (சகஜ) சமாதியை வலியுறுத்துகிறேன். சாதாரணமாக இருந்தபடி, உண்டும்-பருகியும் இருந்தபடி, சுயமாக சமாதி நிகழ்ந்தால் அதுதான் மதிப்பு வாய்ந்தது. கட்டாயப்படுத்தி மேற்கொள்ளப்படும் சமாதி காகிதப்பூக்கள் போன்று மதிப்பற்றது.

'மேற்கொண்டு கூடுதலாகச் சொல்வதில் என்ன பிரயோஜனம்? ஞான புருஷர்கள் போகம், மோக்ஷம் ஆகியவற்றுக்கு ஆசைப்படுவதில்லை. எதிலும் அவர்கள் ஒட்டிக்கொள்ளாமல் இருக்கிறார்கள்.' **(சுலோகம் 244)**

**கூ**டுதலாகச் சொல்வதால் பயனில்லை என்பதற்கு எவ்வளவு சொன்னாலும் மாளாது என்று அர்த்தம் கொள்ள வேண்டும். சொல்லவிட்டதும் நிறைய மிஞ்சியிருக்கும். அல்லது இத்தனை நீட்டி முழக்க வேண்டியதில்லை. விஷயம் சுருக்க மானதுதான் என்று அவர் கூறுவதாகவும் வைத்துக்கொள்ளலாம். போகம், மோட்சம் இரண்டின் மீதும் ஆசை நீங்கியவன் அவன் சரியான பொருளைத் தெரிந்து கொள்வான். அவனே சந்நியாசி.

சமய சம்பிரதாயங்கள் நம் மனத்தைச் சுருக்கிவிடுகின்றன. சாஸ்திரங்களும் நம் மனம் விரிவடையவிடாமல் தடுக்கின்றன. மதங்களும் நம்மைச் சுற்றிலும் சுவர் எழுப்புகின்றன.

**ம**காராஷ்டிரத்தில் ஏகநாதர் என்றொரு ஞானி இருந்தார். ஒருவன் அவரிடம் அடிக்கடி வந்து தனக்கு ஞான உபதேசம் வழங்குமாறு தொந்தரவு செய்வான். அவர் எவ்வளவோ உபதேசித்தும் அவனது மரமண்டையில் எதுவும் ஏறவில்லை. 'வாழ்க்கையில் பாவமே செய்யாமல் இருப்பது சாத்தியமா?' என்று

அவரைத் துளைத்துக் கொண்டிருந்தான். "நீங்கள் எப்படி பாவ எண்ணங்களே இல்லாமல் வாழ்க்கை நடத்த முடிகிறது என்பதைச் சொன்னால் நானும் அந்த வழியைப் பின்பற்றுகிறேன்," என்று அவன் மன்றாடினான்.

ஏகநாதர் மனத்தில் ஒரு திட்டம் தோன்றியது. "பாவ புண்ணியம் பற்றி நாம் பிறகு வாய்ப்புக் கிடைத்தால் பேசலாம். எனக்கென்னமோ நீ ஒரு வாரம்தான் உயிருடன் இருப்பாய் என்று தோன்றுகிறது," என்றார். அந்த மனிதன் ஆடிப்போனான். வீட்டுக்கு விரைந்தான். உடனே படுக்கையில் வீழ்ந்தான். குடும்பத்தினர் விசாரித்தபோது தனக்கு இன்னும் ஏழு நாள்தான் ஆயுள். அதற்குள் குடும்பக் கணக்கு வழக்குகளை முடிவு செய்துவிட வேண்டும் என்றான். அப்படியெல்லாம் மரணத்தை யாரும் முன்கூட்டியே கணிக்க முடியாது என்று குடும்பத்தினர் எடுத்துச் சொல்லியும் அவனால் ஏற்க முடியவில்லை. சாப்பாட்டில் ருசி நீங்கி அளவும் குறைந்துவிட அவன் நிஜமாகவே நோயாளி போல் ஆகிவிட்டான்.

ஏழாம் நாள் மாலை. சூரியன் மறையும் நேரம். வாசலில் ஏதோ சத்தம். சாவு நெருங்கிவிட்டதென அந்த மனிதன் நினைத்தான். அப்போது உள்ளே வந்தார் ஏகநாதர்! அவரைப் பார்த்து அவனால் கைகுவிக்க முடியவில்லை; நமஸ்காரம் என்று சொல்ல முடியவில்லை; குரல் எழும்பவில்லை. "ஏன் படுத்திருக்கிறாய்? என்ன பிரச்சினை?" என்று ஏகநாதர் விசாரித்தார். "வேறென்ன? சாவு நெருங்கிக் கொண்டிருக்கிறது," என்றான் அவன் தீனமாக.

"சரி, ஒரு விஷயம் தெரிந்துகொள்ளவே இப்போது வந்தேன்," என்ற ஏகநாதர், "இந்த ஏழு நாளில் ஏதாவது பாவம் செய்தாயா? பாவம் செய்யும் எண்ணமாவது தோன்றியதா?" என்று கேட்டார்.

"சுவாமி! வேடிக்கைக்கும் ஒரு எல்லை கிடையாதா? எதிரே சாவு நின்றுகொண்டிருக்கிறது; பாவம் செய்ய வசதி எங்கே உள்ளது? மனத்தில் பாவ எண்ணம் எப்படி உதிக்க முடியும்?" என்று அவன் அழுகுரலில் சொன்னான்.

ஏகநாதர் கம்பீரமாக மொழிந்தார்: “இதோ பாரப்பா, எழுந்திரு. உன் சாவு இன்னும் வர அதிகக் காலம் பிடிக்கும். உன் கையிலுள்ள ஆயுள்ரேகை நீளமாக உள்ளது. நீ கேட்ட கேள்விக்கான பதில் இதுதான். சாவு எதிரே நிற்கும்போது மனத்தில் பாவ உணர்வே தோன்றாது. சாவின் நினைவு பாவம் செய்வதைத் தடுக்கும்.”

நமது வாழ்க்கை ஒவ்வொரு விநாடியும் கரைந்துகொண்டே செல்கிறது. காலம் நிற்காமல் ஓடுகிறது. இதை நினைவில் வைத்தால் பாவம் செய்யத் தோன்றுமா? சாவு எல்லாவற்றையும் அபகரித்துவிடும் என்கிற நிலையில் திரட்டிச் சேமிப்பதால் என்ன பயன்? சாவு துடைத்து பெருக்கிவிடும் என்கிற நிலையில் அடுக்கி வைத்து என்ன பயன்? இவ்வாறு சாவைப் பற்றித் தெளிவு வந்துவிட்டால் பாவம் செய்யத் தோன்றாது என்பதுதான் ஏகநாதரின் மறைமுகமான அறிவுரை. சாவு பயம், சாவுக்குப் பின்னால் என்ன என்ற பயம், பாவச் சிந்தனையை நெருங்க விடாது.

இக்கதையின் முடிவு தரப்படவில்லை. புத்தியுள்ளவன் சாவு என்றைக்கும் நிகழலாம், ஒரு வாரக் கெடுகூட அதிகம் என உணர்ந்து வாழ்க்கையைச் சீராக்கிக்கொள்வான். பாவ நினைவுகளை அகற்றிவிடுவான். சிலருக்கு உண்டாகும் சாவு பயம் தற்காலிகமாக அமைந்து, சாவு அபாயம் நீங்கிவிட்டதுபோல் தெரிந்தால் பழைய பாவமயமான வாழ்க்கைக்குத் திரும்பி விடுவார்கள்.

பிரபலமான இன்னொரு கதையை இந்துக்கள் அனுபவித்துக் கூறுகிறார்கள். ஒரு கொடிய பாவி இறக்கும் தறுவாயில் உள்ளான். அப்போது தன் மகனை இருமுறை பெயர் சொல்லிக் கூப்பிடுகிறான். மகன் பெயர் நாராயணன். இது மகாவிஷ்ணுவின் காதிலும் விழுகிறது. சாகும் சமயம் அவன் தன்னைத்தான் கூப்பிடுவதாக அவர் நினைத்து விடுகிறார். ஆகவே அவன் முன் தோன்றி அவனுக்கு மோட்சம் கிடைக்கச் செய்கிறார்!

நம்ப முடியாத கதை. சொல்பவர் ஓர் அர்த்தமும், கேட்பவர் இன்னோர் அர்த்தமும் எடுத்துக் கொள்ள முடியும். கொடிய பாவியானாலும், கடைசி நிமிடத்திலாவது கடவுள் பெயரைச் சொன்னால் மோட்சம் கிடைக்கும் என இக்கதை தெரிவிக்கிறது. அவன் கூப்பிடுவது அவனது மகனைத்தான் எனத் தெரிந்தும் கடவுள் கருணையுடன் வந்து காப்பாற்றுகிறார் என்றும் கூறலாம்.

ஆனால் கடவுள் அந்த அளவிற்கு ஏமாளியா? மனிதன்கூட அப்படி ஏமாறமாட்டானே. மேலும், ஒரு மனிதன் வாழ்க்கை முழுதும் பாவம் செய்துவிட்டு, கடைசி நிமிடத்தில் மகன்களை கூப்பிட்டால்கூட போதும். கடவுள் மோட்சம் தந்துவிடுவார் என்பது சமூகத்தில் அராஜக நிலையை உண்டாக்கும். இந்துக்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கடவுளின் பெயர்களில் ஒன்றைச் சூட்டுவது சுயநலத்தாலா என்ற சந்தேகமும் எழுகிறது.

'அநேக அம்சங்களாலான, இரட்டைகளாலான இவ்வுலகில் உள்ளவை பெயரளவில் மட்டுமே வெவ்வேறு. அவற்றை தியாகம் செய்வதால் சுத்த ஞானம் பெறுபவனுக்குத் தனிப்பட்ட முறையில் என்ன கடமைகள் மிஞ்சியிருக்க முடியும்?' **(சுலோகம் 245)**

**உ**லகம் ஏராளமான பிரிவுகளைக் கொண்டுள்ளது. நாற்புறமும் ஏராளமான தோற்றங்கள் தென்படுகின்றன. ஆனால் இவை பெயரளவில்தான் வெவ்வேறு. நகைகள் பலவிதமாக இருந்தாலும் அவை எல்லாம் தங்கத்தால் செய்யப்பட்டவை என்பதுபோல்தான் இதுவும். விஞ்ஞானமும் எல்லாப் பொருள் களும் எலக்ட்ரான்களின் வெவ்வேறு விகித சேர்க்கையில் உருவானவை என்று பேசுகிறது. இதை அறிந்து புரிந்து கொண்டவன் இப்படிப் பலதரப்பட்ட பெயர்களிலும் உருவங் களிலும் மயங்கமாட்டான். கற்பனைகளின் வலையில் அகப்பட்டுக் கொள்ள மாட்டான். கற்பனை செய்வதைக் கைவிடுவான்.

நமது கற்பனை பொருட்களைப் பெறுவதில், பிறரை வசப்படுத்துவதில் சுறுசுறுப்பாக இயங்குகிறது. கற்பனையை தியாகம் செய்ததும் உன் மனத்தில் சுத்தமான புத்தி குடியேறுகிறது. இதன் பிறகு, எதுவும் செய்வதற்கோ, செய்யாமலிருப்பதற்கோ எதுவும் மிஞ்சியிருப்பதில்லை. சொந்தக் கடமை என்றும் தனியாக

எதுவுமில்லை. செய்பவர் (கர்த்தா) கடவுள் என்பது புரிந்துவிட்டால் உனக்கு என்ன கடமை மிச்சமிருக்கும்? கற்பனையின் காரணமாக நீ குழப்பத்திலுள்ளாய். உன்னை உலகம் கட்டிப்போடவில்லை. உன் கற்பனைதான் உன்னைக் கட்டிப்போட்டுள்ளது.

சமயத் தலைவர்கள் உலகம்தான் உன்னைக் கட்டிப் போட்டுள்ளதாகக் கூறுகிறார்கள். ஆகவே உலகத்தை (சமூகத்தைக்) கடந்து செல்லுமாறு உபதேசிக்கிறார்கள். அது சரியில்லை. நீ உன் கற்பனையைத்தான் வீழ்த்த வேண்டும். கற்பனை வீழ்ந்ததுமே சுத்த அறிவு உனக்குள் நிரம்பும்.

கற்பனை நம்மை 'இதைத் தேடி பெறு-அதைத் தேடி பெறு' என்றெல்லாம் அலைக்கழிக்கும். இதில் நமது சக்தி வீணாகிறது. நாம் வெறிபிடித்தவர்கள்போல் எல்லா திசைகளிலும் ஓடுகிறோம். இப்படி ஓடுவதால் களைத்துப் போகிறோம். எப்போதும் கவலை. ஓய்வே கிடையாது. உன் கற்பனை பலகீனமடைந்து விலகினால் போதும். மனைவியையும் குழந்தைகளையும் விட்டு நீ ஓட வேண்டியதில்லை. கற்பனை காரணமாக அவர்களுக்கும் உனக்குமிடையே பெரிய அளவில் பிரியம் இருப்பதாக நினைக்காமலிருந்தால் போதும்.

அஷ்டாவக்ரர் உன்னைப் பின்வாங்கச் சொல்லவில்லை. நானும் உன்னைப் புறமுதுகு காட்டச் சொல்லவில்லை. நீ இப்போதுள்ள இடத்திலேயே உறுதியாக இரு. வீட்டையோ, உன் கடையையோ விட்டுச்செல்ல வேண்டியதில்லை. ஆனால் எதுவும், யாரும் உனக்குச் சொந்தம் என்றோ, நிரந்தரமான உறவென்றோ நினைத்துவிடாதே. எல்லாம் கடவுளுடையவை. நீயும் அவருக்குச் சொந்தம். எதன்மீதும் தனிப்பட்ட உரிமையோ, அதிகாரமோ உனக்குக் கிடையாது.

இதை உணர்ந்தால் உன் அகங்காரம் கரைந்துவிடும். புதிய வானத்தின் கீழ் நீ சுதந்திரமாகப் பறப்பதுபோல் தோன்றும். இந்த சுதந்திரம்தான் வாழ்க்கையின் உண்மையான அர்த்தமாகும், உண்மையான சுவையாகும்.

**ஹரி ஓம் தத் ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்கள் புரட்சிகரமான ஆன்மிகவாதி என்று அறியப்படுகிறீர். அப்படியும் நீங்கள் பழைய சாஸ்திரங்களுக்கு ஏன் புத்துயிர் கொடுக்க முயல்கிறீர்கள்?**

எல்லா சாஸ்திரங்களுமே புரட்சிகரமானவை. சாஸ்திரம் வேறு; பரம்பரைத் தன்மை வேறு. சாஸ்திரத்தைச் சுற்றிலும் பரம்பரை உருவாகி வளர்வது வேறு விஷயம். சாஸ்திரம் பரம்பரையிலிருந்து சுதந்திரமானது. சாஸ்திரத்தை சூழ்ந்து வளர்ந்துவிட்ட பரம்பரையை உடைக்க முடியும். சாஸ்திரத்தை பரம்பரையிலிருந்து மீண்டும்-மீண்டும் வெளியே கொண்டுவர முடியும். சாஸ்திரம் ஊசிப்போவதில்லை, பழைமைப்படுவதில்லை. அது காலத்துக்குக் கட்டுப்பட்டுத் தோன்றவில்லை. அது காலத்திற்கு அப்பாற்பட்டுத் தோன்றியது.

அஷ்டாவக்ர மகாகீதை என்றும் இளமையுடன் விளங்கு கிறது. எதிர்காலத்திலும் அதன் புதுமை குறையாது.

ஆம், அதன் மீது தூசி படிவதைத் தடுக்க முடியாது. கண்ணாடியில் தூசி படிந்தால் நாம் கண்ணாடியையே எறிந்து விடுவோமா என்ன? படிந்துள்ள தூசியைத் துடைத்து அகற்றுவோம். அந்த வேலையைத்தான் நான் செய்து வருகிறேன். கண்ணாடி சுத்தமாகி அப்படியே நீடிக்கும். வானத்தில் மேகங்கள் பரவி அதை மறைக்கின்றன. அவை விலகியதும் வானம் நிர்மலமாகத் தெரியும். அதுபோலவே காலத்தின் தூசி நீக்கினால் சாஸ்திரம் பளிச்சென வழிகாட்டும்.

சாஸ்திரத்தைக் காப்பாற்றுவது, பரம்பரையை உடைப்பது ஆகியவையே எனது பணியாக உள்ளது. சமயத் தலைவர்கள் பரம்பரையைக் காப்பாற்றும் அளவிற்கு சாஸ்திரங்களைக் காப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை. அவர்கள் தூசியைப் பிடித்துவைத்துக் கொண்டு கண்ணாடியை உடைக்கிறார்கள் சங்கராச்சாரியர்களும் அஷ்டாவக்ர கீதை பற்றி பேசமுடியும்; பேசுகிறார்கள். ஆனால் பரம்பரைக் கண்ணோட்டத்திற்கு ஏற்ப அர்த்தத்தை வளைத்து விடுகின்றனர். நான் அஷ்டாவக்ர கீதை பற்றி பேசுகையில் அதற்குப் பரம்பரைக் கண்ணோட்டத்துடன் தரப்பட்ட உரைகளைப் புறக்கணித்துவிடுகிறேன்.

எந்த சத்குருவும் பரம்பரையை உண்டுபண்ணமாட்டார். ஆனாலும் பரம்பரை உருவாகிவிடுகிறது. அது . காலத்தின் கட்டாயம். ஆகவே பரம்பரை வாதத்தை அவ்வப்போது உடைப்பதும் கட்டாயமானது.

பரம ஞானிகளின் அனுபவ மொழிகளை ஏட்டறிவு மட்டுமே பெற்றுள்ள அறிவிற் குறைந்தவர்கள் உரைகள் மூலம் விளக்க முயலும்போது பரம்பரை உருவாகிறது. எதிரெதிரான கண்ணோட்டமுள்ளவர்கள் விளக்கும்போது புதிய பரம்பரைகள் தோன்றுகின்றன. காலப் போக்கில் பரமஞானியின் உபதேசத் திற்கும் இந்த பரம்பரைகளுக்கும் தொடர்பு நீங்கிவிடுகிறது.

தண்ணீர் சமதளத் தரையில் பெருக்கெடுத்துப் பாய்வது புரட்சி. அதற்கு நாற்புறமும் கரை கட்டி தண்ணீரைத் தேங்கச் செய்வது பரம்பரை. புரட்சியை அருவியென்றால், பரம்பரையைக் குளம் எனலாம்.

சத்குரு என்னும் நிறைமொழி மாந்தர் கூறுவ்து மந்திரம் போலாகிவிடும். அதைக் கேட்பவர்கள் பலவிதமான விளக்கம் தருகிறார்கள். அஷ்டாவக்ரரின் கீதைக்கும் வெவ்வேறு விதமான விளக்கங்கள் பெறப்பட்டுள்ளன. இவைகளை அகற்றிப் பார்த்தால் அஷ்டாவக்ரர் கூறியதன் உண்மைப் பொருள் விளங்கும். இத்தனை நூற்றாண்டுகள் கடந்தும் அது புதுமை குன்றாமல் இருக்கிறது.

பரம்பரைக்கும் உபயோகம் உண்டு. நான் சொல்வது புரட்சிகரமானதாக இருந்தாலும் சிறிது காலத்திற்குப் பின் அதற்கும் ஒரு பரம்பரை ஏற்பட்டுவிடும். அது புரட்சியை மூடியிருக்கும். என்றாவது ஒரு நாள் எவரோ ஒருவர் பரம்பரைப் போர்வைகளை அகற்ற வருவார். பிறகு அடியிலுள்ள புரட்சிக் கருத்து மீண்டும் வெளிப்படும்.

விதையைச் சுற்றிலுமுள்ள ஓடு போன்றது பரம்பரை. அது வலுவாக விதையைப் பாதுகாக்கிறது. ஏனெனில் விதை மென்மையானது. பரம்பரை அதைப் பாதுகாத்துப் பல தலைமுறைகளுக்கு அப்பாலும் நீடிக்கச் செய்கிறது. சில சமயம் தோல் வலுவாக இருக்கும். அப்போது உரிய பருவமாயினும், மேகம் திரண்டாலும், வளமான பூமி இருப்பினும், மேல்தோல் விடாப்பிடியாக விதையை அமுக்கி அது முளைக்காமல் ஆக்கிவிடும். இங்கே வேலியே பயிரை மேய்ந்த கதையாகிவிடும். சில சமயம் பரம்பரை சிறைச்சாலைபோல் சாஸ்திரங்கள் வெளியேறாதபடி செய்யும். அதே சமயம் சாஸ்திரங்கள் பாதுகாக்கப்படுவதையும் மறுக்க முடியாது. பிற்காலத்தவர் விரும்பினால் சிறைச்சாலையைத் தகர்க்க முடியும். ஆகவே பரம்பரை பாதுகாப்பதையும் செய்கிறது; அழிக்கவும் செய்கிறது.

அஷ்டாவக்ரரைப் புரிந்துகொள்ளும் காலம் வந்துவிட்டது. இப்போது புரிந்துகொள்வதற்கான வாய்ப்பு அதிகம். இக்கால மனிதனிடம் ஆற்றல் அதிகம், மேதைமை அதிகம், மனப் பக்குவம் அதிகம். பிரச்சினைகள் அதிகமாக உள்ளதுபோல் தோன்ற காரணம் மனிதனின் அறிவு பன்மடங்காக வளர்ந்து விட்டதுதான். அஷ்டாவக்ரரை பரம்பரை விளக்கத்திலிருந்து விடுதலை செய்து, தற்கால வாழ்க்கையில் அமைதிக்கு அவருடைய கருத்துகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

மழை நீர் பரிசுத்தமானதாயினும் பூமியைத் தொட்டதும் சேறாகிறது. அஷ்டாவக்ரரின் கீதையும் பரம்பரைக் கண்ணோட் டத்தால் அப்படியே தேங்கிவிட்டது. ஆயினும் இக்கால ஆன்மிக அறிஞர் எவராவது மீண்டும் அஷ்டாவக்ர கீதையை அதன் தூயதான, மூல சுலோகப்படியான விளக்கத்தை ஆன்மிக ஆர்வலர்களுக்கு அறிமுகப்படுத்த முடியும்.

நான் புரட்சி செய்கிறவன் எனக் கூறப்படுவது உண்மைதான். ஆனால் நான் முழுமையாக பரம்பரையை எதிர்ப்பவனல்லன். நான் பரம்பரை, புரட்சி ஆகிய இரண்டிலிருந்தும் விடுபட்டவன். இவை இரண்டும் இரவும் பகலும்போல் மாறி-மாறி வருவதைப் பார்க்கும் சாட்சிபோல் விளங்குகிறேன். நான் லெனின், மார்க்ஸ், க்ரோபாட்கின்* போன்ற புரட்சியாளன் அல்லன். அவர்கள் கண்மூடித்தனமாக பரம்பரையை எதிர்த்தார்கள். நம் நாட்டு மனு, யாக்ஞவல்கியர் போல் பரம்பரைவாதி அல்லன். இவர்கள் மாறுதலை (புரட்சியை) எதிர்த்தவர்கள்.

நான் பரம்பரை, புரட்சி இரண்டுமே தேவை என நினைக்கிறவன். புரட்சி அடிக்கடி நிகழட்டும். பரம்பரை அடிக்கடி உருவாகட்டும். அதிக காலம் புரட்சி நீடித்தால் சமூகம் சிதறிவிடும். அதிக காலம் பரம்பரை நீடித்தால் சமூகம் மயானமாகிவிடும். ஒவ்வொன்றும் சரியான நேரத்தில் நிகழட்டும்; சரியான விகிதாச்சாரப்படி நிகழட்டும்.

பரம்பரை முழுமையாக நீங்கிவிடக் கூடாது. நீங்கினால் மக்கள் வேரின்றி, ஆதாரமின்றித் தடுமாறுவார்கள். அவர்களுக்கு திசை தெரியாமல் போய்விடும்; வழி தெரியாமல் போய்விடும்; கடமைகள் புரிவதில் தடுமாற்றம் உண்டாகும். பரம்பரையும் புரட்சியும் ஒன்றையொன்று பூர்த்தி செய்கின்றவை. அவை காலத்தின் தேவைக்கேற்ப மாறி-மாறி வரும்போது வாழ்க்கை சங்கீதம்போல் ஒழுங்குமுறையுடன் அமைகிறது.

இதனால் நான் புரட்சிக் கருத்துகளையும் சொல்கிறேன்; சாஸ்திரங்களுக்கு மீண்டும் உயிரூட்டுமாறும் கூறுகிறேன். அப்போது நமது சிந்தனையும் வாழ்க்கையும் முழுமை பெறுகிறது.

**கர்வச் சிரிப்பு உதிர்க்காதே**
**நீ சகலமும் அறிந்தவனென்பதை**
**யாரும் மறுக்கவில்லை**

---

* Peter Kropotkin (1842-1921): அரச குடும்பப் பின்னணியைத் துறந்து புரட்சிக்காரரானவர். அறிவியலின் பல துறைகளில் வல்லுநர். அரசு இல்லாத சமுதாய நிலையே மேம்பட்டது என்ற கொள்கையைப் பரப்பியவர் (anarchism)

**நம் முன்னோர்களும் முட்டாள்களல்லவே
நாலு விஷயம் அறிந்திருந்தார்கள்தாம்
புனிதம் என்னும் பூ மலர
தனிமை தேவையென அறிந்தார்கள்
அதில்தான் சுகம் என்றார்கள்
தலைவிதியை அவர்கள் நொந்ததில்லை
அதிர்ஷ்டத்தைத் திட்டியதில்லை
அவர்களின் தேவைகள் மிகக் குறைவு
அவர்களின் நேர்மையோ மிக அதிகம்
நிறைவான மனது பெற்றிருந்த
நல்லோர்கள் நம் முன்னோர்கள்**

ஒவ்வொரு நூற்றாண்டு மக்களும் தமக்குத் தெரிந்த அளவு அறிவு முன்பு யாருக்கும் இருந்ததில்லை என்று கர்வமாக நினைத்தார்கள். ஒவ்வொரு தலைமுறை மக்களும் தங்களைவிட அறிவாளிகள் இருந்ததில்லை என்றே கருதி வந்துள்ளனர்.

புரட்சிக்காரர்கள் தமக்கு முன்னாலிருந்தவர்களை மூடர்கள் என்றனர். பரம்பரைவாதிகள் தம்மைப் பின்பற்றாத எதிர்காலத் தவர்கள் மூடர்களாயிருப்பார்கள் என்கின்றனர். இந்த இரண்டு கண்ணோட்டமுமே முட்டாள்தனமானதுதான். பரம்பரைவாதி சொல்கிறார்: 'பின்னால் திரும்பிப் பார். ஞானம் முற்காலத்திலேயே நிறைவடைந்துவிட்டது. சத்ய யுகம் கழிந்தது. பொற்காலம் முடிந்துபோனது. எதிர்காலம் இருண்ட காலம் கலியுகம் வந்துவிட்டது. பாவங்கள் செய்பவர்கள் இனிப் பிறப்பார்கள். ஞானத்தைத் தேடுகிறவர்கள் கிடைக்கமாட்டார்கள்."

புரட்சிக்காரர் இதை மறுக்கிறார்: "பின்னால் அப்படியென்ன இருக்கிறது? முற்காலம்தான் இருண்ட காலம். மக்கள் மூடநம்பிக் கைகளில் மூழ்கிக் கிடந்தார்கள். நாங்கள் செய்யும் புரட்சியால் எதிர்காலம் பொற்காலமாக ஒளிவீசப்போகிறது."

இந்த இரண்டு கருத்துகளும் பாதிப் பாதிதான் உண்மை. பாதி உண்மை என்பது முழுப்பொய்யைவிட மோசமானதல்லவா?

முன்னோர்களிடம் கருணை காட்டு. அவர்களும் சில விஷயங்கள் அறிந்திருந்தார்கள் என்பதை ஒப்புக்கொள். அந்த

விஷயங்கள் அவர்களின் வழியாகத்தானே உன்னை வந்தடைந்தது? விதையிலிருந்து அதற்கேற்ற பழம் விளைகிறது. நீ ஞானப் பழம் என்றால் முன்னோர்கள் முட்டாள் விதைகளா?

மூடநம்பிக்கை என்று தனியாக இல்லை. நீ நம்புவது மட்டுமே உண்மை என்றும் அதைத் தவிர மற்றவை நம்பிக்கைக்கு உரியவை அல்ல என்று நினைக்கிறாய். அதுதான் மூடநம்பிக்கை. நீ சாஸ்திரங்களே கடவுள் வாக்கு என நினைத்தாலும் சரி, அறிவியலுக்கு அப்பால் ஒன்றுமில்லை என நினைத்தாலும் சரி, ஒன்றை நம்புபவர் மற்றதை மூடநம்பிக்கை என்றே கூறுவார்.

பகுத்தறிவாளர்கள் எனப்படுவோர் சாஸ்திர நூல்களில் மூடநம்பிக்கைகளைத் தேடுகிறார்கள். 'கடவுள் கண்ணுக்குத் தெரியவில்லை. அப்படி ஒருவர் இருந்தால் காட்டு பார்ப்போம், ஏற்றுக்கொள்வோம்' என்கிறார்கள். விஞ்ஞானி எலக்ட்ரான் என ஒன்று உண்டென்றும், அது கண்ணுக்குத் தெரியாது என்றும் சொல்வதை யாரும் சந்தேகிப்பதில்லை. எலக்ட்ரானை எப்படி ஒப்புக்கொள்வது என்று டாக்டர் கோவூர் முதலியவர்கள் கேள்வி எழுப்புவதில்லை. எலக்ட்ரானைக் காட்டு என்று அவர்கள் விஞ்ஞானிக்கு சவால் விடுவதில்லை.

எலக்ட்ரானின் வெளிப்படுதலை, அதன் விளைவுகளை நாம் தெரிந்துகொள்ள முடியும் என்பதால் அதை உண்மை என்கிறோம். இதையேதான் கடவுள் விஷயத்தில் சாஸ்திரங்களும் கூறுகின்றன. விளைவிருந்தால் விதையிருக்கும் என்கின்றன. உலகம் என்னும் மாபெரும் ஏற்பாடு, அதை அன்றாடம் நடத்தும் திட்டம் கண்முன்னே தெரியும்போது வேறு என்ன நிரூபணம் வேண்டும்?

சஹாரா பாலைவனத்திற்குப் போகிறாய். ஓரிடத்தில் மணலில் ஒரு கடிகாரம் கிடக்கிறது. எத்திசையிலும் யாரும் கண்ணுக்குத் தென்படவில்லை. காலடி அடையாளங்களும் புலனாகவில்லை. அப்படியும் எவரோ இங்கே கட்டாயம் வந்திருக்க வேண்டும் என்றுதான் சொல்லுவாய். இல்லாவிடில் அந்தக் கடிகாரம் இங்கே எப்படி வந்தது? அது தானாக

உண்டானதாகச் சொல்ல மாட்டோம். கடிகாரத்திற்கு உரிமையாளர் ஒருவர் இருந்திருக்க வேண்டும். அவருக்கு எப்படிக் கிடைத்தது? கடிகாரத்தைச் செய்தவர் என்று ஒருவர் இருந்திருப்பார்.

அதேபோல் இந்த பிரம்மாண்டமான உலகமும் எந்த சக்தியாலோ உருவாகியிருக்க வேண்டும். அந்த சக்தி நம் கண்ணுக்குத் தெரியவில்லை என்பது வேறு விஷயம். அணுகுண்டின் சக்தியைக் கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் அதன் விளைவை ஹிரோஷிமாவில் பார்த்தோம்.* ஒரு லட்சம் பேர் கொல்லப்பட்டனர்.

எலக்ட்ரான் கண்ணுக்குத் தெரிவதில்லை. அது சக்தியின் திரட்சி மாத்திரமே. அதை நம்புவதைப் புதிய மூடநம்பிக்கை என்று அறிவுள்ளவர்கள் கூறமாட்டார்கள். முற்காலத்தவர்கள் அளப்பரிய சக்தியைக் கடவுள் என்றார்கள். இக்காலத்தவர்கள் அளப்பரிய சக்தியை எலக்ட்ரான் என்கிறார்கள். இந்த இரண்டிற்குமிடையே என்ன வித்தியாசம்? பெயர் தான் மாற்றம்.

எல்லா சாஸ்திரங்களும் தனிமையின் மகிமையைப் பாடுகின்றன. நீயோ கூட்டத்தின் நடுவே வசிப்பவன். கூட்டத் தினர்ரப் போலவே வாழ்கிறாய். உனக்குள்ளே இருக்கும் தனி மனிதனும் காணாமல் போனான். தனிமனிதன்தான் தியானத்தில் மலருவான். தியானம் என்பது தனிமையில் செய்யும் முயற்சி. உறவுகள், தொடர்புகளிலிருந்து மனத்தளவில் விலகுவதே சந்நியாசம்.

குடும்பத்தில் வசித்தாலும் உறவுகளின் பாதிப்பு இல்லா விடில் அது சந்நியாசம்தான். நான் தந்தை-கணவன். மகன்-மனைவி என்றெல்லாம் சொல்கிறோம். அவ்வாறு சொல்கிறானே அவன் யார்? அந்த 'நான் யார்?' என்பதே நமக்குத் தெரியாதே. உள்ளே எட்டிப் பார். அங்கு உட்கார்ந்திருப்பவனைப் பார். அவனை அடையாளம் கண்டுகொண்டால் மற்ற உறவுகள் விலகிவிடுவதைக் காண்பாய். இதுவே சந்நியாசம்.

---

* இந்த ஜப்பானிய நகரத்தின் மீதுதான் இரண்டாம் உலகப் போர் சமயம் முதல் அணுகுண்டு 6.8.1945 அன்று வீசப்பட்டது.

முகம்மதிய துறவி ஒருவரைப் பற்றிய கதை ஒன்றில் ஒரு விருந்தாளி அவரது குடிலில் தங்குகிறான். காலையில் இருவரும் நமாஸ் தொழுகை செய்தனர். ஆனால் விருந்தாளி வேறு திசை நோக்கித் தொழுகை செய்தான். புனித மெக்கா நகர் திசையை நோக்கி அவன் உட்காரவில்லை. அவன் கண்களைத் திறந்து பார்த்தபோது துறவி வேறு திசை நோக்கி நமாஸ் செய்வதைப் பார்த்தான். தான் தவறு செய்துவிட்டோமே என்று பயந்துபோனான். துறவி நமாஸ் தொடங்கும் முன்பே இவன் நமாஸ் தொடங்கி விட்டதால் எது சரியான திசை என்பதைக் கவனிக்கவில்லை.

விருந்தாளி துறவியிடம், "தாங்கள் எனக்குப் பிறகுதான் நமாஸ் ஆரம்பித்தீர்கள். நான் தவறான திசை நோக்கி உட்கார்ந்திருந்ததையும் நோக்கியிருப்பீர்கள். ஆனால் என்னிடம் எதுவும் ஏன் சொல்லவில்லை. நான் தவறு செய்ததை ஏன் அனுமதித்தீர்கள்?" என்று காரணம் கேட்டான்.

துறவி சொன்னார்: "நான் குற்றம் கண்டுபிடிக்கும் பழக்கத்தை நிறுத்திவிட்டேன். எது நடக்கிறதோ அதுவே சரியென்று நினைக்கிறேன். நான் என்னிடம் குற்றம் காண்பதில்லையென்று முடிவெடுத்தபின் உன் தவற்றை நான் ஏன் கவனிக்க வேண்டும்? எதிலும் குற்றம்-குறை காண்பதைக் கைவிட்ட பிறகு நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். தலைவிதி, அதிர்ஷ்டம் குறித்துக்கூட எனக்கு எந்தப் புகாருமில்லை."

பக்குவம் பெற்றவன் வாழ்க்கையில் எந்தக் குறைபாடும் இருப்பதாக அறிந்திலன். எதுவும் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி உள்ளது. எப்படி நடந்ததோ அப்படித்தான் நடந்திருக்க வேண்டும். எப்படி நடைபெற வேண்டுமோ அப்படித்தான் நடக்கப்போகிறது. இப்படி எதையும் சுவீகரிக்கும் மனப்பான்மை வந்துவிட்டால் பிறகு எப்போதும் சுகம்தான். எல்லாத் தொல்லை களும் போய்விடும். பூக்கள் மட்டுமே இருக்கும். முள் இருக்காது.

சராசரி மக்கள் நிறையத் தேவைகளை வைத்திருக்கிறார்கள். ஆனால் அவர்களிடம் நேர்மை குறைவாக உள்ளது. நேர்மையைக் கைவிட்டுத் தேவைகளை பூர்த்தி செய்துகொள்ள மக்கள் தயங்குவதில்லை. இதைக் கெட்டிக்காரத்தனமான

செயலென்றும் அவர்கள் நினைக்கிறார்கள். நேர்மையை விற்பது ஆத்மாவை விற்பதற்கு சமம். வாழ்க்கையின் மூலச் சுவரை இடிப்பதற்கு சமம். உலகிலிருந்து வெளியேறும் சமயம் உன் கைகள் நிறைந்திருந்து உயிர் சூனியமாக இருந்தால் பலனில்லை. கைகள் காலியாக இருந்து உயிர் நிறைவுடன் இருந்தால் நீ வாழ்க்கையில் வெற்றி வீரனாவாய்.

**அவர்களின் தேவைகள் குறைவு**
**நேர்மையோ அவர்களிடம் நிறைய**
**தமது நிலையில் திருப்திகொண்டார்கள்**
**வாழ்க்கையுடன் ஒட்டிக்கொள்ளல்**
**சாவிடம் வெறுப்புக் கொள்ளல்**
**இரண்டும் முன்னோர் அறிந்ததில்லை**
**அஸ்தமன சமயம் அழுததில்லை**
**உதய காலத்தில் மகிழ்ந்ததில்லை**
**வாழ்க்கையின்மீது பிடிப்பில்லை**
**உலகம் குறித்து பிரமை இல்லை**
**வந்ததற்காக மகிழ்ந்ததில்லை**
**செல்ல வேண்டும் என வருத்தம் இல்லை**

அவர்கள் வந்தார்கள். ஏனெனில் கடவுள் அனுப்பினார். புறப்பட்டார்கள். ஏனெனில் கடவுள் அழைத்துவிட்டார். வாழ்க்கையுடன் ஒட்டிக்கொள்பவன்தான் சாவு என்றால் பயப்படுவான். நான் எதனிடம் பயப்படுகிறோமே அதை வெறுக்கவும் செய்வோம்.

நீதான் சகலகலாவல்லவன் என்று அவசரப்பட்டு கர்வம் கொள்ளாதே முற்காலத்தில் தோன்றிய லாவோத்ஸு, அஷ்டாவக்ரர், ஜரதுஸ்திரர், புத்தர், கிருஷ்ணன் முதலியவர்களும் பல விஷயங்களை அறிந்திருந்தனர்.

**விதை முதலில் செடியாகிறது, பின்னர்**
**மரம் ஒருநாள் வீழ்ந்து பூமியில் உறங்கிடும்**
**மனிதன் என்றும் இறப்பதில்லை**
**தனது சொந்த வீட்டிற்குத் திரும்புகிறான்**
**அவன் என்றும் இல்லாமல் போவதில்லை**

அவர்களுக்கு அடிப்படையான சில விஷயங்கள் தெரிந்திருந்தன. நான் விளக்கும் சாஸ்திரங்களில் அவை மறைந்து

நிற்கின்றன. அவை உனக்கு மறுபடியும் கிடைக்க வேண்டுமென் பதற்காக நான் சாஸ்திரங்கள் பற்றி சொற்பொழிவு செய்கிறேன்.

என்னைப் புரட்சிக்காரன் என்றோ, பரம்பரைவாதி என்றோ வகைப்படுத்தாதே. என்னிடம் இந்த இரண்டு தன்மைகளும் உள்ளன. நீயும் ஒன்றை மட்டும் தேர்ந்தெடுப்பவனாக இராதே. இதையே உன்னிடம் நான் எதிர்பார்க்கிறேன். நீ எப்பக்கமும் சாயாமல் சமதளத்தில் இரு.

## இரண்டாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! அஷ்டாவக்ரர் இயற்கையான, சகஜமான சமாதி முறையை நம் முன் வைக்கிறார். அவர் எவ்விதமான சடங்குகளையும், சாதனங்களையும், முயற்சிகளையும் எடுத்துக் கூறவில்லை. அவரது பார்வையில் பிரார்த்தனை செய்வதும் வீண்தானா?**

பிரார்த்தனை வீணா, பயனுள்ளதா என்பது கண்ணோட்டத்தைப் பொறுத்தது. 'செய்தல்' என்னும் சொல்லைச் சேர்த்தால் அதைச் செய்கின்ற கர்த்தா மனப்பான்மையும் சேர்ந்துவரும். அந்த பிரார்த்தனை அஷ்டாவக்ரர் மார்க்கத்தில் ஏற்புடையதன்று. 'நிகழ்தல்' என்னும் சொல்லைச் சேர்த்தால் சுயமாக நிகழும் அந்த பிரார்த்தனை வரவேற்கத்தக்கது. முன்னேற்பாடுகளுடன் செய்யும் பிரார்த்தனை பயன் தராது. தற்செயலாக ஆகாயத்தில் சூரியனைப் பார்த்து உன் கைகள் தாமாக உயர்ந்து குவிந்தால் அது நிஜமான பிரார்த்தனை. அப்போது நீ எந்த வரமும் கேட்பதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

ஆனால் நீ இந்து என்பதற்காக சூரிய நமஸ்காரம் செய்தால் அதற்கு மதிப்புக் கிடையாது. தினமும் சூரியன் உதித்தால்தான் உலகம் இயங்கும் என்னும் நன்றி உணர்வுடன் வணங்கலாம். இது எல்லா மதத்தினருக்கும் பொதுவானது.

சூரிய உதயம் சௌந்தர்யமான அபூர்வக் காட்சியாகும். பிறகு எல்லா திசைகளிலும் பிரகாசம் பரவுகிறது. பூக்கள் மலர்கின்றன; பறவைகள் பாடுகின்றன; உயிரினங்கள் அன்றைய வாழ்க்கையை ஆரம்பிக்கின்றன. இரவின் இருட்டில் மறைந்துபோன எல்லாம் மீண்டும் கண்ணுக்குத் தெரிகின்றன. ஆகவே கைகள் தாமே சூரியனை நோக்கிக் குவித்தால் அது அர்த்தமுள்ள பிரார்த்தனை.

விளக்குப் போட்டதும் இந்துக்களில் பலர் கைகூப்பு கிறார்கள். ஆனால் மின் ஒளிக்கு சூரிய ஒளி அளவிற்குச் சிறப்பில்லை. மின்சார ஒளியை வணங்குவது சுயநினைவின்றி இயந்திரத்தனமாக ஏற்படுவதால் அது பிரார்த்தனையே அன்று.

**எ**ன் நண்பர் ஒருவருக்கு இந்தப் பழக்கம் இருந்தது. ஒருநாள் அவர் என்னுடன் பேசிக்கொண்டிருந்தபோது இருட்டத் தொடங்கிவிட்டது. நான் மின்சார ஸ்விச்சை அழுத்தியதும் பல்பு எரிந்தது. அவர் கைகூப்பினார். நான் உடனே விளக்கை அணைத்து விட்டேன்! அவர், "இதென்ன, அபசகுணம்போல் விளக்கைப் போட்டதும் அணைக்கிறீர்?" என்று பதறினார். நான் உடனே ஸ்விச் போட்டேன். அவர் கைகள் தாமாகக் குவிந்தன.

நான் என் செய்கையை விளக்கினேன். "உங்களுடைய கைகள் உணர்வுபூர்வமாகக் குவியவில்லை. அவை இயந்திரத்தின் உயிரற்ற பாகங்கள் போன்றவை. நீங்கள் மனிதரில்லை. இயந்திரம். நீங்கள் மற்ற எத்தனையோ அழகான சந்தர்ப்பங்களில் கை குவிப்பதில்லை என்பதை நான் கவனித்திருக்கிறேன். எதிரேயுள்ள பூங்காவில் ரோஜாப் பூக்கள் மலர்ந்துள்ளன. அவற்றைப் பார்த்து நீங்கள் கைகூப்பவில்லையே. குயில் பாடுவதைக் கேட்டு உன் கைகள் கும்பிடுவதில்லை.

ஒளி எண்ணற்ற விதங்களில் வெளிப்படுகிறது. மொத்த உலகமும் ஒளியின் விளையாட்டுதான். பச்சை இலைகளில் ஒளிக்கிரணங்களின் பச்சை அம்சம் சென்று கலக்கிறது. அதை நீ வணங்கியதுண்டா? ரோஜாப் பூவின் கிரணங்களின் சிவப்பு அம்சம் கலந்துள்ளது. நீ பூக்களை வணங்கியதுண்டா? இவற்றையெல்லாம் வணங்கும்போது உன் முகத்தில் தெரியும்

பிரமிப்பு, பளபளப்பு, உல்லாசம் முதலியவை மின்விளக்கைப் போட்டதும் உன் முகத்தில் தெரிகின்றனவா? அந்த சமயம் உன் கைகள் குவிவதைக்கூட நீ கவனிப்பதில்லையே.

இதேபோல் நீ கோயிலைக் கடக்கும் சமயம் கன்னத்தில் லேசாகத் தட்டிக்கொள்கிறாய் கால் செருப்பைக் கழட்டாமலே. வண்டியில் அமர்ந்தபடியே பெயரளவிற்கு வணக்கம் தெரிவிக்கிறோம்.

சிலர் எல்லோரையும் எல்லாவற்றையும் பிடிக்கும் என்பார்கள். ஐஸ்க்ரீமும் பிடிக்கும், ஆத்மாவும் பிடிக்கும் என்பார்கள். இதனால் நேசம் அல்லது அன்பு என்னும் சொல் கெட்டுப்போகிறது. இங்கும் ஏதோ இயந்திரம்போல் வாய் உணர்ச்சியின்றி அன்பு என்று கூறுகிறது.

நாம் ஒரு செயலை ஆர்வத்துடன் ஆரம்பித்து பிறகு இயந்திரம்போல் செயல்பட்டால், உணர்ச்சிகரமான சொல் தேய்ந்த ஒலிநாடாபோல் ஒலித்தால், அத்தகைய ஒவ்வொரு முறையும் உன்னை பலமாகக் கிள்ளிக்கொள்! சூடு பிறக்கும்.

வலிந்து செயல்படுவது வீண். சுயமாக நிகழ்வதை யாரும் தடுக்க முடியாது. செயலாக இருந்தால்தானே தடுக்கலாம். அஷ்டாவக்ரர் உன்னைத் தடுக்க முடியும். ஏனெனில் நீ முயற்சி எடுத்துச் செயல்படுகிறாய். அவர் மீராபாயைத் தடுத்திருக்க முடியாது. மீராபாய் திட்டமிட்டு பக்தி நடனம் ஆடவில்லை. இயற்கையாக, சுபாவமாக அவள் பாடியபடியே சுழன்றாள்.

தியானத்துக்கும் இது பொருந்தும். ‘இதோ நான் சிறிது நேரம் தியானம் செய்யப் போகிறேன்’ என்று அறிவித்துக் கண்களை மூடிக்கொள்வது நகைப்பிற்குரியது. தியானம் தானாக நிகழ வேண்டும். அப்போது நீ முன்கூட்டியே=எத்தனை மணி நேரம் தியானம் நடக்கும் என்று கூறமுடியாது. நீ ஆரம்பித்தால் நீ முடிக்கலாம். தானாக இறங்கிவருவதை நீ நடுவில் நிறுத்தவும் முடியாது. உதாரணமாக, சுவாசித்தல் இயல்பாக நிகழ்வது. நீயாக மூச்சை விடமுடியாது. அதை நிறுத்த முடியாது. நிறுத்த முயன்றால் ஆபத்து விளையும். அதேபோல் மரண சமயம் மூச்சு நிற்பதை நீ தடுக்கவும் முடியாது.

ஆகவே 'செய்யும்' பிரார்த்தனை ஒருவகை; 'நிகழும்' பிரார்த்தனை இன்னொரு வகை. சுயமாக வெளிப்படும் பிரார்த்தனையே உண்மையானது, சௌபாக்கியமானது. சுயமாகத் தோன்றும் பிரார்த்தனை எங்கும் நிகழலாம். கோயில், பள்ளிவாசல், குருத்துவாரா போன்ற இடங்கள்தாம் பிரார்த்தனைக்குப் பொருத்தமானவை என்று அர்த்தமில்லை. கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார். எந்த இடத்திலும் ஒருவனுக்கு இறையுணர்வு ஏற்படலாம்.

செடியில் அழகான பூக்கள் மலர்ந்திருப்பதைப் பார்த்து நீ தரையைத் தொட்டு வணங்கினால் பிரார்த்தனை செய்த மாதிரிதான். நீயோ எதையும் பார்க்காமல் கண்களை மூடி மந்திரங்களை முணுமுணுத்தால் நீ செத்த வார்த்தைகளுடன் விளையாடுகிறாய் என்றுதான் கூறலாம். முழு உணர்ச்சியுடன் பூவை வளைந்து வணங்கு. உனக்கு பிரார்த்தனையின் ருசி தெரியவரும்.

பிரார்த்தனை அடிப்படையில் கெட்டதன்று. அது உன் தலையீட்டால்தான் கெடுகிறது. எந்த பிரார்த்தனையில் நீயும் உள்ளாயோ அது முழுமையானதன்று. எந்தப் பிரார்த்தனையில் நீ கலந்து கரைந்துவிடுகிறாயோ அதுவே உண்மையானது.

மேலும் நீ பிச்சைக்காரன்போல் பிரார்த்தனையில் யாசிக்கிறாய். 'இது வேண்டும்-அது வேண்டும்' என்று கடவுளைத் துளைத்தெடுக்கிறாய். பிரார்த்தனை என்பது அர்ப்பணிப்பு அல்லது சமர்ப்பணமாதல். நீ உன்னையே அர்ப்பணிக்கிறாய். அதற்கு ஈடாக எந்த வரமும் கேட்பதில்லை. யாசிக்கும் பிரார்த்தனை அஷ்டாவக்ரரின் பிரார்த்தனை வகையில் சேராது.

**நாற்புறமும் அடர் இருட்டு**
**திரண்டு வரும் கருமேகங்கள்**
**பலமாய் வீசுது எதிர்க் காற்று**
**மலைகள் நடுங்குவதாய்த் தெரிகிறது**
**கடல் கர்ஜிக்கிறது விட்டு-விட்டு**
**என்னை யார் அக்கரை சேர்ப்பார்!**
**மலை உயரம் எழும்பும் பேரலைகள்**

அவற்றின் சிகரமாய்ப் பொங்கும் நுரை
படகை பரிகாசம் செய்கிறது
கையிலிருந்த துடுப்பு நழுவ
படகை விழுங்கச் சுறாக்கள் வர
எல்லையற்ற கருங்கடல் கண்டு
தைரிய உணர்வு விடைபெறுகிறது

நாம் அநாதைகள்போல் ஆதரவற்றவர்கள் என்பது உண்மையே. இந்நிலையைச் சமாளிக்க நாம் பிரார்த்திப்பது ஒருவகை. இன்னொரு வகைப்படி, நாம் எதிர்ப்பான சூழ்நிலையை நன்கு உணர்கிறோம். ஆனால் உதவி எதுவும் கேட்கவில்லை. அந்த ஆதரவற்ற சூழ்நிலையை மட்டும் வர்ணிக்கிறோம். மேற்கொண்டு எதுவும் கேட்பதில்லை. நாம் உள்ள நிலையைத் தெரிவிக்க மட்டும் செய்கிறோம்.

இந்த மனநிலை நீடித்தால் ஒரு கட்டத்தில் நீ திடீரென்று அக்கரைக்குப் போய்ச்சேர்ந்துவிட்டதை உணர்வாய். தற்சமயம் உன் பிரார்த்தனை உன் கோரிக்கைப் பட்டியலின் வாசிப்பாக இருக்கிறது. புதிய-புதிய ஆசைகள் அப்பட்டியலில் சேர்ந்த வண்ணமாக உள்ளன. உலகம், சுவர்க்கம், மோட்சம் இப்படி எதையாவது பெற வேண்டுமெனக் கிளம்பினாய். உன்னை மேன்மேலும் நிரப்பிக்கொண்டே செல்வதில் ஈடுபடுகிறாய். நீ வெற்றிடமாக, சூனியமாக ஆனால்தான் உனக்குள்ளிருந்து வாஸ்தவமான பிரார்த்தனை வெளிப்படும்.

**மூன்றாம் கேள்வி**

**ஓஷோ அவர்களே! சத்குருவின் நிழலின் கீழ் இருப்பது என்பதன் அர்த்தம் என்ன?**

அர்த்தத்தை விளக்க முடியாது. அனுபவத்தால் உணர வேண்டிய நிலை அது. எப்படி நீ அதை விளக்குவாய்? ஒரு பயணி. களைப்பு, வெயில், தூசிக் காற்று, நீண்ட தொலைவு ஆகியவை காரணமாக மரத்தடி நிழல் தேடுகிறான். அவன் தேடுவதை நிறுத்திவிட்டு மரத்தடி நிழல் என்றால் என்ன என்று உன்னைக் கேட்பதாக வைத்துக் கொள்வோம்.

அவனுக்கு அதை நீ எப்படி விளக்குவாய்? உன்னிடம் என்ன உபாயம் உள்ளது? "அதோ மரம். அதன் கீழ் நிழல். போய் உட்கார். ஓய்வு என்பதன் நேரடி அனுபவம் பெறுவாய். வேறு வழி கிடையாது," என்று தானே நீ அவனிடம் சொல்லுவாய்"

சத்குருவுடன் இருத்தல் என்பதன் பொருள் நீ உன் அகங் காரத்தை நம்புவதைக் கைவிட்டாய் என்பதுதான். அகங்காரத்தின் துணையுடன் வாழ்க்கையில் சற்று முன்னேறி னாலும் எங்கும் போய்ச் சேரவில்லை என்பதுதான். அகங்காரத்தால் உனக்கு வேதனைதான் உண்டானது. அகங்காரம் உன்னை அலைக் கழித்தது; சிக்கலில் மாட்டியது; பிரமையில் ஆழ்த்தியது. ஆகவே மேற்கொண்டு அகங்காரத்தின் பேச்சைக் கேட்காமல் சத்குருவின் உபதேசத்தில் நம்பிக்கை வைக்கிறாய். அவரது குரலாக நீ கேட்பது உண்மையில் உனது ஆழ்மனத்தின் குரல்தான்.

அதை உன்னால் சுயமாக உள்ளே தேடிக்கொள்ள முடியாததால் வெளியேயிருந்து சத்குரு அக்குரலில் பேசுகிறார். ஒரு கட்டத்தில் நீ உள்ளேயும் தேடுவதில் திறமை பெற்று விடுவாய். அப்போது மரம் உனக்கு வெளியில் இல்லை என்றும், உனக்குள்ளேயேதான் பரவியுள்ளது என்றும், நிழல் உள்ளேயிருந்துதான் வருகிறது என்றும் தெளிவாகிவிடும். சத்குரு அதை அடையாளம் மட்டுமே காட்டினார் என்பது புரியும். அவரது அன்பு மிகவும் விசேஷமானது. அதை விளக்க முடியாது.

அன்பு மூன்று வகை: உடல் சார்ந்த அன்பு, மனம் சார்ந்த அன்பு, ஆத்ம அன்பு, மூன்றிலும் உடல் சார்ந்த அன்பு தான் தாழ்ந்தது. இது தற்காலிகமானது. மாறுதலுக்கு உட்பட்டது. இது வந்த வேகத்தில் போய்விடுகிறது. இதை காமம் என்கிறோம்.

மனம் சார்ந்த அன்பு இரண்டு பேர்களின் மனங்களின் இணைப்பு ஆகும். இதில் ஆண்-பெண் பேதம்கூட இல்லை. இது உடலளவிலான அன்பைவிடச் சிறந்தது. இது சற்று ஆழமானதும் கூட, இது அதிகக் காலம் நீடிக்கிறது. உடல் சாரா இவ்வன்பு சற்று கூடுதலான காவியத் தன்மை கொண்டுள்ளது.*

* the marriage of true minds என்று இதை ஷேக்ஸ்பியர் கூறுவார். இதை Platonic love என்றும் கூறுவதுண்டு.

ஆத்மாவின் அடிப்படையிலான அன்பு அனைத்திலும் தலைசிறந்தது. பிறகு வானம் முழுதும், பூமி முழுதும் உன் வசம்தான்.

முதலாவது காமம்; இரண்டாவது அன்பு; மூன்றாவது பிரார்த்தனை.

சத்குருவின் அருகில் இருப்பது பிரார்த்தனை உணர்வுடன் இருத்தலாகும்.

நான் அணிவது போன்றே உனக்கும் காவி உடை தருகிறேன். இது ஓர் அடையாளம் அல்லது சின்னம் மட்டுமே ஆகும். இது நமக்குள் மேலோட்டமான ஒற்றுமை. இது ஆரம்பக் கட்டம்தான். 'அ' என்றால் அம்மா என்பதுபோல்தான் இதுவும். உடையில் என்னுடன் சமமாக இருக்க ஆரம்பித்து, படிப்படியாகப் பக்குவம் பெற்று ஆத்ம அளவில் நாம் இருவரும் ஒருவரே என்னும் நிலையை நீ அடைய வேண்டும்.

சந்நியாசம் என்பதை நேரடியாக உள்ளேயே உணர முடிந்துவிட்டால் நீ ஏற்கெனவே சந்நியாசிதான் என்பது இதன் பொருள். பிறகு நீ வெளிப்பயிற்சிகள் மேற்கொள்ள வேண்டி யிராது. பிறவித் துறவி என்னும் இந்நிலை அரிதினும் அரிதாக எவரோ ஒருவருக்கு பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை வாய்க்கும். மற்றவர்கள் காவி உடை தரித்தல் முதலிய புறச் சின்னங்களோடு ஆத்மிக வாழ்க்கையைத் தொடங்கி உள்ளுலகத்தில் பிரவேசிக்க வேண்டும். வீட்டிற்குள்ளே இருப்பவன் பிரவேசிக்க வேண்டியதில்லை. வீட்டுக்கு வெளியே நிற்பவன் படியேறித் தான், படிப்படியாகத்தான், உள்ளே நுழைய முடியும்.

முதன் முதலாகக் காவி உடை தரிக்கும் சமயம் சிறு நடுக்கம், பூ நடுக்கம் உண்டாகத்தான் செய்யும். ஏனெனில் குடும்பம், உறவினர், நண்பர்கள், சொந்த ஊர் எல்லாவற்றையும் திடீரென் விட நேரிடுகிறதே என்ற தயக்கம் இருக்கும். காவி உடையில் ஊருக்குப் போனால் சிலர் உன்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். சிரித்துவிட்டுப் போகட்டும். நீதான் அந்த வெளியுலகத்தில்

இல்லையே. சிறிது சிறிதாக உள்ளுலகில் நுழைந்து கொண்டிருக் கிறாயே

இந்தக் காவி ஆடை நீ வெளியுலக வண்ணக் கவர்ச்சி களைக் கைவிடத் தயாராகிவிட்டாய் என்பதன் அடையாளச் சின்னம். சத்குருவின் நிழலில் நீ இருத்தல் என்பது அவரது ஆன்மிக நிறத்தை நீயும் அடைவதில் உனக்கு சம்மதம் என்று அர்த்தம். சத்குருவை இதனால் சாயமேற்றும் கலைஞர் என்று கூறலாம்! ஆனால் உன் ஒத்துழைப்பு தேவை.

மரம் அடர்த்தியான, பரவலான நிழலைத் தருகிறது. ஆனால் நீ சென்று அங்கு உட்காராவிடில் மரம் ஒன்றும் செய்ய முடியாது. உனது ஓய்வுக்காக மரம் உன்னைத் தேடி உன் பின்னால் ஓடிவராது. நீதான் மிகுந்த வேட்கையுடன் மரத்தை நாடிச் செல்ல வேண்டும்.

சத்குரு உன் வாழ்க்கையில் புரட்சியைக் கொண்டுவர முடியும். இதனால் உன் வாழ்க்கை அடியோடு மாறிவிடும். அந்தப் புரட்சியை நிகழவிட நீ உன் வாழ்க்கையைவிட சத்குருவுடனான நெருக்கத்தை மிகுந்த மதிப்புடையதாகக் கருத வேண்டும். அப்போதுதான் குருவின் சாயம் உனக்குள் ஏறும்.

**சத்குருவே! உமது முன்னிலையில்**
**மூச்சு நின்று இறப்பினும் நன்று**
**சத்குரு இன்றி வாழ்க்கை ஆகும் பாலைவனம்**
**சத்குரு இருப்பின் வாழ்க்கை கலகலப்பான ஊராகும்**
**உம்மை ஒரு முறை தரிசித்தாலே**
**உலகனைத்தையும் பார்த்ததுபோல்தான்**

அவரது ஒரு பார்வை உனக்கு முழுதிருப்தி தந்தால், சத்குருவின் நிழலில் இருத்தல் என்பதன் அர்த்தம் உனக்குப் புரிந்துபோகும். அவரது உபதேசம் உனக்கு ஏறாமல் போகலாம். ஆனாலும் அவருடன் அன்புப் பிணைப்பு இருந்தால் போதும். அந்த தெய்விக மனிதர் உன்னுடன் பேசினார் என்பதே பெரிய விஷயம்தான். அவரது உபதேசத்தைப் புரிந்துகொள்ள அவசரப்பட வேண்டியதில்லை. உன்னைப் பொருட்படுத்தி உன் நன்மைக்காக அவர் உன்னுடன் பேசினார் என்பதே சாதாரண விஷயமா?

இப்படி மனோபாவம் உனக்கு ஏற்பட்டால், சத்குருவின் நிழலில் இருத்தல் என்பதன் பொருளைப் புரிந்துகொள்வாய். இது அனுபவத்தால்தான் சாத்தியப்படும். வேறு வழியில்லை.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! நீங்களே எனது இன்பமும் துன்பமும். நீங்கள் ஆக்கவும் வல்லவர், அழிக்கவும் வல்லவர். இதுவும் உமது செய்கை. அதுவும் உமது செய்கை. நான் தங்களை நினைத்துக் கண்ணீர் விடுதலும் வழிபாடுதானே?**

உண்மையான வழிபாட்டில் கண்ணீரும் கலந்திருக்கும். உலர்ந்த பிரார்த்தனை முழுமையானதன்று. அது பாலை வனத்திற்கு சமம். கண்ணீரில்லாமல் குனிந்து வணங்குவது அரைகுறை வழிபாடு. உடல் மட்டுமல்லாமல் இதயபூர்வமாகவும் பணிந்து வணங்க வேண்டும். உடல் மட்டும் வளைவது உடற்பயிற்சியில் சேரும்; ஆன்மிகத்தில் சேராது. இதயமும் நெகிழ்ந்தால் கண்ணீர் பெருகும்.

துன்பத்தின் வெளிப்பாடுதான் கண்ணீர் என்றில்லை. சுகத்தின் உச்சக்கட்டத்திலும் கண்ணீர் வெளியாகும். உன்னால் சமாளிக்க முடியாத அளவு உணர்ச்சிக் கொந்தளிப்பு ஏற்படும் போதெல்லாம் அந்த மிகை அம்சம் கண்ணீராக வழியும்.

கடவுளை வணங்கினாலும், சத்குருவை வணங்கினாலும், இயற்கையின் சௌந்தரியத்தை வணங்கினாலும் உள்ளம் நெகிழ்ந்து, கண்களில் நீர் தளும்பாவிடில் அந்த வணக்கம் உலர்ந்த, வறண்ட வகையானதாகிவிடும்.

கண்ணீர் உனது வழிபாடு உண்மையானது என்பதை நிரூபிக்கும் சான்றாகும். அது நீ பெயரளவுக்காக வணங்கவில்லை என்றும் உண்மையாகவே வணங்கினாய் என்பதைக் காட்டும் ஆதாரமாகும்.

கண்ணீர் விடுதலை நான் வழிபாடு என்கிறேன். நீ சூரியன் உதிப்பதைப் பார்த்து, ஆகாயத்தில் சந்திரன் நீந்துவதை ரசித்து,

வெள்ளை முயல்கள்போல் மேகங்கள் ஒன்றையொன்று துரத்து வதையும் கவனித்து, உன் கண்களில் ஆனந்த நீர் நிறைந்தால் அது உண்மையான வழிபாடாகும். குழந்தை சிரிப்பதைக் கண்டு, பறவைகள் பாடுவது கேட்டுக் கண்கள் ஈரமானால், அங்கே வழிபாடு நடந்துவிட்டதென்று பொருள். உணர்ச்சிப் பெருக்கே வழிபாடு. பிறகு உன்னால் மனம் நெகிழாமல் பிரார்த்திக்க முடியாது. இந்த வகை வழிபாட்டை நீ மறக்க முயன்றாலும் முடியாது. அது உன் சுபாவத்தின் அங்கமாகிவிட்டது. பழைய வறண்ட வழிபாட்டிற்குத் திரும்ப முடியாது.

ஆரம்பக் கட்டத்தில் கடவுளை எப்படி நினைவில் வைத்திருப்பது என்று கேட்பாய். பிறிதொரு கட்டத்தில் கடவுளை மறக்கவே முடியவில்லையே என வியப்பாய். அந்த நேரம் வந்தால் உன் வழிபாடு முழுமை பெற்றுவிட்டதென்று பொருள். சிறிது நேரம் கடவுள் நினைவு வராவிடிலும் அது பெரிய சுமையாக உனக்குத் தோன்றும்; துன்பமாகத் தோன்றும்.

பக்தனுக்கு எல்லா நேரமும் கடவுள் நினைவு இருக்கும். எல்லா திசைகளிலிருந்தும் கடவுள் நினைவு வரும். மலர்களில், பறவைகளின் பாட்டில், வானவில்லின் நிறங்களில், சூரிய கிரணங்களின் வலைப் பின்னலில் என்றெல்லாம் எங்கும் கடவுளின் நினைவு வரும்.*

பிறகு ஒவ்வொரு பொருளும் அவரையே சுட்டிக் காட்டுகிறது. ஒவ்வொரு பாதையும் அவரிடமே இட்டுச் செல்கிறது. பாதையிலுள்ள ஒவ்வொரு மைல் கல்லும் அவரை நெருங்கி விட்டதை உணர்த்துகிறது. இன்பம்-துன்பம், நன்மை-தீமை, சுபம்-அசுபம், வெற்றி-தோல்வி எல்லாவற்றையும் பின்னுக்குத் தள்ளி மனிதன் கடவுளை நோக்கி முன்னேறுகிறான். இன்பம்-துன்பம் இரண்டிலும் அவன் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறான். இரண்டுமே அவர் தருபவை என்பான்.

ஞானி பாயஜீத் தமது பிரார்த்தனையில், "கடவுளே! எனக்குக் கொஞ்சமாவது துக்கத்தை ஒதுக்கிவையுங்கள். அப்போதுதான்

---

* பாரதியாரின் 'காக்கைச் சிறகினிலே நந்தலாலா' பாட்டு இங்கு ஒப்பிடத் தகுந்தது.

எனக்கு உங்கள் ஞாபகம் கூடுதலாக வரும். எப்போதும் சுகம் நீடித்தால் நான் உங்களை மறந்துவிடும் ஆபத்து உண்டு. பூக்களிலேயே நான் மயங்கிவிடாமலிருக்க அதில் சில முள்களையும் நட்டுவையுங்கள். சுகமாக இருக்கும்போது நான் கடவுளை மட்டுமல்ல, என்னையே மறந்துவிடுகிறேன். அவ்வாறு மறக்காமலிருக்க அவ்வப்போது துன்பமும் தேவை," என்று வேண்டிக்கொள்கிறார்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! சொற்பொழிவு என்ற பெயரில் தாங்கள் ஏன் பேசுகிறீர்கள்?**

அருமையான கேள்வி! என்னைப் பேசக்கூட விடமாட்டாய் போலிருக்கிறதே. நான் பேசாதிருந்தாலோ ஏனிந்த மௌனம் ஐயா என்று கேட்பாய். நான் பேசாதிருந்தால் நீ என்னிடம் என்ன கேட்பாய்?

பேசுகிறேன், ஏனெனில் உன்னிடம் கேள்வி இருக்கிறது. அதற்கான பதில் என்னிடம் உள்ளது. நான் பேசாவிடில் அது ஒரு குற்றமாகிவிடும். எனக்குக் கிடைப்பதை நான் பிறருடன் கட்டாயம் பகிர்ந்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் அது கருமித்தனமாகும். மற்ற வகை கருமித்தனங்களையாவது மன்னிக்கலாம். ஆனால் பரம சத்தியம் ஒருவனுக்கு வசப்பட்டு அதை அவன் பிறருடன் பகிர்ந்துகொள்ளாவிடில் அது மன்னிக்க முடியாத குற்றமாகும்.

**ஒவ்வொரு பூவுக்குமே தன் சுகந்தத்துடன்**
**எழுதாத ஒப்பந்தம் ஒன்றுளது**
**அதைக் காற்றிடம் ஒப்படைக்கும்வரையிலும்**
**தான் உதிரமாட்டேன் என்று ஒப்பந்தம்**

ஆனால் மனிதர்கள் தங்களுக்குக் கிடைத்ததைப் பிறருடன் பகிர்ந்துகொள்ள முன்வருவதில்லை. புத்தரும் இதற்கு விதிவிலக்கல்லர்.

புத்தர் ஞானம் பெற்ற பிறகு ஏழு நாள்வரை மௌனமாக இருந்தார். என்ன பேசுவது என்று அவருக்கு யோசனையாக இருந்தது. சொன்னால் யார் புரிந்துகொள்வார்கள்? 'புரிந்து

கொள்ளும் ஆற்றலுள்ளவர்கள் நான் சொல்லாமலே புரிந்து கொள்வார்கள். அவர்கள் ஆயிரத்தில் ஒருவர் இருப்பார்கள். மீதிப் பேர்களுக்கு நான் எத்தனை முறை எடுத்துச் சொன்னாலும் பலன் கிடைக்காது. மௌனமாக இருக்கை நன்று' என்று புத்தர் முடிவெடுத்தார்.

பிரம்மா தேவர்களையும் அழைத்துக்கொண்டு புத்தரிடம் வந்தார். "நீங்கள் பேசுங்கள். புத்தராக ஞானம் பெற்றவர்கள் இதுவரை பேசாமலிருந்தது கிடையாது. புத்தர்களுக்கும் மனித குலத்திற்குமிடையே இது ஓர் எழுதாத ஒப்பந்தமாகும். உங்கள் உபதேசத்தை ஏராளமானவர்கள் எதிர்பார்க்கின்றனர்," என்று தெரிவித்தார். புத்தரும் தான் யோசித்து வைத்திருந்ததை வெளியிட்டார். அவர் பிரம்மாவிடம், "புரிந்துகொள்ள முடியாதவர்களுக்கு நான் புரியவைக்க முடியாது. புரிந்துகொள்ளக் கூடியவர்களுக்கு என் உதவி தேவைப்படாது," என்றார்.

பிரம்மாவுக்கும் அவர் சொன்னது சரியென்றே பட்டது. அடுத்து என்ன செய்வது என்று அவர் தேவர்களுடன் ஆலோசித்தார். அவர்கள் ஒரு புதிய அடிப்படையில் மீண்டும் புத்தரை அணுகினர். "உங்கள் கருத்து நியாயமானது. சுயமாகப் புரிந்துகொள்ளக்கூடிய வெகுசிலருக்கும், என்றும் புரிந்துகொள்ள முடியாத பலருக்கும் இடையே சிலர் இருப்பார்கள். இவர்கள் மேற்கூறிய இருவகையினரையும் இணைக்கும் கண்ணியாக இருப்பார்கள். இவர்கள் நீங்கள் பேசினால் விஷயத்தைப் புரிந்துகொள்வார்கள். நீங்கள் பேசாவிடில் இவர்களால் புரிந்துகொள்ள முடியாது. இவர்கள் கடலோரம் நிற்பவர்கள் போன்றவர்கள். இலேசாக நெட்டித் தள்ளினால் கடலில் விழுந்து நீராடுவார்கள். இல்லாவிடில் இப்படியே மணலில் கால் கடுக்க நிற்பார்கள்," என்று பிரம்மா சொன்னால் புரிந்துகொள்ளக்கூடிய சிலரும் உண்டு என்பதைச் சுட்டிக்காட்டினார்.

சிலர் கடலிலிருந்து வெகுதொலைவில் நிற்கின்றனர். நீ எவ்வளவு இடித்துத் தள்ளினாலும் அவர்கள் விழமாட்டார்கள். விழுந்தாலும் தரையில், கரையில் கிடப்பார்கள். பிறகு எழுந்து அவர்களைத் தள்ளிய உன்னை வசைபாடுவார்கள்.

சிலர் தாவிக் குதிப்பதில் வல்லவர்களாக இருக்கின்றனர். அவர்களைத் தள்ளிவிட வேண்டிய தேவையிராது. அவர்கள் தற்போதே தாவிய நிலையில்தான் உள்ளனர்.

வேறு சிலர், மூன்றாவது வகையினர், உள்ளனர். இவர்கள் கடற்கரையை அடைந்துவிட்டனர். கடலோரம் நிற்கின்றனர். தாவிக் குதிக்கும் துணிச்சல் வரவில்லை. சிறிய அளவில் யாராவது சமிக்ஞை கொடுத்தால், தைரிய மூட்டினால் போதும். அவர்கள் கடலில் குதித்துவிடுவார்கள்.

புத்தர் இந்தக் கண்ணோட்டத்தை, இந்த தர்க்கத்தை ஏற்றுக்கொண்டார். எல்லா ஞானிகளும் இந்தச் சிக்கலை எதிர்கொள்ள நேரிடுகிறது. சத்தியத்தை அறிந்துகொண்டதும் அவர்களது மனத்தின் ஒரு பகுதி 'சும்மா இரு சொல் அற' என்று அறிவுறுத்தும். கபீர்தாசர் ஒரு பாடலில் 'வைரம் கிடைத்தது. முடிச்சுப் போட்டு அதை மூடிவிட்டேன்' என்கிறார். அதை ஏன் அடிக்கடி திறந்து காட்ட வேண்டும் என்று கேட்கிறார். வைரம் (ஞானம்) கிடைத்தால் எல்லோருமே மூடி மறைப்பது வழக்கம்.

சிலரிடம் வைரத்தைக் காட்டினால் நம்பமாட்டார்கள். பல நிறம் காட்டும் கல் என்று கூறிவிடுவார்கள். வைரம் என்று கூறுபவரையே சந்தேகிப்பார்கள். ஞானிகளைப் பொதுமக்கள் சுலபத்தில் நம்புவதில்லை. 'வைரம் என்பதே கிடையாது. ஒரு பளபளப்பான கல்லுக்கு மனிதன் சூட்டும் பெயர்தான் அது. கடவுள், ஆத்மா, நிர்வாணம், மோட்சம் முதலியவை கிடையாது. அவை சொற்களால் உண்டான கற்பனை' என்று மக்கள் அலட்சியப்படுத்தி விடுவார்கள்.

ஆனால் கபீர்தாசரோ மௌனமாக இருந்துவிடவில்லையே. வைரத்தை அவ்வப்பொழுது எடுத்துக் காண்பித்துள்ளார். பாடல்கள் மூலம் ஞானத்தை வெளிப்படுத்தியுள்ளார். அவற்றால் கரையில் நின்ற சிலராவது கடலில் குதிக்க முடிந்தது. அப்படிச் சிலருக்காவது ஞானத்தை வழங்காவிடில் ஞானிக்குக் குற்ற உணர்வு மேலிடும்.

**சொற்களெனும் என் சிப்பாய்களே!**
**எவரெவரின் மன பிரதேசம்**
**சுயநலமென்னும் மன்னன் கீழ்**
**அடிமைப்பட்டுக் கிடக்கிறதோ,**
**எவரெவர் மூடநம்பிக்கையெனும்**
**சுவர்களால் சூழப்பட்டுள்ளனரோ**
**அந்த எல்லோருக்கும் சேர்த்துப்**
**புதிய ஒளியின் செய்தி கொடுங்கள்**

நீ ஆன்ம விடுதலை பெற வேண்டும் என்பதற்காகவே பேசுகிறேன். நீ எத்தனையோ கேள்வி-விலங்குகளால் பூட்டப்பட்டுள்ளாய். நான் பேசுவதன் மூலம் அவை உடையும். உன் கண்கள் ஆகாயத்தை நோக்கிச் சற்று உயரும். இதுவரை கண்களை பூமியில் பதித்தபடி நடந்தாய். ஆகாயம் ஒன்றிருப்பதையே மறந்துவிட்டாய்: தினமும் நம்மில் ஆகாயத்தைப் பார்ப்பவர்கள் அரிது.

நான் பேசி உனக்கு இறக்கைகள் இருப்பதையும், அவற்றை நீ உபயோகப்படுத்துவதில்லை என்பதையும் நினைவூட்டுகிறேன். நீ பறக்க முடியும்; ஆனால் இதுவரை பறந்து பார்த்ததில்லை. பறந்தால்தான் உனக்குரிய தலைவிதி பூரணம் அடையும். ஆனால் நீ தரையிலேயே தேய்ந்தபடி செல்கிறாய்.

*அழிவற்றதிலிருந்து அழிதல் வரையான பயணம் யந்திரம்.*

*அழிவதிலிருந்து அழிவற்றது வரையிலான பயணம் மந்திரம்.*

*அழிவற்றதிலிருந்து அழிவற்றது வரையிலான பயணம் தந்திரம்.*

எனது பேச்சில் யந்திரம், மந்திரம், தந்திரம் ஆகிய மூன்றும் கலந்துள்ளன.

அழிவற்ற ஒன்று, கண்ணுக்குத் தெரியாத ஒன்று; எல்லையற்ற, நிரந்தரமான, தொன்மையான ஒன்றை எல்லைக்குள் கொண்டுவந்தால், சொற்களில் சிறைப்படுத்தினால் யந்திரம் தோன்றுகிறது. இதுவே விஞ்ஞானம் என்பது. என் பேச்சில் அறிவியல் கலந்திருக்கிறது. அறிவியலுக்கென்று விதிமுறைகள்,

உள்ளன. அவற்றை ஏணிப்படிகளாகக் கருதி ஏறினால் அழிவற்ற ஒன்றை அடையலாம். அவ்வாறு மேலே ஏறத் தூண்டுதலாக அமைவது மந்திரம்.

மேலேயிருந்து கீழே இறங்குவது யந்திரம். கீழேயிருந்து மேலே செல்வது மந்திரம். அதற்கு மேலும் உயர்ந்துகொண்டே செல்வது தந்திரம். அது ஆகாயத்திற்கும் அப்பால் மகா ஆகாயத்தை நோக்கிப் பயணிக்கிறது. பூரணங்களிலிருந்து மகா பூரணத்திற்கு, சூனியத்திலிருந்து மகாசூனியத்துக்கு தந்திரம் இட்டுச்செல்கிறது.

சிலரது ஆன்மிகப் பயணத்திற்கு விதிமுறைகள் தேவை. அவர்களுக்கு நான் விதிமுறைகளை அறிமுகப்படுத்துகிறேன். சிலருக்கு மந்திரம் கட்டாயம் தேவை. அவர்களுக்கு விதிமுறைகள் அவசியமில்லை. பிரார்த்தனை, இறை உணர்வு போதும். வேறு சிலருக்கு பிரார்த்தனையும் தேவையில்லை, தியான விதிமுறைகளும் தேவையில்லை. தந்திரம் என்று நான் கூறுவது—அழிவற்றதிலிருந்து அழிவற்றதற்கான பயணம்-அவர்களுக்குப் பொருந்தும்.

இந்த வளாகத்தில் மூன்று விதமானவர்கள் வசிக்கின்றனர். யந்திரம், மந்திரம், தந்திரம் ஆகிய மூன்று விதமான முறைகளின்படி அவர்கள் செயல்படுகின்றனர். இந்த மூவகையின ருக்காகவும் நான் உரையாற்றுகிறேன். பதஞ்சலி முனிவர் மற்றும் யோகம் பற்றி நான் யந்திரத்தின் அடிப்படையில் பேசுகிறேன். பக்தி பற்றி நான் மந்திரத்தின் அடிப்படையில் பேசுகிறேன். அஷ்டாவக்ரர் அல்லது சீன ஞானி லாவோத்ஸூ பற்றி தந்திரத்தின் அடிப்படையில் பேசுகிறேன்.

நான் பேசுவது காலத்தின் கட்டாயம். ஏனெனில் நீ இதுவரை எதையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. நீ முழுவதையும் கேட்டுவிட்டால் என் வேலை முடிந்துபோன மாதிரிதான்.

நான் ஏன் பேசுகிறேன் என்று கேட்ட சீடர் என் பேச்சால் சங்கடப்படுகிறார் போலுள்ளது. என் பேச்சு அவர் இதுவரை பின்பற்றிய நம்பிக்கைகளுக்கு சவாலாக இருக்கக்கூடும்.

அவருடைய கொள்கைகள் ஆட்டம் கண்டிருக்கும். இதனால் அவரது தூக்கம் கெட்டிருக்கும்!

உனக்கு என் பேச்சு சங்கடமாக இருந்தால் அதற்கான காரணத்தை நீ உன்னிடமே விசாரிக்க வேண்டும். அது உனது பிரச்சினை. நீ விரும்பாவிடில் என் பேச்சைக் கேட்க வேண்டாம். நான் உன் வீட்டிற்கு வந்து பேசவில்லையே. நீதான் இங்கு என் பேச்சைக் கேட்க வருகிறாய். என் பேச்சு முள்போல் 'சுருக்'கென்று உன்னைக் குத்தினால் நீ வர வேண்டாம். ஆனால் உன்னால் இங்கு வராமலும் இருக்க முடியவில்லை. என் பேச்சைக் கேட்காமலும் இருக்க முடியவில்லை. பேச்சைக் கேட்டாலோ மனத்தில் புரட்சி மூளுகிறது. இதனால் நீ தடுமாறுகிறாய். வேறு சிலரோ என் பேச்சில் சுவை காண்கின்றனர். அந்தச் சுவையில் ஆழ்ந்துவிடுகின்றனர். அவர்கள் தொடர்ந்து என் பேச்சைக் கேட்க விரும்புகின்றனர். நான் மௌனம் மேற்கொண்டால் கண்ணீர்விடுவார்கள். நான் உலகை விட்டுப் போனபின் என் பேச்சை நேரடியாகக் கேட்க முடியவில்லையே என்று வருந்துவார்கள். நான் அவர்களுக்காகப் பேசுகிறேன். சங்கடப்படுபவர்கள் என் பேச்சிற்கு வரவேண்டாம். ஆனால் என் பேச்சைக் கேட்பதில் பிரச்சினை இல்லாதவர்கள் இதயபூர்வமாகக் கேட்க வேண்டும். இதில் கருமித்தனம் காட்ட வேண்டாம். உடனடிப் பலன் தெரியாவிடிலும் சிறிது காலம் சென்றபின் அவர்களும் என் கண்ணோட்டத்திலும் அணுகுமுறையிலும் தோய்ந்துவிடுவார்கள்.

என் பேச்சு உனக்குள் இருக்கும் புல்லாங்குழலை ஒலிக்கச் செய்வதற்கான உபாயமாகும். நான் கூறுபவை வெறும் சொற்களல்ல. இவை உன் இதய வீணையை மீட்டுவதற்கான உபாயமாகும். நீ சங்கீதம் கொண்டு வந்திருக்கிறாய். அதை வெளிப்படுத்தாமல் புறப்பட்டு விடாதே. நீ ஒரு கீதம் கொண்டு வந்துள்ளாய். அதைப் பாடாமல் போய்விடாதே.

உனக்கு வாய்த்துள்ள நறுமணத்தை சமூகக் காற்றில் பரப்பாமல் போய்விடாதே.

என் பேச்சைக் கேட்பதும் கேட்காமலிருப்பதும் உன் பிரச்சினை. அது என் பிரச்சினையன்று. நான் பேசுகிறேன். ஏனெனில் பறவைகள் சப்திக்கின்றன; பூக்கள் பேசுகின்றன; சூரிய கிரணங்கள் பேசுகின்றன; கடவுள் எல்லா திசைகளிலிருந்தும் ஒலியெழுப்புகிறார்.

## ஆறாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஒரு கனவு கண்டேன். அதில் நீங்களும் சத்யசாயி பாபாவும் அவரவர் சிஷ்யர்களைப் பின்னணியில் கொண்டு சண்டை போடுகிறீர்கள். கடைசியில் சத்யசாயி பாபா தன்னைவிட ஓஷோ உயர்ந்தவர் என்று ஒப்புக்கொள்கிறார். இக்கனவு எக்காரணத்தால் ஏற்பட்டது? இதன் அர்த்தம் என்ன?**

இக்கனவிற்கு அர்த்தமும் கிடையாது, காரணமும் கிடையாது. இது நீ ஓஷோவின் ஆதரவாளன் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது.

இக்கனவு உன் அகங்காரத்தின் வெளிப்பாடு. நீ என் சீடன். ஆகவே என் வெற்றியைத்தான் விரும்புவாய். ஏனெனில் எனது வெற்றியில் உனது வெற்றியும் ஒளிந்திருக்கிறது. இந்த வெற்றியால் நான் பெரிய மகாத்மா என்று கருதப்படுவதால் என் சீடன் என்ற முறையில் உன் கௌரவம் காக்கப்படுகிறது.

அகங்காரம் உன்னை இயக்குவதை அறிந்துகொள். உனக்கு அடிப்படையில் ஓஷோ மீதோ, சாய்பாபா மீதோ பிடிப்பு இல்லை. நீ அரிய ஆன்மிகக் கனவு கண்டதாக உன் அகங்காரம் ஏமாற்றுகிறது. அதற்கு ஏதோ தத்துவார்த்தம் உள்ளதாக நினைக்கிறாய். உன் எதிர்காலம் குறித்து ஏதோ சமிக்ஞை அதில் உள்ளதாகவும் உனக்குத் தோன்றுகிறது.

உன் கனவில் நான் வென்றதால் உனக்கு என்ன லாபம்? நான் தோற்றிருந்தால் உனக்கு என்ன நஷ்டம் உண்டாகியிருக்கும்? நீ வருத்தப்பட்டிருப்பாய். ஆகவே நீ என்னைப் பற்றியல்ல, உன்

வெற்றி-தோல்வி பற்றிதான் உனக்குக் கவலை.

எனக்கு வெற்றியோ-தோல்வியோ ஏற்பட வாய்ப்பில்லை. என் வாழ்வில் எல்லாம் நடைபெற்று முடிந்துவிட்டது. எதுவும் மிஞ்சியிருக்கவில்லை. பயணம் பூர்த்தியாகிவிட்டது. நான் என் வீட்டிற்குத் திரும்பிவிட்டேன். இனி எந்தப் போராட்டமும் எனக்கில்லை. ஆனால் சீடனாகிய உன் யாத்திரை பாதிதான் முடிந்துள்ளது. எனவே உன் அகங்காரம் புதிய உருவங்களில் வெளிப்படும் அபாயமுள்ளது.

**பா**ரிஸ் பல்கலைக்கழகத்தில் தத்துவ இயல் பேராசிரியர் ஒருவர் தன்னைவிடச் சிறந்தவர் உலகில் யாரும் கிடையாது என்று அடிக்கடி கூறும் வழக்கம். அவருடைய மாணவர்களுக்கு இது சங்கடமாக இருந்தது. தத்துவம் அறிந்தவர், தர்க்க இயல் கற்றவர் உலகிலுள்ள கோடி-கோடி மக்களில் தானே உயர்ந்தவர் எனப் பேசலாமா என வருந்தினர். “இதை எப்படி நிரூபிப்பீர்கள்?” என்று அவரைக் கேட்டனர்.

அவர் உலகப் படம் கொண்டுவரச் சொல்லி, “உலகிலுள்ள இந்த நாடுகளில் தலைசிறந்த நாடு எது?” என்று கேட்டார். மாணவர்கள் அனைவரும் பிரெஞ்சுக்காரர்கள். எனவே அவர்கள் பிரான்ஸைவிட உயர்ந்த தேசம் கிடையாது என்றனர்.

ஒவ்வொரு நாட்டினரும் தங்கள் நாட்டைத்தான் உயர்த்திச் சொல்வார்கள். இந்தியர்களைக் கேட்டால், ‘பாரதம் தர்மகுரு, ஜகத்குரு, புண்ணிய பூமி, பகவான் எல்லா அவதாரங்களும் இங்குதான் எடுத்தார்; எல்லாத் திருவிளையாடல்களையும் இங்குதான் செய்தார்’ என்றெல்லாம் அடுக்கிக்கொண்டே செல்வார்கள். மற்ற நாட்டினரும் ஏதாவது காரணம் காட்டி, தத்தம் நாட்டை உயர்த்திக் கூறுவர்.

பேராசிரியர் அடுத்த கேள்வியாக பிரான்ஸ் நாட்டில் தலைசிறந்த நகரம் எது என்று கேட்டார். மாணவர்கள் பாரின் நகரைச் சேர்ந்தவர்கள். ஆகவே அவர்கள் பாரிசைவிட பெரிதான, சிறந்ததான நகரம் கிடையாது என்றனர். இந்த விஷயத்தில் யாருக்கும் சந்தேகமில்லை.

அடுத்து, “பாரிஸ் நகரில் தலைசிறந்த இடம் எது?” என்று கேட்டார் பேராசிரியர். மாணவர்கள் என்பதால், பல்கலைக்கழகமே ஊரில் சிறந்த இடமென்றனர். “பல்கலைக்கழகத்தில் சிறந்த துறை எதுவென்றதற்கு “நமது தத்துவ இயல் துறை” என்றனர். “அந்தத் துறையின் தலைவர் என்பதால் நானே மனிதரில் சிறந்தவன் என்பது தர்க்கப்படி நிரூபிக்கப்பட்டுள்ளது.” என்று ஒரு போடுபோட்டார் பேராசிரியர்.

இப்படித்தான் மனிதன் நடந்துகொள்கிறான். அவனது எல்லா வாதங்களும் ‘நான்’ என்பதில் வந்துநிற்கின்றன. நீ இந்தியாவை புண்ணிய பூமி என்கிறாய். கல்லும் மண்ணும் எப்படி புனித பூமியாகும் நீயும் மற்றவர்களும் பிறந்ததால்தான் அது புண்ணிய பூமி என்பதை மறைமுகமாகக் கூறுகிறாய். மற்ற நாட்டினர் இந்தியாவை புண்ணிய பூமி என்று சொல்வதில்லையே. அவர்கள் தத்தம் நாட்டைத்தானே கொண்டாடுகிறார்கள். நீ சீனனாக இருந்தால் சீனாவை புண்ணிய பூமி என்பாய்.

இந்தியா உயர்ந்தது என்பது இந்தியர்கள் மட்டுமே கூறுவது. இந்து மதமே தலைசிறந்தது என்பது இந்துக்கள் மட்டுமே கூறுவது. ஆனால் மகாவீரர்தான் தலைசிறந்தவர் என்று ஜைனர்கள் மட்டுமே கூறுவர். இந்துக்களோ கிருஷ்ணனைப் போற்றுவர்.

நீ கனவிலே கண்டதுபோல் சண்டை எதுவும் நடக்கவில்லை. குறைந்த பட்சம் எனக்கு யாருடனும் பகையில்லை. நான் வெற்றி பெற்றதாக நீ நினைப்பது உன் அகங்காரத்தின் விஸ்தரிப்பு மட்டுமேயாகும்.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! மூன்றே ஆண்டுகளில் இந்த ஆசிரமம் தொடங்கப்பட்டு நன்கு இயங்கிவருகிறது. உலகிலேயே இது வித்தியாசமான ஆசிரமமாக உள்ளது. இதை ஸ்தாபித்தவர், உருவாக்கியவர், நடத்துநர் எல்லாமே நீங்கள்தாம். இந்த விசால அமைப்பின் ஸ்தாபிதமும் திட்டவட்டமான**

**செயற்பாடுகளும் விருப்பம் அல்லது ஆசையின் உதவியின்றி நிறைவேறியது எப்படி சாத்தியப்பட்டது?**

இதைத் தோற்றுவித்தவன் நானல்லன். நடத்திவருபவனும் நானல்லன். நான் 23 மணி நேரம் என் அறையிலேயே இருப்பது உனக்குத் தெரியும். நான் வெளியில் செல்வதே இல்லை. இப்படியா ஒருவர் ஆசிரமத்தை நடத்துவார்? நான் இன்னமும் முழு ஆசிரம வளாகத்தையும் பார்த்ததில்லை. எங்கே என்ன நடக்கிறது என்றும் எனக்குத் தெரியாது. ஆசிரமத்திலுள்ள எல்லாக் குடில்களையும் நான் பார்த்ததில்லை.

நான் என்பவனே இல்லையே! ஒரு வசதிக்காக 'நான்' என்பது நடைமுறையில் உள்ளது. இது **எனது** ஆசிரமம் இல்லை. இது யாருடைய ஆசிரமமாகவும் இருக்கக்கூடாதென்றே விரும்புகிறேன். இது கடவுளுடையது. இதை அவர் நடத்தட்டும். அதற்கு என்னை அவர் பயன்படுத்திக் கொள்ளட்டும். உன்னையும் உபயோகிக்கட்டும். நாம் கருவிகள் என்ற நிலையிலேயே இருப்போம். அதற்கு மேல் நாம் திமிர்கொள்ளக் கூடாது.

நான் இதைப் படைத்தவன் அல்லன் என நான் நினைப்பதால் நான் எதற்கும் ஆசைப்படாமலே பணிகள் தாமாகவே நடைபெறுகின்றன. ஏனெனில் கடவுளின் விசாலமான கரங்கள் இதை இயக்குகின்றன. அப்போது மனித சக்தியின் எல்லையை மீறிய பெரிய சாதனைகள் நிகழ்கின்றன. நம் கைகள் சிறியவை. இவற்றால் சிறிய படைப்புகளையே உண்டாக்க முடியும்.

நான் என் அறையிலேயே அமர்ந்திருக்கிறேன். பல நாடுகளிலிருந்து என்னைச் சந்திக்க வருகிறார்கள். என்னைப் பற்றிய செய்தி அவர்களுக்கு எப்படிக் கிடைத்தது என்பது அவர்களுக்குத்தான் தெரியும். யாரோ பின்னாலிருந்து அவர்களை இங்கே அனுப்பிவைக்கிறார்கள்.

ஞானி ஒருவரை அவரை விரும்பாதவர்களின் கூட்டம் துரத்தியது. வழியில் அவரும் அவரின் உதவியாளரும் ஒரு குகையில் சிக்கிக்கொண்டனர். குகையின் வாசலில் பகைவர்கள்

முற்றுகையிட்டனர். உதவியாளர் நடுங்கினார். அவர் ஞானியிடம், "நாம் இருவர் மட்டுமே உள்ளோம். அவர்கள் நூறு பேருக்கு மேல் இருப்பார்கள்போல் உள்ளது," என்றார்.

ஞானி சொன்னார், "நாம் இருவரும் சேர்ந்தும் பூஜ்ஜியம்தான். நம்முடன் மூன்றாவதாக ஒருவர் உள்ளார். அவர்தான் கடவுள். அவருக்கு முன்னால் பகைவர்களின் எண்ணிக்கை ஒரு பொருட்டல்ல" அவ்வாறே பகைவர்களின் கூடடம் ஞானி வெளியே வருவார் எனக் காத்திருந்து சலித்துப்போய் கலைந்துவிட்டது.

அதுபோலவே இந்த ஆசிரமத்தை நான் நடத்தவில்லை. இதைக் கடவுள்தான் நடத்துகிறார். அவர் இஷ்டப்படும்வரை இதை நடத்தட்டும். அவர் விரும்புகின்ற விதமாக நடத்தட்டும். இதற்காக அவர் என்னை எவ்விதமாக வேண்டுமானாலும் கருவியாகப் பயன்படுத்தட்டும். ஆகவே நான் ஆசிரம நிர்வாகம் குறித்து எக்கவலையுமின்றி உள்ளேன். எது நடக்கிறதோ அது சரி; எது நடக்கவில்லையோ அதுவும் சரி. நான் கணக்குப் போட்டுப் பார்ப்பதில்லை.

மனிதன் கடவுளின் கருவியாக, கடவுளின் செயலுக்குக் காரணமாக இருப்பதற்கு மேலாகத் தன்னை நினைத்துக் கொள்ளக் கூடாது. செய்பவன் நீயாக இருக்கும்போது உன் செயலுக்கும் அதன் மூலம் கிடைக்கும் பலனுக்கும் எல்லை யுண்டு. கடவுளின் கருவியாக உன்னை நினைத்தால் நீ நிறையச் செயல்புரிய முடியும். சில சமயம் நீ எதுவும் செய்யாமலேகூட பலன் கிடைக்கும். உன் கையெழுத்து சிறியது. கடவுளின் கையெழுத்து உலகளாவியது.

நீ உன் தனித்துவத்தைக் கைவிட்டு, கடவுளே எல்லாம் செய்பவர் என்பதை எப்போதிலிருந்து அறிந்துகொள்கிறாயோ அதிலிருந்து வாழ்க்கையில் உனக்குத் தனிச் சுவை பிறக்கும்.

நான் ஆசிரமம் சம்பந்தமாக எதுவும் செய்யவில்லை. நடப்பது நடந்துகொண்டிருக்கிறது. நீ ஆசிரமத்தைப் பார்ப்பதைப் போலத்தான் நானும் அதை ஒரு பார்வையாளன்போல்

காண்கிறேன். எனது கண்ணோட்டம் சிறிய எல்லைக்குள் அடங்கிவிடுகிறது.

**மூங்கில் காட்டில் உட்கார்ந்து**
**அமைதியாகத் தேநீர் அருந்து**
**முற்கால சீனத் துறவியர்போல்**
**கவலையின்றி வாழ்ந்திடு**
**ஞானிகளின் பாதை**
**வன்முறையற்ற அகிம்சைப் பாதை**
**புலன்களுடன் மோதாமல்**
**அவற்றைத் தட்டிக் கொடுத்துத்**
**தூங்க வைக்கின்றனர்.**

வன்முறை வேண்டாம். ஆக்கிரமிப்பு வேண்டாம். எதையும் செய்யத் திட்டமிடும்போதே அதில் ஹிம்சையும் கலக்கும். எதையும் நான் செய்வேன் என்னும் மனப்பான்மையைக் கைவிடு. அகங்காரத்திற்காக, தான் சவால் விட்டதற்காக எதையும் செய்யாதே. அகங்காரம் இருக்குமிடத்திற்கு வன்முறையும் வந்துவிடும். நீ உலகுடனுடம் போராடாதே; உன்னுடனும் போராடாதே. முற்கால சீன ஞானிகள் மூங்கில் தோட்டத்தில் அமர்ந்து தேநீர் பருகியதுபோல் நீ எதற்கும் அலட்டிக் கொள்ளாமல் வாழ்க்கையை அமைதியாக நடத்து.

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

பிரம பூதம் இதம் ஸர்வம் கிஞ்சின்ன ஆஸ்தீதி நிஸ்சயீ |
அலக்ஷ்ய ஸ்புரண: சுத்த: ஸ்வபாவேநைவ ஷாம்யதி || 246
சுத்த ஸ்புரண ரூபஸ்ய த்ருஷ்ய பாவம் அபஸ்ய: |
க்வ விதி: க்வ ச வைராக்யம் க்வ த்யாக: க்வ ஷமோஅபி வா|| 247
ஸ்புரதோ அநந்த ரூபேண ப்ரக்ருதிம் ச ந பஸ்யத: |
க்வ பந்த: க்வ ச வா மோக்ஷ: க்வ ஹர்ஷ: க்வ விஷாதிதா || 248
புத்தி பபர்யந்த ஸம்ஹாரே மாயாமாத்ரம் விவர்ததே |
நிர்மமோ நிர்ஹங்காரோ நிஷ்காம: ஷோபதே புத: || 249
அக்ஷயம் கத ஸந்தாபம் ஆத்மாநம் பஸ்யதோ முனே: |
க்வ வித்யா ச க்வ வா விஸ்வம் க்வ தேஹோ அஹம் மமேதி வா || 250

'இந்த பிரபஞ்சம் என்பது ஒன்றுமேயில்லை. இதை அறிந்து. இதை உறுதியாக அறிந்து. தானாகத் தூண்டப் பெற்று இயங்கும் சுத்த மனிதன் இயற்கையாகவே சாந்தமாக விளங்குவான்' **(சுலோகம் 246)**

நம் கண்ணெதிரே தெரிபவையெல்லாம் உண்மையல்ல. எப்படித் தெரிகிறதோ அந்தத் தோற்றமும் உண்மையானதன்று. நீ எப்படிப் பார்க்க விரும்புகிறாயோ அப்படித்தான் உலகமும் உனக்குப் புலனாகிறது. நாம் நமது கற்பனையை நாம் காணும்

காட்சியின் மீது போர்த்திவிடுகிறோம். நம் மனத்தில் எண்ணங்கள் எழாத நிலையில், கண்கள் காலியாக இருக்கும்போது காட்சிகள் அவை உண்மையில் உள்ள விதமாகவே தோன்றும்.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு முறை நியூயார்க்கிற்குச் சென்றார். விசாலமான பாதை ஒன்றின் ஓரத்தில் மாட்டப்பட்டிருந்த ஓர் அறிவிப்பைக் கண்டார். அதில் அடுத்த பத்தாண்டுகளில் அமெரிக்காவில் கார்களின் எண்ணிக்கை மேலும் 50 கோடி அதிகரிக்கும் என்று எழுதியிருந்தது. அதைப் படித்ததும் நஸ்ருத்தீன் படுவேகமாக சாலையின் குறுக்கே ஓடினார். அவ்வாறு குறுக்கே பாய்வது உயிருக்கு ஆபத்தானது. ஒரு போலீஸ்காரர் அவரைத் தடுத்து, "எங்கே ஓடுகிறாய்? அப்படியென்ன அவசரம் வந்தது? பாதையில் குறுக்கும் நெடுக்குமாக அசுர வேகத்தில் கார்கள் ஓடுவது உன் கண்ணுக்குத் தெரியவில்லையா?" என்று அதட்டினார்.

நஸ்ருத்தீன் சொன்னார்: "நான் பாதையைக் கடப்பதற்காகக் காத்திருந்தேன். முடியாத காரியம்போல் தோன்றியது. பத்தாண்டாவது காத்திருந்தால்தான் கடக்க முடியுமெனத் தோன்றியது. ஆனால் இங்கே தொங்கும் அறிவிப்பின்படி பத்தாண்டுகளில் கார்களின் எண்ணிக்கை மேலும் 50 கோடி அதிகரித்தால் பாதையை எப்படிக் கடப்பது? வேறு வழியின்றி இப்போது கார்கள் குறைவாக இருக்கும்போதே கடந்து விடலாமென்று முடிவெடுத்தேன்."

மனிதன் தனது கற்பனையை சூழ்நிலை மீது சுமத்துகிறான். நஸ்ருத்தீன் 10 ஆண்டுகள் கழித்து என்ன ஆகுமோ என்று கவலைப்படுவது உனக்குச் சிரிப்பை மூட்டும். ஆனால் நீயும்தானே நீண்ட காலத்திற்கான திட்டங்கள் வைத்துள்ளாய். சாவு வரைக்கான திட்டங்கள் வைத்துள்ளாய். மரணத்திற்குப் பிறகு நிகழ வேண்டியவை குறித்தும் உன்னிடம் திட்டம் உள்ளது. இவ்வுலக வாழ்க்கைக்காகப் பணம் சம்பாதிக்கிறாய். அதற்காக நேர்மையைக் கைவிடவும் தயாராகவும் உள்ளாய். அதேசமயம் மரணத்திற்குப் பிறகான வாழ்க்கைக்காக இப்போதே புண்ணியச் செயல்களும் புரிகிறாய். தானம் வழங்குகிறாய்.

அரசர் ஒருவர் ஒரு பெரிய திருடனுக்குத் தூக்கு தண்டனை விதித்தார். தூக்கில் போடும் முன்னால் கைதியின் கடைசி ஆசை என்ன என்று கேட்டு அதை பூர்த்தி செய்வது வழக்கமான நீதிமன்ற நடவடிக்கையாகும். அரசர் அதைக் குறிப்பிட்டதும் திருடன்,

“ஐயா, நான் வீட்டில் சில முத்துகள் ஒளித்துவைத்துள்ளேன். அவை ஒரு மகானின் பூஜை அறையிலிருந்து திருடியவை. அப்போது மகான் அவை சக்தி மிக்கவை என்றும், அவற்றை நிலத்தில் நட்டால், ஒரு முத்துக்குப் பத்து முத்தாக நேரடியாகக் கிடைக்கும் என்றார். நான் சாவதற்கு முன் அவற்றை விதைத்துவிட விரும்புகிறேன். இதனால் யாருக்காவது பத்து-பத்து முத்துகள் வீதம் கிடைத்து அவர் கோடீஸ்வரர் ஆகலாம்,” என்றான்.

அரசருக்குப் பேராசை மூண்டது. அவர் அந்தத் திருடனை விடுவித்துத் தனது அரண்மனைத் தோட்டத்திலேயே முத்துகளை நடுவதற்காக நிலத்தை தயார் செய்யச் சொன்னார். திருடனும் அவ்வாறே நிலத்தை சுத்தப்படுத்திக் குழிகள் வெட்டினான். அரசர் அவனிடம், “உன்னைக் காவலர்களுடன் வீட்டிற்கு அனுப்புகிறேன். நீ முத்துகளை எடுத்துக்கொண்டு வா,” என்றார்.

“ஐயா, தங்கள் கட்டளைப்படியே செய்கிறேன். அதற்கு முன் நான் இன்னொரு பிரச்சினையையும் சொல்லிவிடுகிறேன். அந்த மகான் முத்துகளைத் திருடன் எவனும் விதைத்தால் முளைக்காது என்றும், எவரிடமிருந்து எதையும் அபகரிக்காத ஒருவன் விதைத்தால்தான் அவை முளைக்கும் என்றும் எச்சரித்தார்,” என்று தெரிவித்தான்.

அரசர் திருதிருவென விழித்தார். அவர் அமைச்சர்களைப் பார்த்தார்; அவர்கள் ராஜகுருவை நோக்க, அவர் சேனாபதியை நோக்கினார். சேனாபதி மன்னர் பக்கமாகத் திரும்பினார். மன்னர் திருடனைப் பார்த்து, “மன்னித்துவிடப்பா. இந்த முத்துகளை விதைக்க முடியாது. நாங்கள் எல்லோருமே திருடர்கள்தாம். நாங்கள் மிகப் பெரிய திருடர்கள். எங்களோடு ஒப்பிடும்போது நீ

சாதாரணமான சிறு திருடன். எனவே உன் தூக்கு தண்டனையை ரத்து செய்துவிடுகிறேன்,'' என்று அறிவித்தார்.

அந்த அரசர் வள்ளலென்று புகழ் பெற்றிருந்தார். ஆகவே திருடன், ''மகாதானியாகிய நீங்கள் திருடராக எப்படி இருக்க முடியும்?'' என்று கேட்டான். அரசர் சிரித்தார். ''அப்பாவியாக இருக்கிறாயே. தானம் கொடுக்கப் பணம் எங்கிருந்து வரும்? வரி முதலியவை மூலம் நேரடியாக அல்லது மறைமுகமாக நாங்கள் திருடுவதில் கொஞ்சம் தானம் செய்கிறோம். லட்சக் கணக்கில் திருடி ஒன்றிரண்டு ஆயிரம் தானம் தருகிறோம். இதன் மூலம் வள்ளல் பட்டம் கிடைத்துவிடுகிறது,'' என்று அவர் விளக்கினார்.

நீ சாவு வரைக்குமான வாழ்க்கைக்கு மட்டுமன்றி அதற்கப்பால் உள்ளதாக நினைக்கும் வாழ்க்கைக்கும் திட்டம் தயாரிக்கிறாய். பேரக்குழந்தைகளின் வாழ்க்கை வரைக்குமான ஏற்பாடுகள் செய்கிறாய். இத்துணை விரிவாக நீ கற்பனையில் ஆழ்ந்திருப்பதால் யதார்த்த நிலை உன் கண்ணுக்குப் புலப்படவில்லை.

உன் பார்வை கோளாறின்றி இருக்கும்போது யாரிடமாவது மூக்குக்கண்ணாடி வாங்கி அணிந்தால் எப்படி இருக்கும்? எல்லாம் விகாரமாகத்தானே தெரியும். இந்த மாறுபட்ட தோற்றமே மாயை எனப்படுவது. சுற்றிலும் உள்ளவை என்று மாயைக்கு அர்த்தம் கொள்ளலாகாது. மாயை என்பதற்கு நீ பார்க்கும் விதமாக உலகம் இல்லை என்று அர்த்தம். இந்தக் கல்லும் மண்ணும், நதியும் மலையும், சூரியன்-சந்திரன்-நட்சத்திரங்கள் பொய் அல்ல. நீ எந்தத் தோற்றத்தில் பார்க்கிறாயோ அது யதார்த்தத்திலிருந்து மாறுபட்டது.

நீ வானத்தில் சந்திரனைப் பார்க்கிறாய். உன்னைவிட்டுப் பிரிந்து சென்ற காதலியை அது நினைவுபடுத்துவதுபோல் உள்ளது. உன் கண்களிலிருந்து கண்ணீர் வழிகிறது. அதே நேரத்தில் இன்னொருவனை அவன் காதலி சந்திக்கிறாள். காதலன் அவளது முகத்தை சந்திரனுடன் ஒப்பிட்டுப் பூரிக்கிறான். நீ வருத்தமாக இருந்தால் சந்திரன் அழுவதுபோல் தோன்றும். ஆனால் உன் கண்ணீரைத்தான் நீ அதன் மீது சுமத்துகிறாய். காதலி

அருகிலிருந்தான் சந்திரன் புன்முறுவலுடன் விளங்குவதுபோல் உனக்குத் தோன்றும். ஆகவே கண்ணில் தென்படும் சந்திரன் உண்மையானது அன்று. அது உன் மனநிலைக்கு ஏற்பத் தென்படுகிறது. உனக்குள் இருப்பது சந்திரனில் பிரதிபலிப்பாகிறது. நீ காண்பது சந்திரனின் மாயையான தோற்றம். யதார்த்தமான சந்திரனின் தோற்றம் வேறாக இருக்கும்.

நமது நாட்டில் எத்தனையோ நூற்றாண்டுகளாக 'எல்லாம் மாயை' என்னும் கொள்கை நிலவி வருகிறது. அதை நீ நம்புவதாகவும் நினைக்கிறாய். ஆனால் உன் ஆழ்மனத்தில் மாயைக் கோட்பாட்டின்மீது உனக்கு நம்பிக்கை கிடையாது. சாஸ்திரங்கள் சொல்வதை நீ திருப்பிச்சொல்கிறாய், அவ்வளவு தான்.

**ஒ**ருமுறை ஒரு நண்பர் வீட்டில் நான் விருந்தாளியாகத் தங்கியிருந்தேன். அவர் மகன் சிறுவனாயினும் அதிபுத்திசாலி. அவனுடன் பேசும்போது அவன் தனக்குக் கடவுள்மீது நம்பிக்கை உண்டு என்றான். "நம்பிக்கை என்பதற்கு நீ என்ன அர்த்தம் எடுத்துக்கொள்கிறாய்?" என்று கேட்டேன். அவன் சற்று யோசித்த பிறகு, "நம்பிக்கை என்பது ஒரு சக்தி. அதன் மூலம் எது ஒன்று எப்படி இல்லையோ அதை உண்டென ஒப்புக் கொள்ளும் தைரியம் கிடைக்கிறது. ஒன்று உள்ளதா-இல்லையா, உண்டெனில் அது எப்படி இருக்குமென மனத்தில் ஒரு முடிவு ஏற்படுவதே நம்பிக்கை," என்று வரையறுத்துக் கூறினான்.

அவனது விளக்கம் என்னைக் கவர்ந்தது. கடவுள் உண்டா-இல்லையா என்று தெரியாத நிலையில், உண்டென்றோ, இல்லையென்றோ **உறுதியாக** நினைப்பது நம்பிக்கையின் தூண்டுதலால்தான். நீ கடவுள் உண்டென நம்புவதாகக் கூறுகிறாய். அது எந்த அளவிற்கு உறுதியானது. உன் நாக்கில் நம்பிக்கை உள்ளது (நாம ஜெபம்). ஆனால் உன் உயிரில் அந்த நம்பிக்கை கலந்திருக்கவில்லையே. உன் உதட்டின் அசைவில் கடவுள் நம்பிக்கை உள்ளது. ஆனால் இதயத்தின் துடிப்பில் இல்லையே. உனது நம்பிக்கை மேலோட்டமாக உள்ளது. அதன் வேர் உள்ளத்தில் இறங்கவில்லை.

ஒரு சீடன் ஒருநாள் தன் குரு தண்ணீரின்மேல் நடந்துசெல்வதைப் பார்த்து அசந்துபோனான். பல்லாண்டுகளாக அவர் கூறிவந்த உபதேசங்களை விட இந்த ஓர் அதிசயச் செயல் சீடனைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. அவன் குருவின் காலைப் பிடித்துக்கொண்டு. தனக்கு மற்ற அறிவுப் பயிற்சிகள் வேண்டா மென்றும், நீரில் நடக்கும் வித்தையைக் கற்றுக்கொடுத்தால் போதும். இதைக் கற்றுக்கொண்டால் தான் ஜகத்குருவாகி விடுவோமென்று அவனுக்குத் தெரியும். ஏனெனில் மக்கள் ஜகத்குருக்களிடம் இம்மாதிரியான மந்திர சக்தியையே எதிர்பார்க்கிறார்கள்.

குரு சிரித்தார். "இதில் ரகசியம் ஒன்றுமில்லையப்பா. கடவுள் மீது அசைக்க முடியாத நம்பிக்கை உனக்கிருந்தால் நீ எத்தகைய அரிய செயலையும் செய்யலாம். சிரத்தை இருந்தால் சாதனை புரியலாம்," என்றார். "சிரத்தையை எப்படி ஏற்படுத்திக் கொள்வது?" என்று சீடன் கேட்க, குரு, "ராம்-ராம் என்பது போன்ற நாமஜெபமே போதும். அது உனக்குள் சிரத்தையை பிரவேசிக்கச் செய்யும்," என்றார்.

சீடன் மறுநாள் காலை ஆற்றங்கரைக்குப் போனான். 'ராம்-ராம்' என்று ஏராளமான முறை இடைவிடாமல் முணுமுணுத்தபடி தண்ணீரில் நடப்பதுபோல் காலடி எடுத்துவைத்தான். சட்டென்று தண்ணீருக்குள் விழுந்து மூழ்கிவிட்டான்! வாய்க்குள் நிறையத் தண்ணீர் போய்விட்டது. அவன் கஷ்டப்பட்டு வெளியேறிக் கரைக்கு வந்தான்.

அவன் குருவிடம் சென்று கோபத்துடன், "நீங்கள் என்னை ஏமாற்றிவிட்டீர்கள். நீங்கள் சொன்னபடியே நான் ராமநாம ஜெபம் செய்தபடி தண்ணீரில் இறங்கினேன். ஆனால் மூழ்கிவிட்டேன். ஜெபம் செய்ததால் வாய்க்குள் நிறையத் தண்ணீர் ஏறி மூச்சுவிட முடியவில்லை. எனக்கு நீந்தத் தெரியும்தான். ஆனால் நான் நீர்ப்பரப்பில் நடந்து செல்லவே விரும்பினேன். நடக்க முடியும் என நினைத்து நான் முழு ஆடை அணிந்து சென்றதால் அவையும் கெட்டுப்போய்விட்டன," என்று புகார் செய்தான்.

“நீ எத்தனை முறை ராமன் பெயரை ஜெபித்தாய்?” என்று குரு கேட்டார். அதற்கு சீடன், “கரையில் நின்றபடி நூற்றுக் கணக்கான முறை ஓதினேன். உடம்பில் சூடேறி பலம் வந்ததாக நினைத்ததும் நீரில் காலை வைத்ததும் விழுந்து முழுகிவிட்டேன்,” என்றான்.

“அட பைத்தியமே! நூற்றுக்கணக்கான முறை பெயர் சொல்ல வேண்டிய தேவை என்ன? முழு சிரத்தையுடன் இதயபூர்வமாக நீ ஒரேமுறை ‘ராமா’ என்று சொல்லியிருந்தால் போதுமானதாக இருந்திருக்கும். உனக்கு நம்பிக்கை குறைவாக இருந்ததால் நூற்றுக்கணக்கான முறை சொன்னாய். அதனால்தான் உனது முயற்சியில் தோல்வியுற்றாய்,” என்று குரு விளக்கினார்.

உண்மையான, தீவிரமான சிரத்தை இருந்தால் சொற்களோ, ஜெபமோ, தேவையில்லை. கடவுள் நினைப்பு இதயத்தில் சிலிர்ப்பை ஏற்படுத்தினாலும் போதுமானது. ஜெபம் முழுமையான சிரத்தையைக் குறிப்பிடுவதில்லை. அதில் சற்று அவநம்பிக்கை மிஞ்சியுள்ளது. ஒருமுறை கடவுள் பெயர் சொன்னால் போதாது என்ற எண்ணம் அதில் கலந்திருக்கிறது. மேலும், ‘நான் ஜெபம் செய்கிறேன்’ என்னும் அகங்காரமும், ‘இத்தனை முறை ஜெபம் செய்தேன்’ என்ற கர்வமும் ஜெபமுறையில் மறைந்துள்ளன. ஆகவே குரு நானக் தனது ஜெப முறையை ‘அஜபா’ என்று அழைத்தார். அதாவது ஜெபம் என்பது ‘செய்யக்கூடாது’, தானாக ‘நிகழ’ வேண்டும்.

செடிகளில் பூக்கள் மலர்கின்றன. பறவைகள் தாமாக ஒலி எழுப்புகின்றன. அவை ராகம்-தாளம் பார்த்துப் பாடுவதில்லை. அருவி தானாகப் பொழிகிறது. காற்று தானாக வீசுகிறது. சூரியனிலிருந்து கிரணங்கள் தாமாகப் புறப்படுகின்றன.

நீ ஓரிடத்தில் உட்கார்ந்து ராம நாமம் சொல்லும்போது அங்கே பக்தியைவிட பழக்கம்தான் அதற்குக் காரணமாக உள்ளது. தானாக நிகழாமல் முயற்சி எடுத்து ஜெபம் நடக்கிறது. இதற்குப் பலன் கிடையாது. நீயாக எதுவும் செய்வதில்லை என்ற நிலைக்கு வந்து, நடக்கின்றவற்றை அப்படியே நிகழவிட்டாமல்,

அப்போது உன்னை அறியாமலே நீ செய்யும் ராம ஜெபம் உண்மையானதாக அமையும்.

**மீ**னவர் ஒருவர் இரண்டு வாளிகள் வைத்திருந்தார். தான் நதியில் பிடிக்கும் மீன்களை ஒரு வாளியிலும், நண்டுகளை இன்னொரு வாளியிலும் சேகரித்தார். மீன்கள் உயர எழும்பித் தப்ப முயன்றன. ஆகவே அவர் வாளியை மூடிவைத்தார். நண்டுகளும் ஒன்றின் கால்களை மற்றொன்று என்ற வகையில் பிடித்துக் கொண்டு வாளியிலிருந்து வெளியேற முயன்றன. மீனவர் அந்த வாளியை மூடவில்லை.

அப்போது அப்பக்கமாக வந்த உள்ளூர் அரசியல்வாதி இதைக் கண்டு திகைப்புற்றார். அவர் மீனவரிடம், "நண்டுகள் உள்ள வாளியை ஏன் மூடவில்லை? அவை எப்படி ஏறுகின்றன என்று பார். எல்லாம் தப்பித்து ஓடிவிடாதா?" என்று கேட்டார்.

மீனவர் அதற்கு, "நீங்க கவலைப்படாதீங்க, ஐயா. இந்த நண்டுகள் புத்திசாலியானவை. இவற்றிற்கு அரசியல்வாதியின் மூளை. ஒரு நண்டு மேலே ஏறினால் இன்னொரு நண்டு அதைக் கீழே இழுத்துவிடும். இதனால் எந்த நண்டும் தன்னிடம் விட்டு எளிதில் மேலே செல்ல முடியாது. தலைநகர் தில்லியில் நடப்பதுதான் இந்த வாளியிலும் நடக்கிறது. வாளியில் சுமார் 25 நண்டுகள் இருக்கும். இவற்றில் ஒன்றுகூட வெளியேறவில்லை; வெளியேறாது. காலையில் இருந்தே இந்த வாளியில் நடப்பதை நான் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேன். ஒரு நண்டு மேலே ஏறினால் இரண்டு நண்டுகள் அதைக் கீழே இழுத்து, இவ்வாறு எல்லா நண்டுகளும் தத்தம் கருமங்களில் (செயல்களில்) சிக்கிக்கொண்டுள்ளன," என்று தெரிவித்தார்.

நீயும் உன் கருமங்களில் சிக்கிக்கொண்டுள்ளாய். ஆனால் உன்னைப் பின்னோக்கி இழுப்பவர் நீயேதான். எனவே நீ மீண்டும்-மீண்டும் வீழ்ச்சியடைகிறாய். நீ கர்த்தா உணர்வையும், செயல்களுக்குச் சொந்தம் கொண்டாடுவதையும் கைவிட்டால், உன் வாழ்க்கையில் ஆன்மிகப் புரட்சி நிகழும்.

எல்லாவற்றையும் நீ எப்படிப் பார்க்கிறாயோ அவ்வாறு அவை உண்மையில் இல்லை. அவை நிஜத்தில் எப்படி

உள்ளனவோ அப்படி நீ இன்னமும் பார்த்ததில்லை. கடவுளும் உலகமும் வேறு வேறென நினைக்கிறாய். கடவுளைத் தவறான முறையில் பார்த்தால் உலகம். உலகத்தைச் சரியான முறையில் பார்த்தால் கடவுள். எல்லாம் எப்படி உள்ளனவோ அப்படியே கண்டால் கடவுள் தெரிவார். எப்படி இல்லையோ அப்படிப் பார்த்தால் உலகமாகத் தென்படும். சரியாகப் பார்த்தால் கடவுள். தவறாகப் பார்த்தால் உலகம். கடவுளைப் பார்ப்பதில் உள்ள குறையால் பதார்த்தங்கள் தெரிகின்றன. அது உனக்கு ஏற்பட்டுள்ள பிரமை. கடவுள் மட்டுமே உண்மை.

சிலர் என்னிடம், "கடவுள் எங்கே இருக்கிறார்? அவரைப் பார்க்க வேண்டும்," என்று கூறுகிறார்கள். நாத்திகர்கள் தாங்கள் கடவுளைப் பார்க்காமல் அவரை ஏற்கமாட்டோம் என்கிறார்கள். நான் அவர்களிடம், "முதலில் உங்கள் கண்களைப் பற்றி கவலைப்படுங்கள். பார்க்க ஆசைப்படுவதில் தவறில்லை. உங்கள் கண்கள் திறந்திருக்கின்றனவா? அவை சுத்தமாக உள்ளனவா?" என்று திருப்பிக் கேட்பதுண்டு.

ஒரு பொருள் அது உள்ளபடியே தெரியவில்லையானால் கண்ணில்தானே குறை? ஒலி அப்படியே கேட்கவில்லையெனில் காதில்தானே கோளாறு? புத்திசாலியான மனிதன் தன் கண்ணும் காதும் ஒழுங்காகச் செயல்படுகின்றனவா என்பதையே முதலில் கவனிப்பான். அவை சீராக உள்ளதென அவன் நினைத்தால்தான் தான் பார்ப்பதும் கேட்பதும் சரியாக உள்ளன என்று முடிவு செய்வான்.

நாம் முயற்சி செய்து வாழ்க்கை நடத்துகிறோம். நாம் திட்டங்கள் தயாரித்து வாழ்கிறோம். வலிந்து செயல் புரிந்து வாழ்கிறோம். இந்த சிரமங்கள் வாழ்க்கையில் இறுக்கத்தைத் தோற்றுவிக்கின்றன. மனத்தில் பரிதாப உணர்வையும் கவலையையும் உண்டாக்குகின்றன. 'செய்பவன் நான்' என்னும் கர்த்தா உணர்வும் அகங்காரமும் தலைதூக்குகிறது. இந்நிலையில் எதிர்ப்புகளும் தோல்விகளும் நம்மை அடித்துப்போட்டு விடுகின்றன.

இதற்குப் பதிலாக, உன் வாழ்க்கையில் எல்லாவற்றையும் கடவுளே செய்யவிடு. நீ செய்பவன் என்னும் உணர்வு கொள்ளாதே. கடவுளின் கரங்கள் கண்ணுக்குக் காட்சியளிக்கா விடினும் நீ உன்னை அவருடைய கரங்களில் ஒப்படைத்துவிடு. எல்லாவற்றையும் நிர்வகிப்பவர் உன்னையும் நிர்வகிப்பார். உலகத்தையே நிர்வகிப்பவருக்கு அற்ப ஆயுள் கொண்ட உன்னைத் தன் பொறுப்பில் எடுத்துக் கொள்வதற்கு என்ன சிரமம் இருக்கப் போகிறது? நீயாகப் பிறக்கவில்லை. நீயாக மரணத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது. இடைப்பட்ட 60-70 ஆண்டுகளில் நீ செய்கின்ற ஆர்ப்பாட்டம் கொஞ்சமா நஞ்சமா?

அஷ்டாவக்ரர் கூறுகிறார்: சுயமான உள் உந்துதலின் அடிப்படையில் வாழ்க்கை நடத்து. பெரிய கோட்டைகள் கட்டாதே. பெரிய கனவுகள் காணாதே. மக்கள் இதைச் சோம்பேறிகளுக்கான பாடம் என நினைக்கின்றனர். இதற்குச் சோம்பேறியாக இரு என்று அர்த்தம் இல்லை. இதன் பொருள், செய்பவனாக நீ இராதே என்பதுதான். கடவுளைச் செயல்புரிபவராக ஆக்கிவிடு. மனிதன் எதற்கும் தன் போக்கிலேயே அர்த்தம் எடுத்துக் கொள்வான். அஷ்டாவக்ரர் 'கர்த்தா உணர்வுடன் செய்யாதே! என்று கூறியதற்கு மனிதன் 'சோம்பேறியாக இரு' என்று அர்த்தம் கொள்கிறான்.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு பெண்ணைத் தீவிரமாகக் காதலித்தார். ஏனோ அந்தப் பெண்ணுக்கு மனத்தின் மூலையில் சந்தேகமும் கவலையும் இருந்தது. திருமணம் மிகவும் நெருங்கி விட்ட நிலையில் அப்பெண் நஸ்ருத்தீனிடம், "நீங்கள் திருமணத்திற்குப் பிறகும் இப்பொழுது போலவே அன்பு செலுத்துவீர்கள் அல்லவா?" என்று ஆர்வமாகக் கேட்டாள்.

அதற்கு அவர், "இப்பொழுதைவிட இன்னும் கூடுதலாக அன்பு செலுத்துவேன். ஏனென்றால் எனக்குத் திருமணமான பெண்களை ரொம்பவும் பிடிக்கும்," என்றார்!

மனிதன் தனது அறிவின் அளவுப்படிதான் எதையும் பார்க்கிறான். அந்த அடிப்படையில்தான் எதற்கும் விளக்கம் தருகிறான். நாம் நமது அறிவின் எல்லையைவிட்டு வெளியே வர

முடிவதில்லை. ஆகவே கடவுளைப் பற்றிய அறிவை நாம் பெற முடியவில்லை.

நாம் ஒவ்வொரு கணமும் அதில் லயித்து வாழ வேண்டும். இதை புத்தர் க்ஷணவாதம் என்றழைக்கிறார். அடுத்த நிமிடம் குறித்துச் சிந்தனை செய்யாதே. இந்த நிமிடத்தில் என்ன நடக்கிறதோ அதை நடைபெறவிடு. அடுத்த நிமிடம் வரும்போது அதைப் பார்த்துக் கொள்ளலாம்.

ஜென் துறவிகள் கூறுகிறார்கள்: பசிக்கும்போது சாப்பிடு. உறக்கம் வரும்போது தூங்கிவிடு. நடப்பவற்றுடன் சேர்ந்து அதன்படியே செல். நீச்சல்கூட அடிக்காதே. வாழ்க்கை நதியின் ஓட்டத்தோடு நீயும் சேர்ந்து அதன் திசையிலேயே செல். வேடிக்கையான விஷயம் ஒன்று. உயிருள்ள மனிதன் நதியில் மூழ்கிவிடுகிறான். செத்தவன் நதியின் மேற்பரப்பில் மிதக்கிறான். பிணம் எந்த முயற்சியும் செய்வதில்லை முயற்சி செய்யவும் அதனால் முடியாது. ஆனால் உயிருள்ளவன் முயற்சி செய்வதால் நீருக்குள் மூழ்கிவிடுகிறான்.

சந்நியாசி என்பவன் சுயமாக வாழ்பவன். அவன் உள்ளேயிருந்து பெறும் சக்தியால் வாழ்பவன். அவன் புத்தியினால் திட்டமிட்டு வாழ்பவனல்லன். நடப்பதை அவன் அவ்விதமே நடக்கவிடுகிறான். அவன் எந்த வேலையும் செய்வதில்லை என்று இதற்கு அர்த்தமில்லை. ஆனால் செய்யும் செயலுக்கு தானே எஜமானன் என்று அவன் உரிமை கொண்டாடுவதில்லை.

ஆகவே இந்த மனநிலையுடையவன் சுத்தமாகிறான். இயல்பாகவே அவன் சாந்தமான மனிதனாகிறான். தான் சாந்தமாக இருப்பதற்காக அவன் யோகம்-ஜெபம்-தவம் செய்ய வேண்டிய தேவை எழுவதில்லை. சுத்தமாக விளங்குவதற்காக அவன் திட்டங்கள் தயாரிக்க நேர்வதில்லை. எது எப்படி உள்ளதோ அதனுடன் அவன் ராஜியாக இருக்கிறான். அவன் வாழ்க்கை நதியின் ஓட்டத்தை எதிர்த்து நிற்பதில்லை. அவன் எதிர்நீச்சல் போடுவதில்லை. நதியின் ஓட்டத்துடன் அவன் இணைந்து செல்கிறான்.

அவனுக்கு நதி எங்கே போகிறது என்று உறுதியாகத் தெரியாது. அது எங்கே போய் முடிகிறது என்றும் தெரியாது. நீர்த்துளி கடலாகலாம் ஆனால் கடலைப் புரிந்துகொள்ள முடியாது. மனிதன் கடவுள் நிலையை அடைந்தாலும் அவரைப் புரிந்துகொள்ள முடியாது. நீர்த்துளி கடலில் விழுந்தால், அவ்வாறு விழுவதை அது ஏற்றுக்கொண்டால், அது கடலாக மாறிக் கடலைப் புரிந்துகொள்ள இயலும். கடலைப் புரிந்துகொள்ளக் கடலாவதைத் தவிர வேறு உபாயமில்லை. நாம் ஒன்றை முழுமையாக அறிவது அதுவாக நாம் மாறினால்தான் சாத்தியப்படும்.

இயற்கையாக வந்துசேரும் கடமைகளைச் செய். பேராசைப்பட்டு எதுவும் செய்யாதே. எதையும் அடைய, குறிப்பிட்ட விதமாக ஆவதற்கெனச் செயல் புரியாதே. கடவுள் உன்னை இன்பத்தில் ஆழ்த்தினாலும், துன்பத்தில் முழுகடித்தாலும் அப்படியே ஏற்றுக்கொள். பிறகு நீ வாழ்க்கையில் எதற்கும் வருந்த நேரிடாது.

இப்போது ஆரவாரமாக, கோலாகலமாக, வண்ணக் கோலங்களாகத் திகழும் வாழ்க்கை அதிகக் காலம் நீடிக்காது. இதெல்லாம் கனவுபோல் தற்காலிகமானது. வினாவிலேயே முதுமையால் உன் உயிர் சக்தி மெலியத் தொடங்கும். அப்போது வாழ்க்கையின் சாயம் வெளுத்துவிடும். முன்பு நீ கொட்டிக் கிடப்பதுபோல் நினைத்த இடம் இப்போது வெற்றிடமாகத் தெரியும். வாழ்க்கை முடியவுள்ள நேரம் உன் கைகள் காலியாகவே இருப்பது தெரியவரும். இந்த சூன்யம் உன்னை வேதனைக் குள்ளாக்கும்.

நரகம் என்பதற்குத் தனியானதொரு அர்த்தமில்லை. இறந்து பிறகுதான் நரக யாத்திரை தொடங்குவதாக நினைக்க வேண்டாம். இதேபோல் மரணத்திற்குப் பிறகுதான் சுவர்க்கம் என்றும் இல்லை. கடவுளின் விருப்பத்திற்கு விட்டுகொடுத்து வாழ்பவன் இங்கேயே சுவர்க்க மனநிலையில் வாழ்கிறான். திமிர்பிடித்து அகங்காரத்துடன் வாழ்பவனின் வாழ்க்கை காலப்போக்கில் நரகமயமாகிவிடுகிறது. இங்கே தூய வாழ்வோ, அகங்கார வாழ்வோ வாழ்பவன் மரணத்திற்குப் பின்னும் சுவர்க்கம்-நரகம் உண்டாயின் முறையே அவற்றில் வாழ்வான்.

'கண்ணில் தெரியும் தோற்றங்களை முழுமையாக நம்பாமல், சுயமாக உட்தூண்டுதல் மூலம் செயல்புரிபவனுக்குச் சடங்கு விதிமுறைகள், வைராக்கியம், தியாகம், மனத்தை அமைதிப் படுத்தும் முயற்சி ஆகியவை தேவைப்படுவதில்லை.' **(சுலோகம் 247)**

உட்தூண்டுதல் என்பது தானாகவே நிகழ்கிறது (spontaneous). அதற்காக நீ விசேஷ முயற்சி எடுக்க வேண்டிய தில்லை. நீ செய்து எதுவும் ஆகப்போவதில்லை. சட்டெனச் செயல் நடக்கிறது.

இதோ நீ எதிரில் அமர்ந்து என் பேச்சைக் கேட்கிறாய். அப்போது சொற்களைக் காதில் வந்து விழ விடு. நீ முயன்று உள்ளிழுக்காதே. சொற்களைக் கேட்கும்போதே அர்த்தம் தேடியபடி இருக்காதே. நீ சுற்றுப்புறத்தை மறந்து சொற்களை ஒலி இனிமையுடன் ரசித்து மகிழ். அப்போது கண்ணீர் சுரக்கலாம். உடல் புளகாங்கிதம் அடையக்கூடும். திடீரென ஒரு கணம் ஏதோ தெய்விகத் தோற்றம்போல் கண்ணில் படலாம். அதன்பின் உன் வாழ்க்கையின் சுவையே மாறிவிடும். மீண்டும்-மீண்டும் நீ அந்த அனுபவத்தை அசைபோடுவாய்.

வாழ்க்கையில் இன்பம் என்பது தானாக நிகழ்வது. அதை நீ முயன்று பெற முடியாது. நீ முயன்று பெறும் இன்பம் கசப்பில் முடியும்.

நீந்துபவன் ஒருவித சுகானுபவம் பெறுகிறான். நீ அதைக் கண்டு அவனிடம், "எனக்கும் நீச்சல் தெரியும். நானும் நீந்தட்டுமா? எனக்கும் சுகம் கிடைக்குமா?" என்று கேட்டால் அவனால் உறுதிகூற முடியாது. அநேகமாக சுகம் கிடைக்காது. ஏனெனில் நீ சுகம் கிடைக்க வேண்டுமென்று முன்கூட்டியே திட்டமிடுகிறாய்.

நீ நீந்தத் தொடங்குவாய். அதேசமயம் சுகம் கிடைக்கிறதா என்று கணக்குப் போடுவாய். சுகம் கிடைக்கவில்லைபோல் இடையிடையே தோன்றும். நீச்சலில் மனம் லயித்தால், அவ்வப்போது மூழ்கும்போது முழுமையாகத் தன்னை மறந்தால் அங்கே முயற்சி செய்யாமலே பரவசமாகத் தோன்றுகிறது.

இதேபோல் என் பேச்சில் லயிப்பவன் தன் நண்பனும் இன்பம் பெறட்டும் என்று அழைத்து வரக்கூடும். "ஓஷோவின் சொற்பொழிவை நீ ஒருமுறை கேட்டால், பிறகு நீயாகவே வரத்தொடங்குவாய்," என்று நண்பனிடம் பெருமையாகச் சொல்லலாம். ஆனால் அவனும் என் பேச்சை ரசிப்பான் என்று கட்டாயமில்லை. நண்பனும் தனக்கு ஏதோ புதிய அனுபவம் கிடைக்கும் என நம்பி என் பேச்சைக் கேட்க வரலாம். அதுவும் நிச்சயமில்லை.

**ந**ண்பர் ஒருவர் இங்கு தியானம்செய்ய வந்தார். அவர் பல்கலைக்கழகப் பேராசிரியர். தங்களைக் கெட்டிக்காரர்களென நினைப்பவர்கள் தோல்வி காண்பர் என்பதற்கு இவர் ஒரு உதாரணம். அவர் தொடர்ந்து மூன்று நாள் தியானம் செய்தார். பிறகு என்னிடம் வந்து, "இங்கே தியானம் செய்பவர்கள் ஏதோ அனுபவம் பெறுவது தெரியவருகிறது. ஆனால் என்னிடம் எந்த மாற்றமும் இல்லையே. எனக்கு ஏதாவது நிகழ வேண்டுமென்ற ஆர்வத்துடன்தான் இங்குவந்தேன். பல மாதங்களாக இங்கு வரத் துடித்தேன். நீண்ட விடுமுறை எடுத்து வந்துள்ளேன்.

"சிலர் இங்கே கண்ணீர் பெருக்குவதைப் பார்க்கிறேன். சிலர் ஆனந்தத்தில் ஆடுகிறார்கள். ஒருத்தருக்கும் தியானத்தால் எதுவும் நிகழவில்லையெனில் நான் பொருட்படுத்தியிருக்க மாட்டேன். ஆனால் என் கண்ணெதிரே நிகழ்பவற்றை நான் எப்படி மறுப்பேன்? என் கண்ணில் ஏன் நீர் சுரக்கவில்லை. என் கால்களில் ஆடுவதற்கான நடுக்கம் ஏன் தோன்றவில்லை? என் பாவங்கள் என்னைத் தடுக்கின்றனவா? முற்பிறவி வினைகள் தடையாக உள்ளனவா?" என அவர் வருத்தத்துடன் கேட்டார்.

மனிதன் தன் தோல்விகளைச் சமாளிக்க ஏதாவது தர்க்கம் வைத்திருக்கிறான். அதன் மூலம் தனக்குத் தானே சமாதானம் சொல்லிக் கொள்கிறான். தியானத்தால் மாற்றம் தெரியாமல் போவதற்கு முன்பு செய்த பாவங்களோ, வினைப்பயனோ குறுக்கே வருவதில்லை. மிகுந்த ஆர்வத்துடனும் பேராசை யுடனும் அரிய அனுபவம் பெற முயன்றால், அதற்காகத் திட்டங்கள் வகுத்தால், சுகத்தை அடைந்தே தீருவேன் என்று பிடிவாதமாக இருந்தால், தியானம் பலன் தராது.

நான் பேராசிரியரிடம், "நான் சொல்கிறபடி செய்யுங்கள். சுகம் வேண்டும் என்கிற எதிர்பார்ப்பைக் கைவிடுங்கள். சமாதியினால் கிடைக்கும் நன்மை பற்றி சிந்தனை வேண்டாம். தியானம் செய்கையில் தன்னைப் பற்றிய நினைவை அகற்றுக. 'தியானம் செய்கிறேன்' என்றும் நினைத்துக் கொள்ளாதீர். அதை அதன் போக்கில் விட்டுவிடுங்கள். நீங்கள் குறுக்கிடாவிடில் தியானம் தானாகவே உங்களிடம் மாறுதல்களை விளைவிக்கும். அந்த மாறுதல்கள் காரணமாக, முயலாமலே நீங்கள் சுகமாக உணர்வீர்கள்," என்று ஆலோசனை வழங்கினேன்.

நேரடியாக, வேண்டுமென்றே முயன்று, சுகம் பெறுவதற்கு இவ்வுலகில் ஏற்பாடு கிடையாது. சுகம் பின்புற வாசல் வழியாக ஓசைப்படுத்தாமல் வரும். காலடி சத்தம்கூட கேட்காது. எப்போது அது வந்தது என்று தெரியாதபடி அது உன்னைத் தழுவும். ஆஹா, நான் சுகமாக இருக்கிறேன் என நீ உணர்வாய்.

ஓர் ஓவியர் சித்திரம் தீட்டுகிறார். உலகையே மறந்து, தான் இருப்பதையும் மறந்து வரைகிறார். படம் தானாகத் தன்னை வரைந்துகொள்வது போன்ற சூழ்நிலை அங்கே நிலவுகிறது. இங்கே அகத் தூண்டுதல் செயலை நடத்துகிறது. ஓவியர் முன்கூட்டியே திட்டமிடுவதில்லை. அந்த ஓவியம் அற்புதமாக இருக்கும். ஓவியரே தன் படைப்பைக் கண்டு அதிசயப்படுவார். 'நானா இதை வரைந்தேன்?' என்று தன்னையே கேட்டுக் கொள்வார்.

இதனால் அகங்காரம் தலைக்கேறி அதேபோல் மீண்டும் வரைய முயன்றால் அவருக்கு வெற்றி கிடைக்காது! பிரபல ஓவியரான பிக்காஸோ தான் ஒரு சிறந்த சித்திரம் வரைந்தால் அதே போன்ற சித்திரத்தை மீண்டும் தன்னால் வரைய முடிந்ததில்லை என ஒப்புக்கொண்டுள்ளார்.

ரவீந்திரநாத் தாகுர் தமது கவிதையாற்றலைப் பற்றிக் கூறுகையில் தாம் கவிதை எழுத வேண்டும் என்று முனைந்து உட்கார்ந்தபோதெல்லாம் கவிதை தோன்றியதில்லை என்கிறார். தான் எதிர்பாராதபோது கவிதை வந்து உதித்ததாகக் கூறியுள்ளார். அவர் பிறருடன் சாதாரணமாகப் பேசிவருகையில் திடீரென அவர்

முகத்தில் ஒளி பரவும். போதை உண்டானதுபோல் தோன்றுவார். அப்போது அவரைச் சூழ்ந்துள்ளவர்கள் தாமாக அவரைவிட்டு விலகிவிடுவார்கள்.

குருதயால் மல்லிக் என்பவர் அவருடைய நண்பர்களில் ஒருவர். அவர் முதல் முறையாக தாகுரைச் சந்திக்கச் சென்றபோது அங்கிருந்தவர்கள், "நாங்கள் விலகி வெளியேறினால் அவ்வாறே நீயும் வெளியேறிவிட வேண்டும்," என்று எச்சரித்திருந்தார்கள். அந்த சமயம் கவிஞர் மீது கடவுள் இறங்கிவருகிறார் என்றார்கள். ஆகவே யாரும் தடையாக அங்கே இருக்கக்கூடாது என்று கூறினார்கள்.

குருதயால் முதல் முறை தாகுரின் அறைக்குச் சென்றபோது ஏழெட்டு பேர் ஏற்கெனவே அங்கிருந்தனர். தாகுர் தாமே தேநீர் தயாரித்து எல்லோருக்கும் வழங்கினார். திடீரென அவரது கையிலிருந்த கோப்பை நழுவி விழுந்தது. அவருடைய கண்கள் மூடிக்கொண்டன. அவர் இலேசாக ஆடத்தொடங்கினார். குருதயால் சொல்கிறார்:

"மற்றவர்களின் வற்புறுத்தலின் பேரில் நான் வெளியே வந்தேன்.,மற்றவர்கள் சென்றுவிட்டனர். நான் அறைக்கு வெளியே மறைந்து நின்று அபூர்வமான காட்சியைக் கண்டேன். சில நிமிடங்கள் முன் சாதாரண மனிதராகக் காணப்பட்ட ரவிந்திரநாதர் மாறிப் போயிருந்தார். இப்போது அவரிடம் ஒரு புதிய ஒளி தெரிந்தது. அறையில் விளக்கு எரிவதுபோல் தோன்றியது. அபூர்வமான அமைதி நிலவியது.

"நான் மந்திரம் போடப்பட்டவன்போல் பார்த்தபடி இருந்தேன். நான் அங்கே நிற்பது தவறு என்று குற்ற உணர்வு எழுந்தது. எனினும் என்னால் அசைய முடியவில்லை.

"ரவீந்திரர் எழுந்து நின்றார். அடுத்து, இலேசாக அசைய ஆரம்பித்தார். பிறகு சற்று வேகமாகச் சுழன்றார். ஆடுவதை நிறுத்தி ஏதோ பாடலை முணுமுணுக்கத் தொடங்கினார். நான் என் கண்ணெதிரே கவிதை பிறப்பதைப் பார்த்தேன். இது எனக்கு ஒரு அதிர்ஷ்டமான தருணம் ஆகும். அம்மாதிரி வாய்ப்பு பிறகு

எனக்கு என்றும் கிடைத்ததில்லை. பிறகு அவர் காகிதம் எடுத்து, தான் முன்பு முணுமுணுத்ததை எழுதத் தொடங்கினார். கவிதை பிறந்துவிட்டது என்ற திருப்தியுடன் நான் அங்கிருந்து அகன்றேன்."

இந்த விஷயத்தை குருதயால் நேரிடையாக என்னிடம் சொன்னார். கவிதை இறங்கிவரும்போது தாகுர் அறையைவிட்டு வெளியேற மாட்டார் எதுவும் சாப்பிடமாட்டார். தூங்குவது, குளிப்பது நிச்சயமில்லை. அப்போது அவர் யாரையும் சந்திக்க மாட்டார். அந்த நேரத்தில் அவர் சுயநினைவுடன் இருப்பதாகத் தெரியாது. யாரோ அவரை ஆட்டுவிப்பதாகத் தோன்றும்.

இதுதான் தூய்மையான அகத்தூண்டுதல் என்பதாகும்.

கிருஷ்ணன் அர்ஜுனனின் தேரோட்டியாக இருந்ததற்கு பல விளக்கங்கள் உள்ளன. உண்மையான விளக்கம் இதுதான்: கிருஷ்ணன் உன் வாழ்க்கைத் தேரை நடத்திச்செல்லும் சாரதியாக அமைவாராக. அவருடைய சுரங்களில் உன் வாழ்க்கைக் கடிவாளங்கள் இருக்கட்டும். அவரே தேரை ஓட்டட்டும். நீ உள்ளே கவலையின்றி அமர்ந்திரு. அவர் எங்கே தேரை இட்டுச் செல்கிறாரே அதற்கு ஒத்துழைப்புக்கொடு. தேரை ஓட்டும் விதம் குறித்து அர்ஜுனன் கிருஷ்ணனுக்குக் கட்டளைகள் பிறப்பிக்க வில்லை. நீயும் அதுபோல் கடவுள் உன் தேரைச் செலுத்தும் விதத்தில் குறுக்கிடாமல் இரு. 'நீ ஓட்டியது போதும். நான் இனி பார்த்துக் கொள்கிறேன்.' என்று திமிராய் இருக்காதே. அர்ஜுனன் அமைதி காத்தான்; வெற்றியடைந்தான்.

தனது கையைக் கடவுளின் கையில் பிடித்துக்கொடுத்தவன் பிறகு அமைதியாக இருந்துவிடலாம். பிறகு தியாகம், வைராக்கியம், சடங்கு விதிகள், எதையும் வலிந்து அடக்க முயலுதல் போன்றவற்றில் ஈடுபட வேண்டியிருக்காது. இது அஷ்டாவக்ரரின் புரட்சிகரமான கருத்து. அவர் நேரடியாக ஞானியாகும் வழியைக் காட்டுகிறார். நடுவில் பயிற்சி (சாதனா) தேவையில்லை என்கிறார். ஏனெனில் கடவுள் உனக்குள்ளே வீற்றிருக்கிறார். வெளியே ஜெபம்-தவம் செய்வது எதற்காக? வெளியே இருக்கும் எவருக்கு பூஜை-பிரார்த்தனை நிகழ்த்தி

வருகிறாய்? அவரை ஏன் காசியில் தேடுகிறாய்? நீ சாந்தமாக உட்கார்ந்துவிடு. கடவுள் அளிக்கும் அகத்தூண்டுதலின்படி வாழ்க்கை நடத்து-நிபந்தனைகளின்றி அவரிடம் உன்னை ஒப்படைத்துவிடு.

இப்படி வாழ தைரியம் தேவை. துணிச்சல் தேவை. ஏனெனில் மனம் தடுக்கும். அப்படி வாழ்க்கையைக் கண்ணுக்குத் தெரியாத கடவுளை நம்பி ஒப்படைப்பது ஆபத்து என்று மனம் பயமுறுத்தும். வழி தவறு வாழ்க்கை நஷ்டப்படும் என்று மனம் கூறும்.

சிலர் என்னிடம் தாங்கள் துறவியாக விரும்புவதாகவும் ஆனால் சமர்ப்பணம் செய்வதற்கு அஞ்சுவதாகவும் கூறுவதுண்டு. "உங்களிடம் சமர்ப்பண்ம் செய்வதற்கு அப்படியென்ன இருக்கிறது?" என்று அவர்களை நான் மடக்குவேன். அவர்கள் திகைப்பார்கள், தயங்குவார்கள்.

உன்னிடம் எதுவும் பொருளோ, ஆசையோ மிஞ்சியிருந்து துறவறத்திற்காக அதைக் கைவிட உங்களுக்கு சங்கடமாக இருந்தாலும் மரணம் எல்லாவற்றையும் ஒருநாள் பறித்துக் கொண்டுவிடத்தானே போகிறது. நீ சமர்ப்பணமாக எதைத் தருவாய் என்று கேட்டுக்கொண்டு மரணம் காத்திராது. நீயே முன்கூட்டியே உன்னிடமுள்ளதை சமர்ப்பித்துவிட்டால் உனக்கு ஆனந்தம் உண்டாகும். மரணம் அவற்றைப் பிடுங்கும்போது உனக்கு வேதனைதான் உண்டாகும். மரணத்திடம் வேறு வழியின்றி உன்னை ஒப்படைப்பதைவிட, சந்தோஷமாக நீ முதலிலேயே உன்னைக் கடவுளிடம் ஒப்படைப்பதுதான் புத்திசாலித்தனம். பிறகு மரண பயமும் இருக்காது. ஏனெனில் உன்னிடம் இழப்பதற்கு-எதுவும் மிஞ்சியிராது.

நீ உனது எஜமான மனப்பான்மை, அகங்காரம், பணத் திமிர், பதவித் திமிர், சமூக கௌரவம் என்று நிறையச் சேகரிக்கிறாய். 'நான் சம்பாதித்தேன், சேகரித்தேன், இதோ என் சமூக அந்தஸ்து, இதோ என் உயர் பதவி என்றெல்லாம் மார் தட்டிக் கொள்கிறாய். ஒருநாள் மரணம் உன்னிடம் வரும். சீட்டுகளால் மாளிகை கட்டினாலும் காற்று அதை வீழ்த்திவிடுவதுபோல் மரணம்

உன்னிடமுள்ள அனைத்தையும் சிதறடித்துவிடும் வாழ்க்கை முழுதும் செய்த உழைப்பு மண்ணில் கலந்துபோகும். நீயும் மண்ணில் கலந்துவிடுவாய்.

மரணம் நம்மிடமிருந்து பிடுங்கப்போவதை அதை முன்கூட்டியே நாமே கொடுத்துவிடுவோம் என்று சந்நியாசி கூறுவார். எப்படியும் இழக்கப்போவதை சமர்ப்பணம்போல் முன்பே கொடுத்து அந்த சுகத்தை அனுபவிப்பது மரண சமயம் ஓலமிடுவதைவிட புத்திசாலித்தனம் அல்லவா?

அப்போது ஒரு விந்தை நிகழ்கிறது. நீ கைவிட்டதும் உனக்கு எல்லாம் கிடைக்கத் தொடங்குகின்றன. இயேசுநாதர், 'சேர்த்தால் இழப்பாய். கொடுத்தால் பெறுவாய்' என்கிறார். இழப்பதற்கு சம்மதிப்பவன் அடைவதற்கு உரிமை பெறுகிறான்.

பிறகு சடங்கு, தியாகம், வலிந்து மேற்கொண்ட கட்டுப்பாடு முதலியவற்றிற்கு இடமில்லை. நீ செய்ய வேண்டியது எல்லாவற்றையும் கடவுளின் பொறுப்பில் தள்ளிவிடு. அவர் உன் மூலம் செய்யவைப்பதைச் செய். அவர் எழுப்பினால் எழு. எப்படி உட்கார வைக்கிறாரோ அப்படியே இரு. எந்த நிபந்தனையையும் கடவுள் முன் வைக்காதே.

இதுதான் அர்ஜுனனின் பிரச்சினையாக இருந்தது. அவன் கிருஷ்ணரைப் பார்த்து, "நான் போர் புரியமாட்டேன். இதனால் நான் மாபாவியாவேன். வன்முறை பரவும். பிரியமானவர்களையும் கொல்ல நேரிடும். பிறகு அரசாட்சி கிடைத்து என்ன பயன்? அந்த ஆட்சி சுடுகாட்டில் அரியணைமேல் அமர்ந்து ஆள்வது போன்றதாக அமையும். என்னைப் போகவிடு. நான் காட்டிற்குச் சென்று சந்நியாசியாகிவிடப் போகிறேன்," என்று புலம்பினான்.

கிருஷ்ணரின் பகவத்கீதையின் சாரம் என்னவென்றால் கடவுள் நம் மூலம் செய்விப்பதை அவ்வாறே நடைபெற விடவேண்டும். நம் மூலம் போர் நிகழ்த்தினால் போரிடுவோம். நாம் குறுக்கிட வேண்டாம். நாம் கடவுளின் கருவியாக முழுமை பெற முயலுவோம். நாம் எதையும் தேர்ந்தெடுக்க வேண்டாம். இதுவே முழு சமர்ப்பணம், ஆத்ம சமர்ப்பணம், வெளியே சமர்ப்பணம்

நிகழ்ந்தால் உள்ளே அகத்தூண்டுதல் வலிமை பெறும், முழுமை பெறும்.

எல்லாவற்றிற்கும் காரணமுண்டு. கடவுளுக்கு மட்டும் காரணமில்லை. கடவுள் அனைத்திற்கும் காரணகர்த்தா. அவர்தாம் எல்லாவற்றையும் படைத்தார். அவரை யாரும் படைக்கவில்லை. அனைத்திற்கும் பின்னால் அவர் உள்ளார். அவருக்குப் பின்னால் யாரும், எதுவும் இல்லை. அவர் காரணங்களின் காரணமாக உள்ளார். அவரே அடிப்படை. அவருக்கு அடிப்படை என்று எதுவுமில்லை. அவர் வேர் போன்றவர் அவருக்குக் கீழே ஒன்றுமில்லை; மேலே எதுவுமில்லை. எல்லாமும் அவருள் அடங்கியுள்ளன.

நீ எதையும் காரணத்துடன் செய்கிறாய். கடவுளின் செயல்களுக்கு காரணம் கூற முடியாது. உதாரணமாக, அவர் உன்னைப் படைத்தார்: எந்த காரணத்திற்காக உன்னை உண்டாக்கினார் என்று உன்னையே கேட்டுப்பார். வேறெந்த நாட்டிலும், வேறெந்த மதத்திலும் இதற்கான விடை கிடைக்காது. இந்நாட்டில் மட்டுமே விடை உண்டு. கடவுள் உன்னைப் படைத்தது லீலையாக. லீலை அல்லது அலகிலா விளையாட்டிற்கு காரணம் இருப்பதில்லை. உன்னைப் படைத்து நீ உருவாவதைக் காண்பதில் அவருக்கு ஒரு சந்தோஷம்.

மனிதனுக்கு முக்தி தருவதற்காகக் கடவுள் உலகை உண்டாக்கினார் என்பர். உலகம் மனிதனைக் கட்டிப்போடுமே தவிர முக்தி தராது.

சிலர் மனிதன் ஞானம் பெறுவதற்காக உலகைப் படைத்தார் என்பர். அதற்கு அவர் ஏன் உலகைப் படைக்க வேண்டும்? நேரடியாக ஞானத்தை வழங்கியிருக்கலாமே. ஞானத்தைத் தேடி மனிதன் ஏன் அலைந்து திரிந்து கஷ்டப்பட வேண்டும்? கடவுள் மனிதன் தீமையிலிருந்து தப்புவதற்காகத் தீயசக்திகளை உருவாக்கினார் என்பர் சிலர். இது விசித்திரமான வாதம். மனிதன் விஷத்தை அடையாளம் கண்டுகொண்டு அதைக் குடிக்கக் கூடாது என்பதற்காகக் கடவுள் விஷத்தைப் படைத்தார் என்பது போலுள்ளது இவ்வாதம். நீ ஜாக்கிரதையாக நடக்கப் பழக

வேண்டுமென்பதற்காகக் கடவுள் முள்ளைப் படைத்தார் என்று கூற முடியுமா?

கடவுள் உலகையும் மனிதனையும் லீலையாகப் படைத்தார் என்பதுதான் இந்திய தத்துவம் கூறும் காரணம். இந்த லீலைக்கு எந்த எதிர்பார்ப்பும் இல்லை; எந்த நோக்கமும் இல்லை. இதற்காக உழைப்புத் தேவைப்படவில்லை.

குழந்தைகள் விளையாடியபடி தங்கள் சக்தியைச் செலவழித்துக் கொள்வதுபோல் கடவுளும் தன் சக்தி வெளிப்படச் செய்கிறார். சக்தி மிகுந்தால் வெளிப்பட்டுதான் தீரும். கடலிலிருந்து அலைகள் எழும்புவதுபோல் கடவுளின் சக்தி பல வகைகளில் வெளியாகிறது. விளையாட்டு (லீலை) என்பது பொருத்தமான சொல். கடவுள் ஏதோ ஒரு வேலைபோல இதைச் செய்வதில்லை. அதனால்தான் அவருக்கு லீலாதரன் என்றொரு பெயருள்ளது. அவர் காரணமின்றி எதையும் செய்பவர்.

பூ ஏன் மலர்கிறது? மரம் ஏன் பச்சையாக உள்ளது? நதி ஏன் கடலை நோக்கி ஓடுகிறது? மனிதர்களிடையே அன்பு எப்படித் தோன்றுகிறது? ஆணைப் பெண்ணோ, பெண்ணை ஆணோ ஏன் நேசிக்கின்றனர்? இம்மாதிரியான கேள்விகட்குப் பதில் கிடைக்காது. பதில் கிடைத்தாலும் அது செயற்கையாக இருக்கும்.

“அந்தப் பெண் அழகாக இருப்பதால் எனக்கு அவள்மீது காதல் தோன்றியது” என்கிறாய். நீ தலைகீழாக மாற்றிச் சொல்கிறாய். நீ அவளை நேசிப்பதால் அவள் உனக்கு அழகியாகத் தெரிகிறாள். மற்றவர்கள் அவள் அழகாக இருப்பதாக நினைக்கவில்லையே.

மஜ்னுவுக்கு மட்டும்தான் லைலா அழகாகத் தெரிந்தாள். மற்றவர்கள் அவனிடம் லைலாவிடம் ஒரு விசேஷமும் தெரியவில்லையே. நிறம் கூட மட்டு என்று கூறியும் அவன் நம்பவில்லை. அவளுடன் ஒப்பிடுவதற்காக அழகான பெண்களைக் காண்பித்தும் அவன் அவர்களில் யாரும் லைலாபோல இல்லை என்றான். அவன் ஊர் மக்களிடம், “நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. லைலாவைச் சரியாக மதிப்பிட

மஜ்னுவின் கண்கள் வேண்டும். என் கண்களைத் தவிர பிறர் கண்களால் அவள் அழகை அறிய முடியாது,” என்று விவாதத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தான்.

நீ ஒரு பெண்ணை ஏன் நேசிக்கிறாய் என்று காரணம் கேட்டால், அவள் அழகி என்பாய்; இனிமையான குரலுடையவள் என்பாய்; நடையழகி என்பாய். இவையெல்லாம் பொய்! நி அவளைக் காதலிப்பதால் அவளிடம் சில சிறப்புகளைக் கற்பனை செய்கிறாய். எதனாலோ அக்காதல் முறிந்தால் அதே பெண் சராசரிக்கும் கீழாகத் தெரிவாள். அவள் குரல் சகிக்க முடியாததாக, அவள் நடக்கும் விதம் கோணல்மாணலாகத் தெரியும். காதல் காரணமாக அவள் அழகாகத் தெரிந்தாள். ஆனால் காதலுக்கு காரணம் கிடையாது.

நீ வாழ்க்கையை ஆராய்ந்தால் இங்கு எல்லாமே காரணமற்றவை என்பது புரியவரும். இது புரிந்துவிட்டால் வாழ்க்கையிலிருந்து கவலை அகன்றுவிடும். ஒரு சம்பவம் ஏன் நிகழ்கிறது என்பதற்கான காரணம் புரியாதபோது அது குறித்துக் கவலைப்படுவதும் வீண்தானே.

‘எல்லையற்ற உருவங்களில் வெளிப்படுகின்ற இயற்கையைப் பார்த்தும் பார்க்காதவன் போலிருக்கும் ஞானிக்கு எந்தத் தடைகளுமில்லை. மோட்சம், சுகம், துன்பம் முதலியவையும் அவனைப் பாதிப்பதில்லை.’ **(சுலோகம் 248)**

இயற்கை எத்தனை விதமாக வெளிப்படுகிறது என்பதைக் கணக்கிடவே முடியாது. இயற்கையின் இந்த லீலைக்குப் பின்னணியில் கடவுளின் லீலை நடைபெறுகிறது. ஞானி அந்த விளையாட்டுக்காரனைப் பார்ப்பதில்தான் ஆர்வம் காட்டுகிறான்.

இயற்கையின் வெளிப்பாடுகள் சிறியவை. மரம் அழகு, நிலா அழகு, சூரியன் அழகு. ஆனால் உள்ளே இருக்கும் சூரியனுக்கு வானத்து சூரியன் ஈடில்லை. ‘உள்ளத்து சூரியன் உதித்த போதுதான் உண்மையான சூரியனைக் கண்டுகொண்டேன்’ என்கிறார் கபீர்தாசர்.

வெளியே பிரகாசிக்கும் சூரியன் அடுத்த பல்லாயிரம் ஆண்டுகளில் அணைந்துவிடும் என்றும், தினசரி அதன் சக்தி (எரிபொருள்) குறைந்து வருவதாகவும் விஞ்ஞானிகள் கருதுகிறார்கள். வீட்டில் மாலையில் ஏற்றும் விளக்கு சில மணி நேரத்தில் அணைவதுபோல் சூரியனும் ஒருநாள் அணைந்து போகும். எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்குப்பின் அவ்வாறு நிகழும் என்பதும், அப்போது நாம் இருக்கமாட்டோம் என்பதும் வேறு விஷயம்.

ஆனால் நமக்குள்ளே இருக்கும் பிரகாசம் மங்குவதில்லை, மறைவதில்லை. அது திரியும் எண்ணெயுமற்ற அதிசய விளக்கு. அந்த ஒளியைக் கண்டவனுக்கு மற்ற ஒளிகள் இருட்டாகத் தெரியும்.

இது பற்றி அரவிந்தர், 'நான் எனக்குள்ளிருக்கும் பிரகாசத்தைக் காணாத வரையிலும் வெளிப்புற ஒளிகள்தாம் பிரகாசமானவை என நினைத்திருந்தேன். உள்ளொளியைக் கண்டபின் மற்ற ஒளிகள் இருந்த இடம் தெரியவில்லை. உண்மையான வாழ்க்கையைக் கண்டுகொண்டபின் இதுவரை நடத்திய வாழ்க்கை சாவு வாழ்க்கை என்று புரிந்தது. உண்மையான அமிர்தத்தின் சுவையை அறிந்தபின் இதுவரை அமிர்தமென நினைத்தது விஷத்திற்கு சமானம்,' என்றெல்லாம் சொல்கிறார்.

ஞானி மூலத்தை, அடிப்படையைக் கண்டுவிடுகிறான். லீலைகளின் ஆழத்தில் லீலாதரனான கடவுளைப் பிடித்துக் கொள்கிறான்; நடனத்தின் ஊடே நடராஜரைப் பிடித்துக் கொள்கிறான். பிறகு நடனம் தொடர்ந்து கண்ணில் பட்டாலும் படாத மாதிரிதான்.

வெளியே விளையாட்டு தொடர்கிறது. ஆனால் ஞானிக்கு அதில் ஆர்வம், ஈடுபாடு, ருசி இருப்பதில்லை. வெளியில் ஆர்வம் இல்லாவிடில் கட்டிப்போடும் தளைகளும் இருப்பதில்லை. பிறகு மோட்சமும் (தளைகளை அறுத்தல்) தேவைப்படுவதில்லை.

நமக்கோ மனம் கட்டுப்படுவதில்லை. வெளியே அலைந்தபடி இருக்கிறது. எத்தனையோ ஆசைகளில் சிக்கி

அலைகிறது. ஆகவே நாம் நமது சொந்த வீட்டிற்குத் திரும்ப முடியவில்லை. அது நம்மை இழுத்துக்கொண்டே செல்கிறது. நம்மை ஓட-ஓட விரட்டுகிறது. இதனால் நம்மை நாம் பார்த்துக்கொள்ள அவகாசம் கிடைப்பதில்லை. மனம் மற்றவற்றை யெல்லாம் உனக்குக் காட்டிவிட்டு, உன்னை உனக்குக் காட்டாமல் வஞ்சிக்கிறது.

ஆனால் ஞானி காட்சியிலிருந்து விலகிவிடுகிறான். அந்தக் காட்சியைக் காட்டுபவனிடத்தில் (கடவுளிடத்தில்) தங்குகிறான். இவ்வாறு அவன் முழுமையாக மாற்றம் பெறுகிறான். அவனது வாழ்க்கை சக்கரம் முழுமை பெறுகிறது. நாம் வெளியே பார்க்கிறோம். அவன் உள்ளே பார்க்கிறான், நாம் கண்ணைத் திறந்து பார்க்கிறோம். அவன் கண்ணை மூடி வைத்திருக்கிறான். நாம் எண்ணங்களின் அடிப்படையில் பார்க்கிறோம். அவன் எண்ணங்களின்றி இருக்கிறான்.

எல்லாம் தலைகீழ். நமது சக்தி வெளியே செல்லும் தன்மையுடையது. ஞானியின் சக்தி உட்புறம் பாய்கிறது. நாம் வெளியே நடக்கிறோம். ஞானி உட்புறமாக நடைபோடுகிறான். கண்ணை மூடியபின் உள்ளே தெரியும் காட்சியே சத்தியம். அப்படி சத்திய தரிசனம் பெற்றபின் கண்ணைத் திறந்தால் எல்லாப் பொருட்களிலும் கடவுள் தெரிவார். உலகம் தெரியாது. பிறகு தளைகள் கிடையாது. எனவே மோட்சமும் தேவைப்படுவதில்லை. நாம் கடவுளுடன் ஒன்றிவிடுகிறோம்.

'புத்தியால் முழுவதும் நிறைந்துள்ள உலகில் மாயை மட்டுமே எங்கும் பரவியுள்ளது. அதில் பாசங்களற்ற, அகங்காரமற்ற, விருப்பங்களற்ற ஞானி சிறப்பாகத் திகழ்கிறான்.' **(சுலோகம் 249)**

முதலில் புத்தி-புத்தத்துவம் என்னும் இரண்டு சொற்களின் வேறுபாட்டைத் தெரிந்துகொள். சராசரி மனிதனிடமும் புத்தி உண்டு. ஞானியிடம் இருப்பது புத்தத்துவம். புத்தி என்றால் சிந்தனை செய்யும் சக்தி. புத்தத்துவம் என்றால் எண்ணங்களே இல்லாத மனநிலை. புத்தி மேகங்கள் மூடிய ஆகாயம் போன்றது.

புத்தத்துவம் மேகங்களற்ற நிர்மலமான வானம் போன்றது. புத்தி பரம சுத்த நிலையை அடைந்தால் புத்தத்துவமாக மாறுகிறது.

புத்தி என்பது உலகம். உன் மனத்தில் குறுக்கும் நெடுக்குமாக வலைபோல எண்ணங்கள் பின்னிக் கிடப்பதுதான் உலகம். சிறிதுசிறிதாக எண்ணங்களை தியாகம் செய். சிந்தனையைக் குறைத்துக் கொண்டே செல். ஒரு கட்டத்தில் உன் மனத்தில் எந்த எண்ணமும் இருக்காது. ஓர் எண்ணம் போய் இன்னொன்று வரும் நிலை இருக்காது. அந்த வெற்றிடத்தில் உன்னை நீயே காண்பாய்! அந்த வெற்றிடத்தை தியானம் என்கிறோம். அங்கிருந்துதான் உனக்கு இறையுணர்வின் சுவை அறிமுகமாகிறது.

கதவைத் திறக்கிறோம். சூரியன் கண்ணுக்குத் தெரிகிறது. சூரியன் இருப்பதோ வெகுதொலைவில். ஆனால் கதவைத் திறந்ததும் கண்ணுக்குத் தெரிகிறது. ஆகவே மனத்தில் அடைந்துகிடக்கும் எண்ணக் குவியலில் ஓர் எண்ணம் வெளியேறிவிட்டாலும் போதும். அங்கு வெற்றிடம் உண்டாகும். அந்த காலி இடத்தில் நீ உன்னைக் காண்பாய்.

புத்தி இயங்கும் வரையிலும், எண்ணங்களின் வலை பரவியிருக்கும் வரையிலும் நீ உலகத்துடன் கட்டப்பட்டிருக்கிறாய். ஆகவே மாயையால் சூழப்படுகிறாய். இந்நிலையில் தியானத்திற்கு வாய்ப்பில்லை.

புத்தத்துவ நிலையை அடைபவனிடம் ஒரு புரட்சி நிகழ்கிறது. அவனிடம் உறவுப் பற்றுகள் மிஞ்சியிருப்பதில்லை. அகங்காரம், ஆசைகளும் அவனைவிட்டு நீங்கிவிடுகின்றன. எண்ணங்களற்ற மனநிலையில் ஆசைகள் தோன்ற வாய்ப் பில்லை. எண்ணங்கள் இறந்தால் ஆசைகள் மறைந்து விடுகின்றன.

புத்தத்துவ நிலையில் 'இவன் என்னவன்-அவன் அந்நியன்' என்று வேறுபடுத்துவதும் நீங்குகிறது. எண்ணங்கள் மூலம்தான் மக்களுடன் தொடர்பு ஏற்படுகிறது. எண்ணங்களற்ற நிலையில் யாருடனும் உறவோ, பகையோ கிடையாது. எல்லா

எண்ணங்களின் மொத்தத் தொகுப்புதான் அகங்காரம். புத்தத்துவத்தில் நான் என்பது நீங்கினால் அகங்காரத்துக்கு அங்கே இடமில்லை.

இதற்காகத்தான் நான் தியானத்தை மிகவும் வலியுறுத்திக் கூறுகிறேன். தியானத்தின் மூலம் சிறிது சிறிதாக எண்ணங்களற்ற நிலைநோக்கிச் செல்ல முடிகிறது. உட்கார்ந்திருக்கிறாய், ஆனால் சிந்திக்கவில்லை. நடந்துசெல்கிறாய், எண்ணங்கள் சேர்ந்து வருவதில்லை. எண்ணம் அப்படியே தேங்கிவிட்டது. இந்தத் தேக்கத்தில்தான் நீ உனக்குள் அமிழ்வாய். சமாதிநிலையை அடைவாய்.

'முனிவர் போன்ற எவன் உள்ளே பெருகும் அழியா பிரவாகத்தை அனுபவபூர்வமாக உணர்கிறானோ, அவனுடைய எல்லாக் கவலைகளும் வருத்தங்களும் விலகிவிடுகின்றன. அவனுக்கு முறையான சாஸ்திர அறிவு தேவைப்படுவதில்லை'. **(சுலோகம் 250)**

மன ஓட்டம் மாறியபடியே இருக்கும். எந்த எண்ணமும் சில நிமிடங்களுக்கு மேல் நீடிப்பதில்லை. ஓர் எண்ணத்தை நீ அதிக நேரம் தடுத்து நிறுத்த முடியாது. எண்ணங்கள் வெறிபிடித்தவை போல் ஓடுகின்றன. அவை நின்றுபோவதோ, தங்குவதோ, நிலையாக நிற்பதோ இல்லை. ஆகவே எண்ண ஓட்டத்தை க்ஷயம் என்றும், எண்ணமற்ற நிலையை அட்சயம் (அக்ஷயம்) என்றும் கூறுகின்றனர்.

அட்சயம் (தேய்வின்மை) நிலையை அடைந்தால் நீ காலத்தைக் கடந்தவனாகிறாய், நிரந்தரமானவன் ஆகிறாய். எண்ணம் என்பது கால ஓட்டம்தான். ஆகவே ஞானிகள் தியானம் என்பது காலத்தைக் கடந்த நிலை என்கின்றனர். இதற்கு எதிரிடையாக உலகம் என்பது காலத்துக்குள் கட்டுப்பட்டுக் கிடக்கிறது. சத்தியம் காலத்தைக் கடந்து நிற்கிறது, ஆகவே அதை அடைய தியானமே வழி.

வாழ்க்கையின் எல்லாத் துன்பங்களும் நம் எண்ணங்களின் காரணமாக விளைகின்றன. ஒருவன் உன்னைத் திட்டினால் உடனே ஓர் எண்ண அலை எழும்பி 'நீ அவமானப்படுத்தப்பட்டு

விட்டாய்' எனத் தெரிவிக்கிறது. இதனால் உன் மனம் வருத்தத்தில் ஆழ்கிறது. அந்தத் திட்டு உன் மனத்தில் எண்ணங்களாலான ஒரு வலையைப் பின்னுகிறது.

நீ திட்டை அமைதியாகக் கேட்டுக்கொண்டால், உன் மனத்தில் எண்ண வலை பின்னப்படாவிடில் அந்தத் திட்டிலிருந்த காரம் நீங்கிவிடும். உனக்குத் தெரியாத மொழியில் திட்டினால் அப்போது நீ பாதிக்கப்படுவதில்லை. ஒருவன் புகழ்ந்தால் மகிழ்கிறாய். வேற்று மொழியில் புகழ்ந்தால் நீ கல்போல் இருப்பாய். ஆகவே புகழ்ச்சியிலோ, இகழ்ச்சியிலோ விஷயம் இல்லை. அப்போது எழுகின்ற எண்ண அலைகள்தாம் உன் மனநிலையைப் பாதிக்கின்றன.

ஞானி இன்பம்-துன்பம், கௌரவம்-அவமானம் ஆகிய எல்லா நிலைகளிலும் எண்ண எழுச்சியின்றி அமைதியாக இருக்கிறான். நடக்கின்றவற்றைப் பார்க்கிறான். ஆனால் பெரிய அளவில் அவற்றிற்கு மதிப்புத் தருவதில்லை. அவன் நடுநிலை வகிக்கிறான். ஆகவே அவன் வருத்தப்பட வேண்டிய நிலை உண்டாவதில்லை.

நாம் யோசித்து யோசித்துத்தான் நாமாக வருத்தத்தைப் படைக்கிறோம். அப்படி வருத்தப்படுவதற்காக நாம் பெரிதும் உழைக்கிறோம்! இருபது ஆண்டுகள் முன் ஒருவன் திட்டியதை நாம் இப்பொழுதும் பாதுகாத்துவைக்கிறோம். அதை வைரம்-ரத்தினம்போல் காக்கிறோம். உள்ளத்தின் ரணத்தை ஆறவிடுவதில்லை. அதை நினைத்தால் இப்போதுகூட உடல் பதறுகிறது; கைகள் துடிக்கின்றன. அந்த மனக்காயத்தை ஆறவிடாமல் அவ்வப்போது கிளறுகிறோம்.

மக்களுக்குத் துன்பத்தின்மீது பிடிப்பு உள்ளது. தாங்கள்தாம் அதிகம் துக்கப்படுகிறோம் என்று ஒவ்வொருவரும் பெருமையாகச் சொல்கிறோம். ஒருவன் தான் சந்தோஷமாகத்தான் இருப்பேன் என்று முடிவெடுத்தால் அவனை யாரும் தடுக்க முடியாது. நீ துன்பப்படுகிறாய் என்றால் நீ உன் காரணமாகத்தான் துன்பமடைந்தாய் உன்னை மற்றவர்கள் துன்பப்படும்படி செய்ய முடியாது.

நாம் வாழும் விதத்தின் அடிப்படையில் எங்கோ கோளாறு உள்ளது. நம்மை பலமாக இருட்டு சூழ்ந்திருக்கிறது. மனமும் இருட்டு. எண்ணங்களிலும் இருட்டு. புத்தியோ மட்டு. சிறிய திட்டுக்கூட நம்மை நிலைகுலைய வைக்கிறது. மிகப்பெரிய அறிவாளியும் எவராவது திட்டினால் நிதானம் இழக்கிறான்.

நமது புரிந்துகொள்ளும் ஆற்றல் ஒரு கணத்தில் மறையக்கூடியது. நம்முடைய கால்கள் பலகீனமானவை. நமது புத்தி மின்னலின் கால அளவே திடீரெனப் பளிச்சிட்டு மறைகிறது. நமது படகு காகிதத்தாலானது. எதிரே புயல் வீசும் கடல். நாம் காகிதப் படகால் கடலைக் கடக்க முடிவெடுக்கிறோம். மூழ்குவது நிச்சயம். வேறு வகையான படகை தயார்செய். காகிதம் தவிர வேறு எதையாவது உபயோகி. உன்னை அக்கரையில் சேர்ப்பிக்க வல்ல படகைத் தயார்செய்.

மனம் காகிதப் படகு போன்றது. அதற்குப் பதிலாக தியானம் என்னும் படகை உண்டாக்கு.

**முற்றம் முழுதும் பரவிய வெயிலில்**
**கைப்பிடி அளவு நிழலுக்கு என்ன மதிப்பு?**

எண்ணங்களால் உன்னிடம் உருவாகியுள்ள அறிவு அற்பமானதுதான். அதனால் உபயோகம் அதிகம் இல்லை. தேவைப்படும்போது காணாமல் போய்விடுகிறது. நீ ஓரிடத்தில் இருக்கிறாய். உன்னை எவனும் திட்டாதவரையிலும் சாந்தமாக இருக்கிறாய். ஒருவன் சிறிதளவு ஏசினாலும் மொத்த அமைதியையும் இழக்கிறாய். மீண்டும் அமைதியான பின் தான் எரிச்சல்படாமல் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்குமென நினைக்கிறாய்.

தேவைப்படும் சமயம் புத்தி வேலை செய்வதில்லை. சாஸ்திரங்கள் படித்து நீ பெரிய அறிவாளியாகிறாய். ஆனால் வாழ்க்கைப் போராட்டங்களின்போது சாஸ்திர அறிவு துணை புரிவதில்லை.

எண்ணங்களைக் கால்களாகக் கருதினால் அவை எல்லையற்ற கடவுளின் வாசல்வரை கொண்டு சேர்க்கும் அளவு

வலிமையுடையவை அல்ல. நமக்கு வேறு விதமான கால்கள் தேவை. வழிகாட்ட வேறு ஒளி தேவை. என்றும் அணையாத ஒளி தேவை. காலத்தை வெல்லும் ஒளி தேவை. அது மரணத்தாலும் வெல்ல முடியாததாக இருக்க வேண்டும்.

ஒருவன் திட்டினால் அமைதி நீங்கிவிடுகிறது. ஒருவன் பாராட்டினால் துள்ளிக் குதிக்கிறாய். கைக்குப் பணம் வந்தால் பூரிக்கிறாய். பணம் தொலைந்தால் புலம்புகிறாய். அற்ப விஷயங்களும் உன்னை ஆட்டிப்படைக்கின்றன. மிகவும் அதிர்ச்சியான சாவு வரும்போது எப்படிச் சமாளிப்பாய்? சாவு நெருங்குகையில் புத்தி வேலை செய்யாது. புத்தத்துவம்தான் உதவும்.

என்றும் அழியாத பொருளுடன் (கடவுளுடன்) தன்னை இணைத்துக் கொள்பவன் எதற்கும் வருத்தப்படும் தேவை எழாது. அவன் ஞானத்தை சாஸ்திரங்களில் தேடவேண்டியிராது. அக ஞானத்தின் கதவு அவனுக்குத் திறந்துவிட்டது. எங்கிருந்து சாஸ்திரங்கள் தோன்றினவோ அந்த மூல இடத்தை ஞானி ஏற்கெனவே அடைந்துவிட்டான். மூலத்தைப் பிடித்துக் கொண்டபின் கிளைகளைப் பற்றிக்கொள்ள வேண்டிய தேவையில்லை.

நம்பிக்கை என்பது போதாது. அதைவிட மேலானதான சிரத்தை என்பதுதான் தேவை. நம்பிக்கை என்பது சடங்கின் அடிப்படையிலானது. சிரத்தை அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டது. சிரத்தையை வளர்த்துக்கொள்ள தியானப் பயிற்சி தேவை. இப்படியே காலத்தை ஓட்டிவிடாதே. சாவு உன் வீட்டுக் கதவைத் தட்டுவதற்கு மிகவும் முன்பாகவே நீ தியானம் என்னும் படகில் சவாரி செய்ய ஆரம்பித்துவிட வேண்டும். அதன்பின் வரும் மரணம் சமாதிநிலைக்கு ஒப்பாகும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

> **சீனக் கதை ஒன்று. சுவர்க்கத்து உணவு விடுதியில் லாவோத்ஸு, கன்ஃபூஷியஸ், புத்தர் அமர்ந்திருக்கின்றனர். காலம் என்ற அழகி பாத்திரத்தில் சிறிதளவு வாழ்க்கை ரசம் கொண்டுவருகிறாள். புத்தர் வாழ்க்கை துன்பமயமானது என்று கூறி அதைப் பருக மறுத்தார். கன்ஃபூஷியஸ், "கிடைத்ததை ஏன் மறுக்க வேண்டும். சற்று ருசி பார்க்கிறேன்," என்பார். லாவோத்ஸு, "முழு பாத்திரத்தையும் நிரப்பி வந்தால் குடிக்கிறேன்," என்பார். இந்த சூழ்நிலையில் அஷ்டாவக்ரர் என்ன செய்திருப்பார்?**

அஷ்டாவக்ரர் ஜீவரசத்தை ஏற்பார்; அதைப் பருகுவார்; அது மட்டுமல்லாமல் காலசுந்தரியையும் விழுங்கிவிடுவார்! அவரது பார்வையில் இங்குள்ள எல்லாமே சேர்ந்து, இருப்பது ஒரு பொருள்தான். ஆகவே ஏற்றல்-மறுத்தல் என்னும் தெரிந்தெடுத்தல் பயன்படாது. விஷமும் அமிர்தமும் ஒன்றே! எல்லாப் பொருள்களும் பரம்பொருள்.

மற்ற ஞானிகள் எதையும் பிரித்துப் பகுப்பாய்வு செய்துள்ளனர். அஷ்டாவக்ரர் ஒருங்கிணைப்புக் கொள்கையை ஆதரித்தார். பதஞ்சலி முனிவர் யோகம்-தவம்-ஜபம்-சடங்கு என்றெல்லாம் அடுக்கிக்கொண்டே செல்கிறார். அஷ்டாவக்ரர் அவை கட்டாயமில்லை என்கிறார். வைராக்கியம் கூட (ராகம்-விராகம்-பற்று-பற்றின்மை) எதிர்மறை கோட்பாடுதான் என்பதால் அதையும் கடந்த 'வீதராகம்' என்பதை உச்சக்கட்டமாக அறிவிக்கிறார்.

காலத்தைதான் இக்கதைப்படி பானம் கொண்டுவரும் காலசுந்தரி என்கிறார்கள். கால தேவி ஜீவரசம் எடுத்துவருகிறாள். வாழ்க்கையின் ரசம் காலக்கோப்பையில் நிரம்பியுள்ளது. உலக வாழ்க்கையின் ரசம் காலக் கோப்பையில் உள்ளது.

அஷ்டாவக்ரர் தயக்கமின்றி இந்த ரசத்தைப் பருகுவார். ஏனெனில் அவர் காலத்தைக் கடந்தவனை (கடவுளை) அறிந்து கொண்டவர். தியானத்தின் போதும் காலத்தைக் குடித்துவிடும் செயலே நிகழ்கிறது. தியானத்தை ஜைனர்கள், பௌத்தர்கள், இந்துக்கள், கிறிஸ்தவர்கள் என்று யார் விளக்கினாலும் சரி, காலத்தைக் கடந்து செல்லுதல் என்பது அதன் அடிப்படையான நோக்கமாகும்.

இயேசுநாதரின் கடைசிக் காலத்தில், எதிரிகள் அவரைப் பிடித்துச்செல்லும் சமயம், ஒரு சீடர், "ஐயா! தாங்கள் அடிக்கடி கடவுளின் பேரரசு பற்றி கூறியுள்ளீர்கள். நாங்கள் அதன் எல்லைக்குள் வந்துவிட்டோம் என்பதை எப்படித் தெரிந்து கொள்வது?" என்று கேட்டார். அதற்கு இயேசுநாதர், "அங்கே காலம் என்பது இருக்காது. (There shall be time no longer). காலம் என்று ஒன்று இருப்பதே தெரியாத சூழ்நிலைக்கு வந்துவிட்டால் நீ கடவுளின் பேரரசுக்குள் பிரவேசித்துவிட்டதாக நம்பலாம்," என்றார்.

காலம் என்னும் கூறு இல்லாத நிலையே அகாலம். ஆகவே சீக்கியர்களின் மந்திர முழக்கமாக 'ஸத் ஸ்ரீ அகால்' என்பது விளங்குகிறது. இதன் பொருள் 'காலம் எங்கு இறந்ததோ அங்குதான் சத்தியம் வீற்றிருக்கிறது' என்பதாகும். தியானத்தின் சூத்திரமும், சமாதியின் சூத்திரமும்கூட இதுவேதான். சீக்கியர் களின் இந்த முழக்கத்தைப் போர் அல்லது போராட்டத்தைத் தூண்டும் முழக்கமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. இது அரசியல் கோஷமில்லை. இது சீக்கிய மதத்தின் அடிப்படை தத்துவம். இப்படி யோசித்துதான் குரு நானக் இதை சீக்கியர்களின் மந்திரமாகப் படைத்திருப்பார்.

ஆகவே காலத்தைக் குடித்துவிடு!

## இரண்டாம் கேள்வி

**ஒவ்வொருவனும் அன்பிற்காக ஏங்குகிறான். பாதுகாப்புத் தேடுகிறான். இந்த இரண்டும் கானல்நீராக உள்ளன. நீங்கள் 'கடவுளிடம் உன்னை ஒப்படைத்துவிடு' என்கிறீர்கள். அது தெளிவற்ற நிலையாயிற்றே. அதில் பாதுகாப்புக்கான வாய்ப்பும் குறைவாகத் தெரிகிறதே. அன்பையும் பாதுகாப்பையும் எப்படிப் பெறுவது?**

பாதுகாப்பிற்காக மனிதன் பணம் சம்பாதிக்கிறான். அன்பிற்காக உறவுகளை உருவாக்குகிறான். பாதுகாப்பிற்காகச் சுவர் எழுப்புகிறான்; வீடு கட்டுகிறான்; கோட்டையை நிர்மாணிக் கிறான். தனியாகப் பணப்பெட்டி (பொக்கிஷம்) அமைக்கிறான். அன்பை சம்பாதிப்பதற்காக கணவன், மனைவி, பிள்ளைகள், உறவினர்கள், நண்பர்கள் என்றெல்லாம் உறவுகளை உண்டாக்கு கிறான்.

பாதுகாப்பிற்காகவும் அன்பிற்காகவும்தான் உலகம் என்னும் இந்த அமைப்பே ஏற்பட்டுள்ளது. ஆனால் எவ்வளவு சம்பாதித் தாலும் பாதுகாப்பு உணர்வு தோன்றுவதில்லை. ஆதிகால மனித னுக்குத் தன்னை மட்டும் காத்துக்கொண்டால் போதுமானதாக இருந்தது. இக்கால மனிதனுக்கோ எண்ணற்ற பொருட்களைப் பாதுகாக்க வேண்டியுள்ளது. பொக்கிஷத்தைப் பாதுகாத்தபடி படமெடுக்கும் பாம்பு இருக்கும் என்று நாம் கதைகளில் படிக்கிறோம். அந்தப் பாம்பு நாம்தான்! சிலர் இறந்தபின் விரும்பியே பாம்புப் பிறவி எடுத்து, தாங்கள் விட்டுச்சென்ற பணப்பெட்டியைக் காக்க வருவார்கள்.

நாம் பணத்தின் எஜமானர்களல்லர். எஜமானன் பணத்தை யாருக்கும் எடுத்துத் தரும் சுதந்திரம் பெற்றிருப்பான். நாம் நம் செல்வத்திற்குக் காவல்காரர்களாக மட்டும் உள்ளோம். இந்த நிலையில் நாமும் அனுபவிப்பதில்லை; பிறருக்கும் கொடுக்க முடிவதில்லை

நாம் எதைத் தருகிறோமோ அதுவே மிஞ்சும். ஆனால் பணத்தில் பாதுகாப்புத் தேடுபவன் அதை எப்படிக் கொடுப்பான்? மேலும் அந்தப் பணத்தையும் அல்லவா பாதுகாக்க வேண்டும்?

அன்பைப் பெறும் முயற்சியில் நீ எத்தனையோ தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்கிறாய். ஆனால் அன்பு கிடைத்ததா? ஒருவரை அல்லது ஒருத்தியின் அன்பைப் பெற சிரமப்படுகிறோம். அவரது அன்பு கிடைத்தபின் மனம் திருப்தியுறாமல் வேறொருவரை நாடுகிறது. யாருடைய அன்பும் நமது எதிர்பார்ப்பின்படி பூரணமாக அமைவதில்லை. ஆகவே அன்பைக் கானல்நீர் என்கிறோம்.

நீ எதைப் பாதுகாத்து வருகிறாய்? அது மிஞ்சப் போவதில்லை. உடலைக் காப்பாற்றுகிறாயா? அது ஒருநாள் அழிந்துதான் போகும். பணத்தைப் பாதுகாக்கிறாயா? அது ஒருநாள் காணாமல் போகும். வீட்டைப் பாதுகாக்கிறாயா? அது உனக்கு முன்னாலுமிருந்தது. பின்னாலும் இருக்கப்போகிறது. நீதான் காணாமல் போவாய். மரணம் என்னும் ஒன்று இருக்கும்வரையிலும் பாதுகாப்பு என்ற பேச்சுக்கு இடமில்லை.

பாதுகாப்பு என்பது வாழ்க்கையின் சுபாவமன்று. பாதுகாப்பின்மைதான் வாழ்க்கையின் இயற்கை. நீ எதையும் பாதுகாக்க முயலுவது தவறன்று. ஆனால் அது உன்னிடம் நிரந்தரமாக நீடிக்காது என்பதை நினைவில் வைத்தால் போதும். பற்றின்றி அவற்றைப் பயன்படுத்தலாம்.

உன்னால் குழந்தைப் பருவம் நீங்குவதைத் தடுக்க முடிந்ததா? இளமை விடை பெறுவதைத் தடுக்க முடிந்ததா? வயோதிகமாவது நீடிக்க முடிந்ததா? இல்லையே. இவையனைத்தையும் பிரதிபலித்த தேகமும் நீங்கி விடுகிறதே.* உன்னிடம் இருந்ததெல்லாம் உன்னைவிட்டுச் செல்கிறது. இங்கே உனது என்று எதுவும் நிற்காது. நதியின் நீர்போல் ஓடியபடியே இருக்கிறது. கையால் நீருக்கு அணைகட்ட முடியாது என்பதை நீ உணர்ந்தால், நீ வருத்தப்படவேண்டியிருக்காது.

---

* இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா *(மணிமேகலை)*

புத்தரிடம் கௌதமி என்ற பெண்மணி பதறியபடி வந்து இறந்த தன் மகனை உயிர்ப்பிக்க வேண்டினாள். புத்தர் அவளை யார் வீட்டிலிருந்தாவது கொஞ்சம் அரிசி வாங்கிவரச் சொன்னார். ஒரு நிபந்தனை. அரிசி தரும் அந்த வீட்டில் இதுவரை யாரும் இறந்திருக்கக் கூடாது!

வீடு வீடாக விசாரித்த கௌதமி ஒவ்வொரு குடும்பத்திலும் பலர் இறந்திருக்கின்றனர் என்பதை தெரிந்துகொண்டாள். தானும் சாவிலிருந்து விதிவிலக்கு பெற்றிருக்கவில்லை என்பது புரிந்தது. அவள் சாந்தமான மனநிலையுடன் புத்தரிடம் திரும்பினாள்.

இக்காட்சியைப் பார்த்த பிட்சுக்கள் அவளது முகத்தில் நிலவிய அமைதியைப் பார்த்து அவள் யாரும் இறக்காத குடும்பத்திலிருந்து அரிசி கொண்டு வருவதாக நினைத்தனர். அடுத்து, புத்தர் இறந்தவனை எழுப்பப்போகும் அதிசயத்தைக் காணக் காத்திருந்தனர். புத்தர் அவர்களிடம், "நீங்கள் நினைப்பது தவறு. அவளுக்கு அரிசியைவிட மிகவும் அரிதான பொருள் கிடைத்திருக்கிறது. அவள் வாழ்க்கையின் அர்த்தம் தெரிந்து கொண்டாள். அவளுக்குள் ஞான கிரணம் இறங்கியுள்ளது. இதனால் அவளது அறியாமை இருள் நீங்கியிருக்கிறது," என்று விளக்கினார்.

அதன்படியே கௌதமி புத்தரை அடைந்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்தாள். தனக்கு தீட்சை அளிக்குமாறு வேண்டினாள். பிறகு அவள் கிராமத்தினரிடம், "என் மகனின் உடலை எடுத்துச் சென்று தகனம் செய்துவிடுங்கள். மரணம் எல்லோருக்கும் நிச்சயம் என்பதால் அதனுடன் மோதுவது தேவையற்றது. மரணத்தைப் புரிந்துகொண்டு நான் தீட்சை பெற்றுவிட்டதால், இனி என் உடலுக்குத்தான் மரணம். எனக்கு மரணமில்லை," என்று கூறினாள்.

பிறந்தவன் இறப்பான். இளைஞன் கிழவனாவான். இப்போது திமிராக இருப்பவன் பின்னால் உடைந்துபோவான். ஆகாயத்தைத் தொடுவதுபோல் எழும்புபவன் கல்லறையில் வந்து விழுவான். இதையெல்லாம் மாற்ற முடியாது.

இதை ஏற்றுக்கொண்டுவிட்டால் பாதுகாப்பின்மை பற்றி கேள்வி எழாது. பணத்தாசை இல்லாதவன் ஏழையாக முடியாது. அவன் அரசனைப்போலப் பெருமிதத்துடன் இருப்பான். இதையே சுவாமி ராம் 'நான் ஒரு வீட்டைத் துறந்தேன். எல்லா வீடுகளும் எனக்குச் சொந்தமாயின. ஒரு முற்றத்தைத் துறந்தேன். ஆகாயம் முழுவதும் எனக்கு முற்றமாக ஆனது. என்னிடம் ஏதாவது இருந்தவரையிலும் நான் தரித்திரனைப்போல உணர்ந்தேன். எல்லாவற்றையும் துறந்துவிட்ட நிலையில் நான் ராஜாதிராஜன் போல் உணர்கிறேன்' என்று கூறினார்.

யாரிடம் ஏதாவது இருக்கிறதோ அவன் தரித்திரனாகத் தன்னை நினைக்கிறான். ஏனெனில் இன்னொருவனிடம் அதிகம் இருப்பதைக் காண்கிறான். இப்படிப் பார்க்கும்போது அரசர்கூட ஏழைதான். கூடுதலாக எதுவும் வேண்டாம் என்று பிச்சைக்கார மனப்பான்மை நீங்கியவனே உண்மையான செல்வந்தன்.

நேரில் காண முடியாத, தொடர்புகொள்ள முடியாத கடவுளிடம் நம்மை ஒப்படைத்தால், முன்பைவிடப் பாதுகாப்பற்ற நிலைக்கு அல்லவா தள்ளப்படுவோம் என்று நீ (சீடர்) கேட்டாய்.

நீ அவ்வாறு அவரிடம் உன்னை ஒப்படைத்து, பரீட்சித்துப் பார்க்காமலேயே இந்தக் கேள்வியைக் கேட்கிறாய். நான் கடவுளிடம் என்னை ஒப்படைத்தபின் பாதுகாப்பற்ற தன்மை என்னும் நிலையே எனக்கு உண்டானதில்லை. இதை நான் சாஸ்திரங்களின் அடிப்படையில் கூறவில்லை; என் அனுபவத்தின் அடிப்படையில் கூறுகிறேன். நீ பேசுவது தர்க்கத்தின் அடிப் படையில் என்பதால்தான் கடவுளிடம் உன்னை ஒப்படைப்பது என்பது உனக்குப் புரியவில்லை.

அன்பை எப்படிப் பெறுவது? அன்பைப் பெறுவதற்காகப் போகாதே; தருவதற்காகப் போ. அன்பு என்பது தனியாக வெளியே கிடக்கும் பொருளன்று. அதைக் கைப்பற்றி உன் வசமாக்கிக் கொள்ள முடியாது. அன்பு என்பது விசேஷமான, ஆரோக்கிய மான மனநிலை. மற்றவர்களிடமிருந்த அன்பை எதிர்பார்ப்பதைத் தவிர்த்து, அது உன் சுபாவமாக அமைய வேண்டும். அன்பு

உனக்குள் வசிக்கும் தேவதை. அதை வெளியே எங்கே தேடுகிறாய்?

நீ வெளியே அன்பைத் தேடுவதால் உள்ளே அன்பில்லை என்று அர்த்தமாகிறது. அதேபோல் உன்னிடம் அன்பு காட்டுவதாகத் தெரிபவரும் உள்ளே அன்பில்லாமல் வெளியே தேடுபவராக இருப்பார். இரண்டு பிச்சைக்காரர்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் யாசகம் பெறுவதுபோல்தான் உலகில் அன்பு பரிவர்த்தனை நடக்கிறது.

உள்ளே அன்பின் ஊற்று சுரக்காமல், வெளியிலிருந்து, மற்றவரிடமிருந்து யாசித்துப் பெறுவதால், காலப்போக்கில், காதலன்-காதலி அல்லது கணவன்-மனைவி பரஸ்பரம் சண்டை போடுகிறார்கள். அன்பின் பெயரைச் சொல்லி ஒருவரையொருவர் ஏமாற்றிவிட்டதாக நினைக்கிறார்கள். இதுவரையிலான போலி அன்பும் வெறுப்பாக மாறுகிறது. கோபமாக வெடிக்கிறது. புதிய வேதனைகள், புதிய ரணங்கள் உண்டாகின்றன.

### மூன்றாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! ஓர் ஆகாயத்திலிருந்து இன்னொன்றிற்குப் பறப்பதை தந்திரம் என்று ஒருமுறை சொன்னீர்கள் இதுதான் தந்திரத்தின் அடிப்படையா? இதற்கும் வாழ்க்கைக்கும் என்ன சம்பந்தம்? இதில் வாழ்க்கை எப்படி முழுமையாக சுவீகரிக்கப்படுகிறது?**

அழியாததிலிருந்து அழிதலுக்கான பயணம் இயந்திரம். அழிதலிலிருந்து அழியாமைக்குப் பயணம் மந்திரம். அழியாமையிலிருந்து அழியாமைக்குப் பயணம் தந்திரம்.

உடல் ஓர் இயந்திரம். இரு உடல்களின் தொடர்பு இயந்திர ரீதியானது. ஆகவே காமம் இயந்திர உணர்வாகிறது.

மனம்தான் மந்திரம். மனம் என்னும் சொல்லிலிருந்துதான் மந்திரம் தோன்றியது. மனத்துடன் சம்பந்தப்பட்டது மந்திரம். எதன் உதவியால் மனத்துக்குள் இறங்குகிறோமோ அது மந்திரம்.

மனத்தின் அடிப்படையே மந்திரம். மனம், மந்திரம் இரண்டும் ஒரே வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியவை.

உடல் என்பது இயந்திரம். உடலிலிருந்து உடலுக்கு யாத்திரை யந்திரமயமானது. அதுவே காம உணர்ச்சி.

மனம் என்பது மந்திரம். மனத்தின் பயணம் மாந்திரீகம். அது இன்னொரு மனத்திற்குச் சேர்ப்பிக்கிறது. அன்பு என்பது உடல்களைக் கடந்தது. அது மனத்தத்துவ அடிப்படையிலானது.

ஆத்மா என்பது தந்திரம். அது இரண்டு ஆகாயங்களின் சந்திப்பு. ஆங்கே உடலுக்கும் மனத்துக்கும் வேலையில்லை. தந்திரம் உச்சக்கட்ட ஆன்மிக நிலையாகும்.

இயந்திரம், மந்திரம், தந்திரம் இவை வாழ்க்கையின் மூன்று தளங்கள். நம்முடைய ஒவ்வொரு வேலையையும் மூன்றில் ஒருவிதமாகச் செய்யலாம்.

ஒருவன் இயந்திரம்போல் சாப்பிடுகிறான். அவன் ருசியைக் கவனிக்கவில்லை. கடைக்கணக்குகள், வாடிக்கைக்காரர்கள், அலுவலக வேலைகள் என்று எவற்றைப் பற்றியெல்லாமோ யோசித்தபடி சோற்றுருண்டைகளைத் தொண்டைக்குழிக்குள் தள்ளுகிறான். அவன் சாப்பிடும் சமயமும் வேறெங்கோ இருப்பது போல் தோன்றுகிறது. இது இயந்திரத்தனமாகச் சாப்பிடுதலாகும்.

மன ஈடுபாட்டுடன் சாப்பிடுதல் அதைவிட உயர்ந்த வகையான செயல். மனத்தில் எண்ணங்கள் எழவிடாமல் தடுத்து, லயிப்புடன் ருசிபார்த்து, உணவுக்கு மரியாதை கொடுப்பதுபோல் சாப்பிடுதல் மாந்திரீகமாகச் சாப்பிடுதலாகும்.

ஆன்மிகச் சாப்பிடும் முறையும் உண்டு! உபநிடதங்கள் 'அன்னம் பிரம்மம்' என்கின்றன. முற்கால முனிவர்கள் உணவை ஆன்மிகக் கண்ணோட்டத்துடன் உண்டனர். இதை தாந்திரிக முறையில் உண்டனர் என்று நாம் கூறலாம். உணவு கடவுள். அவரைத்தான் நாம் ஜீரணிக்கிறோம். உணவில் அவரது ருசியைத்தான் அனுபவிக்கிறோம். அவர்தான் நமக்குள்ளே சென்று உடலியக்கத்தைத் தூண்டுகிறார்; புதிய பிராணரசத்தை

நிரப்புகிறார்; இறக்கும் செல்களுக்குப் பதிலாகப் புதிய செல்களை நிர்மாணிக்கிறார். இவ்வாறு தாந்திரிகமாக உண்ணும்போது கடவுள் நமக்குள்ளே பிரவேசிக்கிறார்.

இப்படி ஒவ்வொரு நிகழ்ச்சியையும் மூன்று தளங்களில் பார்க்கலாம். ஒருவன் உலாவச் செல்கிறான். மனத்தில் ஏராளமான எண்ணங்களால் சுற்றுப்புறத்தைக் கவனிக்காமல் நடக்கிறான் அல்லது கால் தானாக நடக்கிறது. இது யாந்திரீகம், இயந்திர நிலை. உலாவச் செல்லும் இன்னொருவன் மனத்தில் எண்ணங்களில் சிக்கிக்கொள்ளவில்லை. காற்றின் குளிர்ச்சி, உதய சூரியனின் இதமான சூடு, பறவைகளின் ஒலி போன்றவற்றில் கவனம் செலுத்தித் தன்னை மறக்கிறான். இது மாந்திரீக நிலை. மூன்றாவதாக உலவுகின்ற ஒருவன் காற்று வீசும்போது கடவுள் தன்னைத் தொடுவதாகவும், ஒவ்வோர் ஒளிக்கிரணமும் கடவுளுடைய கிரணம் போலவும் அவனுக்குத் தோன்றுகிறது. பறவைகள் எழுப்பும் ஒலி அவனுக்கு வேதகோஷம்போல் ஒலிக்கிறது.

இந்தத் தளங்களில் இயந்திரத் தளத்திலேயே உன் வாழ்வை முடித்துக்கொள்ளாதே. பெரும்பான்மையோர் இயந்திர வாழ்க்கையே நடத்தி, இயந்திரம் ஒரு சமயம் நின்றுவிடுவதைப் போல் இறந்துபோகிறார்கள். சில அதிர்ஷ்டசாலிகள் மாந்திரீகத் தளத்தைச் சேர்ந்தவர்களாயுள்ளனர். கவிஞர்கள், இசைக் கலைஞர்கள், நடனக் கலைஞர் இத்தளத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால் நாள் முழுதும் மாந்திரீகத் தளத்தில் நீடிக்க முடியாது. கவிதை, ஓவியம் முதலியவற்றிற்கான கற்பனை பொங்கும்போது மாந்திரீக நிலையில் காணப்படும் இவர்கள், வாழ்க்கையின் மற்ற கடமைகளுக்காக இயந்திர வாழ்க்கைக்கு இறங்கிவிடுவார்கள். ஆகவே ஏதோ ஒரு நாள், அதிலும் ஏதோ ஒரு சமயம், அதிலும் சிறிது நேரம் இவர்களால் மந்திர வாழ்க்கையைத் தாக்குப்பிடிக்க முடிகிறது.

கோடிக்கணக்கான மக்களின் கூட்டத்தில் கிருஷ்ணர், புத்தர், அஷ்டாவக்ரர் போன்ற அதிசயப் பிறவிகளும் தோன்றியுள்ளனர். இவர்கள் தந்திர முறைப்படி வாழ்கின்றவர்கள். இத்தகையோர்

உறங்கினாலும், விழித்தாலும், உட்கார்ந்தாலும், எழுந்தாலும், எது செய்தாலும் அதில் ஒருங்கிணைப்பு காணப்படுகிறது. அச்செயல் களில் அகமும் புறமும், கடவுளும் இயற்கையும், உலகமும் நிர்வாணமும் இணைந்துவிடுகின்றன.

ஆகவே நீ உனது ஒவ்வொரு வேலையையும் இயந்திர கதியிலிருந்து தாந்திரீக நிலைக்கு உயர்த்திக்கொள்ள வேண்டும். மந்திர நிலையை மற்ற இரு நிலைகளுக்கும் இடையிலான கனவு எனலாம். மந்திர நிலை ஒரு பாலம் போன்றது. வெறுமனே 'ராம்-ராம்' என்று ஜெபிப்பது மந்திரத்தின் குறுகிய அர்த்தமாகும். அதை ஜெபிக்கும்போது உதடுகளை அசைப்பதுடன் நின்றுவிடாமல் மனத்தால் நாம் ராமமயமாகிவிட வேண்டும்.

இயந்திரம்போல் 'ராம்-ராம்' என்று முணுமுணுத்தால் பலனில்லை. கிளிக்குச் சொல்லிக் கொடுத்தால்கூட அது 'ராம்-ராம்' என்று சொல்லும் ராம நாமம் அச்சிடப்பட்ட சால்வையைப் போர்த்தியபடி இப்படித்தான் பலர் ஜெபத்தில் ஈடுபடுகின்றனர். அதே நேரத்தில் மனத்திற்குள்ளேயோ ராமன் நினைவே இல்லாமல் உலக எண்ணங்கள் கொந்தளிக்கின்றன. உடலால் பூஜை அறையில் உட்கார்ந்திருந்தாலும் அவர்கள் மனத்தால் தாங்கள் தொழில் புரியும் கடை அல்லது அலுவலகத்திலேயே நீடிக்கின்றனர்.

**சி**றுவயதில் என் வீட்டின் எதிரில் ஒரு பட்சணக் கடை இருந்தது. மற்ற இனிப்பகக் கடைக்காரர்களைப் போலவே இதன் முதலாளிக்கும் பெரிய தொந்தி. எழுந்து உட்காருவது சிரமம். ஆகவே ஒரே இடத்திலேயே உட்கார்ந்து இனிப்புகளை எடைபோட்டுத் தருவார். வாங்குபவர் யாரும் இல்லாத நேரத்தில் ஜெபமாலையை உருட்டியபடி 'ராம்-ராம்' என்று சொல்லுவார்.

நான் திகைப்புடன் அவரின் நடவடிக்கைகளைப் பார்ப்பேன். சில சமயம் ராம நாம ஜெபத்தை நிறுத்தாமல், வாடிக்கை யாளருக்கு விரல்கள் மூலமாக விலை தெரிவிப்பார். இனிப்பு தயாரிப்பவருக்கு 'நெருப்பைக் குறை அல்லது அதிகப்படுத்து' என்று விரலால் அடையாளம் காட்டுவார். வாய் 'ராம்-ராம்' என்று

சொல்லியபடி இருக்கும். இத்தகைய இயந்திர ரீதியிலான நாம ஜெபத்தால் பலன் எப்படிக் கிடைக்கும்?

ராமன் பெயரை மட்டுமல்ல, எந்த தெய்வத்தின் பெயரை வேண்டுமானாலும் சொல்லு. ஆனால் மனபூர்வமாகச் சொல்லு. இயந்திர நிலையிலிருந்து உனது வழிபாடு மந்திர நிலைக்கு உயரும்.

ஆனால் இதுவே கடைசி நிலையன்று. மனம் ஆளுமையின் இறுதியான அம்சம் இல்லையென்னும்போது மந்திரம் கடைசி நிலையாக இருக்க முடியாது. தந்திரம் என்னும் இறுதி நிலை, உச்சக் கட்டம் மிஞ்சியுள்ளது. அந்நிலையில் நீ முழுவதுமாக இறை உணர்வில் மூழ்கிவிடுகிறாய். பிறகு உன்னைத் தனியாகப் பிரித்துப் பார்க்க முடியாது.

மதங்கள் மந்திர நிலைவரை மறுப்போ, எதிர்ப்போ தெரிவிப்பதில்லை. தந்திர நிலை பற்றி பேச்செடுத்தால்தான் பிரச்சினை வருகிறது. ஏனெனில் தந்திரத்தின் வெளிப்பாடு அபூர்வமானது.

மன்சூர் என்ற சூஃபி துறவி தந்திர நிலையை அடைந்த போது 'நானே கடவுள், நானே சத்தியம்' என்று அறிவித்தார். அவருடைய குரு பயந்துபோய், "நீ வம்பில் மாட்டிக் கொள்வாய். என்னையும் பிரச்சினையில் தள்ளுகிறாய். இப்படி அறிவிப்பதை நிறுத்து. அல்லது என்னைவிட்டு நீங்கிவிடு," என்று மிரட்டினார்.

அதற்கு மன்சூர், "பேசுபவன் நானாக இருந்தாலல்லவா நிறுத்திக் கொள்ள முடியும்? எனக்குள்ளிருந்து பேசுபவனுக்குத் தான் நிறுத்த வேண்டியது பற்றி தெரியும். மந்திரம் (ஜெபம்) சொல்லிக் கொண்டே செல்கையில் ஒரு கட்டத்தில் நானே இல்லாமல் போய்விடுகிறேன். பிறகு உள்ளேயிருந்து பேசுகின்ற வனுக்கு நான் எப்படிப் பொறுப்பேற்க முடியும்?" என்று கூறிவிட்டார்.

குரு உடனே, "நீ இங்கிருந்து போய்விடு. இல்லாவிடில் நானும் மாட்டிக்கொள்வேன்," என்று கூறி மன்சூரை விரட்டி விட்டார். மன்சூர் வேறொரு குருவிடம் சீடராகச் சேர்ந்தார்.

அவரும் சில நாள் கழித்து, "உன்னைப் பற்றி அரசருக்குத் தகவல் கிடைத்துள்ளது. ராஜகுரு உனக்கெதிராக ஆணை பிறப்பிக்க வுள்ளார். நீ இடத்தை காலி செய். இல்லாவிடில் எனக்கும் தண்டனை கிடைக்கும்," என்று விரட்டிவிட்டார்.

மன்சூர் மூன்றாவதாகப் போன குரு விஷயம் தெரிந்தவர். அவர் மன்சூரிடம், "நீ கடவுள், நீ சத்தியம் என்றால் அதை உனக்குள்ளேயே வைத்துக்கொள்ளேன். வெளியே அறிவிக்க வேண்டிய அவசியம் என்ன? நம்மைச் சுற்றிலும் மதவெறி பிடித்தவர்கள் உள்ளனர். வழக்கமான நம்பிக்கையிலிருந்து சிறிது நழுவினாலும் அவர்கள் உன்னைச் சும்மா விடமாட்டார்கள்," என எச்சரித்தார்.

அதற்கு மன்சூர், "நான் அவ்வாறு அறிவிப்பது என்னை அறியாமலே நிகழ்கிறது. எவரோ உள்ளேயிருந்து அவ்வாறு பேசுகிறார்கள். மேலும், நான் அறிவிப்பதன் காரணம் நாம் ஒவ்வொருவரும் கடவுள்தான், சத்தியம்தான். இந்த உண்மையை வெளியே சொல்ல ஏன் பயப்பட வேண்டும்," என்று கேட்டார்.

மத புரோகிதர்கள் அரசரிடம் புகார் செய்தனர். குருவின் கையெழுத்தின்றி சீடருக்குத் தண்டனை தரக்கூடாது என்று ஒரு வழக்கம் நிலவியது. அரசர் மன்சூரின் குருவிற்கு ஆறு முறை தகவல் அனுப்பி தண்டனைக்கான அனுமதிக் கையெழுத்து கேட்டார். இந்த இடைவெளியைப் பயன்படுத்தி குரு மன்சூரிக்கு அறிவுரை சொல்லிப்பார்த்தார். ஆனால் மன்சூர் 'நான் கடவுள்' என்ற கண்ணோட்டத்திலிருந்து பின்வாங்கவில்லை. ஏழாம் முறையாக அரசர் குருவுக்கு அனுப்பிய கடிதத்தில் தண்டனைக்கு அனுமதித்துக் கையெழுத்திடாவிடில் குரு தூக்கிலிடப்படுவார் என்று தெரிவிக்கப்பட்டது. குரு வேறு வழியின்றிக் கையெழுத்திட நேர்ந்தது.

தாந்திரீகக் குரல் என்பது கடவுள் உனக்குள்ளே இருந்து பேசுவதாகும். இது மனத்தின் குரலைக் கடந்து கேட்கும் கடவுளின் வாணி. இதற்கு உடலால் பேச்சு தொடக்க நிலையாக உள்ளது. அர்த்தமற்ற பேச்சு, பொழுதுபோக்கு பேச்சு, அமைதியான சூழ்நிலைக்கான பேச்சு, உடல் தேவைகளுக்கான பேச்சு

ஆகியவை சொற்கள் மூலம் வெளிப்படுகின்றன. பிறகு அவை வடிகட்டப்பட்டு மனத்தின் பேச்சாக அமைகின்றன. இவை பண்பட்டு தாந்திரீகப் பேச்சுநிலை உண்டாகிறது.

மந்திரத்தை நீ ஒலிக்கிறாய். இதன் மூலம் தந்திர நிலைக்கு நீ தயாராகிறாய். மந்திரம் விழிப்புடன் கூடிய முயற்சி. நான் மந்திரங்களுக்கு (ஜெபத்திறகு) எதிரி அல்லன். இயந்திரத்தனமாக ஜெபிப்பதைத்தான் எதிர்க்கிறேன். எத்தனையோ சிந்தனை களுடன் ஜெபிப்பதைவிட, விழிப்புடன், சுயநினைவுடன், உன் குரலை நீயே கேட்டபடி ஜெபித்தால இயந்திர நிலையிலிருந்து மந்திர நிலைக்கு வந்துவிடுகிறாய்.

ஒரு கட்டத்தில் உன் விழிப்பு நீடிக்கும். குரல் மட்டும் பலவீனமடைந்து ஒலியெழும்புவது நின்றுவிடும். பிறகு உனக்குள் புதிய ஒலி கேட்கத் தொடங்கும். அதுவே கடவுளின் குரல். அதன் மூலம் அரிய உண்மைகளை நீ வெளிப்படுத்தும்போது சாதகமான சூழ்நிலையில் உலகை உன்னை அவதாரமெனக் கொண்டாடும். பாதகமான சூழ்நிலையானால் உன் உயிருக்கு ஆபத்து விளையும்! உன் உயிருக்கு ஆபத்து விளையும்! உன் குரலைக் கடவுளின் குரலென உலகம் நம்பாது.

இயந்திர நிலையில் உடல் மட்டுமே அடங்கியுள்ளது. மந்திர நிலையில் மனத்துடன் தேகமும் சேர்ந்துள்ளது. ஏனெனில் மந்திரத்தை உன் உடல் (வாய்) மூலமாகத்தானே பேசுவாய். சிறியதில் பெரியது அடங்காது. ஆனால் பெரியதில் சிறியது அடங்க முடியும். அதன்படி மனம் உடலைவிடப் பெரியதாகை யால், உடல் மனத்தின் இயக்கத்தில் ஓரளவாவது கலந்துள்ளது. மனம் சேர்வதால் உடல் கசடு நீங்கிப் பொலிவடைகிறது. காரணம், அதன் இயந்திரத் தன்மை குறைந்துபோவதுதான். கட்டையாகக் கிடக்கும் உடல் மனம் சேர்ந்ததும் இயக்கம் பெறுகிறது.

தாந்திரீக நிலையில் ஆத்மாவுடன் ஆத்மாவின் இணைப்பு என்னும்போது நீ வெறும் ஆத்மா மட்டுமே என்று அர்த்தமில்லை. பிறகு நீ பூதபிரேதம் என்றல்லவா கருதப்படுவாய். ஆத்மா என்றால் அதில் மனமும் அடக்கம்; ஆத்மா உறையும் உடலும்

அடங்கியுள்ளது என்பதை நினைவில் வைக்க வேண்டும். இவ்வாறு திரிவேணி (முப்பின்னல்) பூர்த்தி பெறுகிறது.

திரிவேணி (பிரயாகை) தலத்தில் கங்கை, யமுனையுடன் கண்ணுக்குத் தெரியாத சரஸ்வதியும் கலக்கிறது. மனம்தான் கங்கை-யமுனை. அங்கு சரஸ்வதி தென்படவில்லை. நீ ஆத்மாவை உணரும்போது, தந்திர நிலையை அடையும்போது சரஸ்வதியும் வெளிப்படும்.

ஆகவேதான் தந்திரத்தில் எல்லாம் கலந்துள்ளன என்று சொல்கிறேன். அதில் எல்லாம் சுவீகரிக்கப்படுகின்றன. மந்திரநிலை உடலைத் தூய்மையாக்குவதுபோல் தந்திரநிலை மனத்தை சுத்தப்படுத்துகிறது. இந்த நிலையை அடைந்தவன் பரம நிர்மலமாக, குறைகளே இல்லாதவனாக விளங்குகிறான்.

## நான்காம் கேள்வி

**ஓஷோ அவர்களே! கடவுள் என்பவர் யார்? அவர் உண்டெனில் எங்கேயிருக்கிறார்? அவர் இல்லையெனில் நாம் எவரின் பின்னால் ஓடியபடி இருக்கிறோம்?**

கடவுள் என்பவர் பொருளோ, நபரோ இல்லை. அவரை விரல் நீட்டி இதோ இருக்கிறார் என அடையாளம் காட்ட முடியாது. கடவுள் என்பவர் உனக்குள் ஒளிந்து நிற்கும் உனது கடைசிக்கட்ட சுத்தநிலையாகும். உனக்குள்ளே அன்பு மலர்வது கடவுள் வெளிப்படுவதற்கு சமம். ஆகவே நீ அவரை வெளியே தேடினால் அவர் ஒருபொழுதும் கிடைக்கமாட்டார். அவர் கோயிலிலோ கைலாயத்திலோ இல்லை. நீ அவரில்லாத இடங்களில் தேடுகிறாய். அங்கெல்லாம் அவர் இல்லை. அவர் ஆகாயத்தில் மிக உயர்ந்த இடத்தில் உட்கார்ந்திருப்பதாக நினைப்பது அறிவிற்குப் பொருந்தாது. குழந்தைகள்தாம் கடவுள் தாத்தா மேகத்தில் உட்கார்ந்திருப்பதாக நினைப்பதுண்டு.

கடவுள் எங்கே இருக்கிறார்? உனக்குள் இருந்து இந்தக் கேள்வியைக் கேட்டவர், நான் சொல்லும் பதிலைக் கேட்பவர், உனக்குள்ளேயிருந்து என்னைப் பார்க்கின்றவர் அவரை அடை

யாளம் காண். கடவுளுடன் உனக்கு அறிமுகம் ஏற்பட்டுவிடும். உனக்குள் இயங்குபவர் யார்? உன்னை இயக்குபவர் யார்? அவரைத் தேடினால் போதும்.

கடவுள் உள்ளேயிருந்து வருகிறார். ஆகவே நீ உள்நோக்கிப் போக நேரிடும். உள்ளே செல்லச் செல்ல ஒளி பெரிதாகத் தெரியும். அதன் ஆரம்ப நிலையை நீ ஒரு கட்டத்தில் அடைவாய். அந்தத் தோற்றுவாயே கடவுள். கடவுள் என்பது ஒரு சொல்தான். அவர் எங்கே என்று கேட்பவனுக்குள்ளேதான் அவர் ஒளிந்துநிற்கிறார்! அவரை வெளியே தேடினால் அகப்படமாட்டார்.

கடவுள் இல்லையெனில் நாம் யாரைத் தேடி துரத்துகிறோம் என்று கேட்டாய்.

அப்படியில்லை விஷயம். கடவுள் உண்டு. அவர்தான் ஓடுபவர்; தேடுபவரும் அவரே! தேடுபவனுக்குள் அவர்தான் இருக்கிறார். ஆனால் தற்சமயம் நீ கடவுளைப் பின்தொடராமல் மத நம்பிக்கைகளையும் மதச்சடங்குகளையும் பின்பற்றுவதில் மும்முரமாக உள்ளாய் கோவிலுக்கு, பள்ளிவாசலுக்கு, குருத்துவாராவிற்கு, மாதாகோயிலுக்கு என்றெல்லாம் மக்கள் போகிறார்கள். விஷ்ணு, சிவன் என்று தெய்வங்களை வழிபடுகிறார்கள்.

நீ திசையை மாற்றி உள்நோக்கிப் பயணம் செய். அங்கே தான் உண்மையான ஆலயம் உள்ளது. வெளியே உள்ள கோயில்களில் மணியடித்து நீ காதைச் செவிடாக்கிக் கொண்டது போதும். இனி உள்ளேயிருந்து கேட்கும் ஒலியை உன்னிப்பாகக் கேள்.

கடவுள் மந்திரச் சொற்களில் (நாமாவளிகளில்), சாஸ்திரங்களில், தத்துவப் பிரிவுகளில் இல்லை. அவர் உனக்குள் இருக்கிறார்.

நீ தற்சமயம் எவர்களைப் பின்ப்பற்றுகிறாயோ அவர்கள் பண்டிதர்கள் அல்லது நூலறிஞர்கள் மட்டுமேயாவர். அவர்கள் ஞானிகள் அல்லர். ஏனெனில் ஞானிகள் உள்நோக்கிய பயணத் தைத்தான் வலியுறுத்துவார்கள், வற்புறுத்துவார்கள். அதற்குத்தான்

வழிகாட்டுவார்கள். பண்டிதர்கள் காசி, ஜைனர்களின் கிர்னார் அல்லது ஜெருசலேமுக்கு யாத்திரை போகச் சொல்வார்கள். ஆனால் இந்தத் தலங்களில் வாழ்பவர்கள் எல்லோரும் புனித ஆத்மாக்களா? அவர்கள் இறையுணர்வு, இறை அனுபவம் பெற்றவர்களா?

நீ உள்ளே செல்லச் செல்ல கடவுள் உன்னை நோக்கி வருவதை உணர்வாய். ஒருநாள் நீ உன் கேந்திரத்தை அடையும்போது அவர் அங்கு உன்னை வரவேற்கத் தயாராக இருப்பார்.

நீ கடையில் வியாபாரம் செய்கிறாய். பணம் சம்பாதிக்கிறாய். பதவி உயர்வு பெறுகிறாய். இதேபோல் ஒருநாள் கடவுளையும் பிடித்துவிடலாம் என்று எண்ணுகிறாய். ஆனால் நீ இஷ்டப் படுவதால் ஒன்று நடந்துவிடாது. நீ இஷ்டப்பட்டதால் உபத்திரவம் ஏற்பட்டது.

எதிர்பார்த்திருக்கக் கற்றுக்கொள். ஓடி அலைவதைக் கைவிடு. உன் அமைதியான எதிர்பார்ப்பு கடவுளின் கவனத்தைக் கவரும். அவரை வெளியே தேடாதே. உன் வீட்டுக்குத் திரும்பு. அப்போது எதையும் தேடவேண்டிய அவசியம் எழாது. இதையே அஷ்டாவக்ரரும் வெவ்வேறு விதமாகக் கூறியிருக்கிறார் ஞானி பரமாத்மாவைக்கூட தேடுவதில்லை. ஏனெனில் அவர் தன் உள்ளத்தில்தான் இருப்பதை ஞானி உறுதியாக அறிவார்.

நீ உன்னை அவருடன் ஒப்பிட்டுப் பார். கடைசியில் உன் கையில் சாவுதானே மிஞ்சுகிறது. ஆனால் நிதானித்து, தனக்குள்ளே இருக்கும் சத்தியத்தின் ருசியைச் சிறிதாவது அனுபவித்தவனின் வாழ்க்கையில் ஒரு புதிய அத்தியாயம் தொடங்குகிறது. உள்ளே ஒளிமயமாக மாறுகிறது. ஆனந்தம் பொங்குகிறது. கடவுளெனும் கருணை மேகம் உனது உள்ளத்தில் அமுதமழை பொழிகிறது.

சொற்கள் உயிரற்றவை. அவை மூலம் கடவுளைப் பிடிக்க முயலாதே. பலவகையான சித்தாந்தங்களால் அவரை விளக்க முயலாதே. கடவுளைப் பற்றி கேள்விகள் கேட்டாய். கேள்வி-பதில்

முறையால் அவரை வரையறுக்க முடியாது. கடவுளைப் பற்றிய கேள்விகளுக்கு ஏறத்தாழ தவறான விடையே அளிக்கின்றனர்.

உதாரணமாக, கடவுள் இமயமலையில் வீற்றுள்ளார் என்றனர். ஏனெனில் இமயத்தில் ஏறுவது மகாகடினம். உயிருடன் திரும்புதல் முற்காலத்தில் அதிசயம். ஆனால் மனிதன் இமயத்தை வென்றபின் கடவுளை வேறு இடத்திற்கு மாற்ற நேர்ந்தது. ஆகவே அவரைச் சந்திரனில் அமர்த்தினோம். பொல்லாத மனிதன் அங்கு கால் பதித்துவிட்டான். அடுத்து, அவரை எங்கே இடமாற்றம் செய்வது? கடவுள் வெளியுலகில் இருப்பதாக சாஸ்திரங்கள் கூறுவதை நம்புவதால்தான் இம்மாதிரி பிரச்சினைகள் எழுகின்றன.

யூரி காகரின்* சந்திரனைச் சுற்றிலும் வட்டமிட்டுவிட்டு மாஸ்கோ நகரில் ஒரு பெரிய அருங்காட்சியகம் அமைத்தார். அதில் விண்வெளிப் பயணத்துடன் தொடர்புடைய பொருட்களைச் சேகரித்து அங்கே காட்சிக்கு வைத்தார். அருங்காட்சியகத்தின் முதல் கதவின் மேற்புறச் சுவரில் அவர் பின்வருமாறு பொறித்து வைத்தார். ‘ஆகாயம் முழுவதும் அலசியும், சந்திரன்வரை சென்று தேடியும் எங்கும் கடவுள் கண்ணுக்குப் புலனாகவில்லை!’ இதையே அவர் விண்வெளிப் பயணம் முடித்துவந்தபின் தொலைக்காட்சிப் பேட்டியிலும் சொன்னார்.

சுயசிந்தனையற்ற ஆத்திகர்கள் கடவுள் வெளியுலகில் குறிப்பிட்ட இடங்களில் உள்ளார் என்கின்றனர். சுயசிந்தனையற்ற நாத்திகர்கள் அவர் எங்குமே இல்லை என்கிறார்கள். இரண்டும் சரியான முடிவுகளல்ல. என் பார்வையில், அவர் வெளியிலும் இல்லை, வெளியில் இல்லாமலும் இல்லை! அவர் உனக்குள்ளே அமர்ந்திருக்கிறார். அதை அறிய விண்வெளிப் பயணமோ, ஆராய்ச்சியோ உதவாது. உனக்குள்ளே இருக்கும் ஆகாயத்தில் (சிதாகாசத்தில்) தேட வேண்டும்.

---

* Yuri Gagarin (1934-68) ரஷிய விண்வெளி வீரர். விண்வெளியில் பயணித்த முதல் மனிதர். விண்வெளி ஓடத்தை இயக்கிய இவர் சாதாரண ஜெட் விமானத்தை ஓட்டியபோது விபத்துக்குள்ளாகி இறந்தார்!

அந்த ஓரிடத்தைவிட்டு விட்டு மனிதன் வேறு எல்லா இடங்களிலும் தேடுகிறான். கும்பமேளா சமயம் லட்சக் கணக்கில் திரளும் மக்கள் யூரி காகரினிடமிருந்து வேறுபட்டவர்கள் அல்லர். புனிதத் தலங்களுக்குச் செல்வோர் கடவுளை வெளியே தேடுபவர்களாக உள்ளனர்.

கடவுள் எங்கே இருக்கிறார் என்னும் கேள்வி தவறானது. ஆகவே இதற்குக் கிடைக்கும் விடைகளான 'கடவுள் இந்த-இந்த இடத்தில் இருக்கிறார்,' 'கடவுள் எங்கும் இல்லை' என்னும் இரண்டுமே தவறு. கடவுள் என்பவர் யார் என்றும் கேட்காதே. 'நீ யார்?' என்று உன்னைக் கேட்டுக்கொள். அதற்குக் கிடைக்கும் விடைதான் கடவுள் யார் என்பதும்.

## ஐந்தாம் கேள்வி

**ஓஷோ அவர்களே! உலகின் நிலை குறித்து எனக்கு மிகவும் கவலையாக, வருத்தமாக உள்ளது. இந்நிலையைப் போக்க சாஸ்திரங்களில் நான் மிகவும் தேடிப் பார்த்தும் வழியெதுவும் தென்படவில்லையே.**

சாஸ்திரங்கள் மூலம் யாருக்கு எப்பொழுதுதான் வழி கிடைத்திருக்கிறது? அவை வழிதவறிப் போகும் வழியைத்தான் சொல்லுகின்றன! நீ வாழ்க்கையையே புரிந்துகொள்ளவில்லையே. உனக்கு சாஸ்திரம் எப்படிப் புரியும்? வாழ்க்கை ஒரு திறந்த புத்தகம். அது வெளிப்படையானது, தெளிவானது, கடவுளால் எழுதப்பட்டது. அதுவே உனக்குப் புரியவில்லை. வெறும் எழுத்துகளின் கோர்வையிளாலாகிய சாஸ்திரம் எப்படிப் புரியும்?

ரோஜாப்பூ மலர்கிறது. அதில் உனக்குக் கடவுள் தெரிய வில்லை. சாஸ்திரங்களில், செத்த நூல்களில், காகிதத்தில் கறுப்பு அச்சுமையின் உதறலில் நீ எதைத் தேடிப் பெறுவாய்? நீ எழுத்து களிலேயே சிக்கிவிடுவாய். ஆனால் முதலில் வாழ்க்கையில் கண்ணெதிரே உணர்பவை பிறகு சாஸ்திரங்களிலும் காணக் கிடைக்கும். முதலில் சாஸ்திரத்தைப் புரட்டினால் அதுவும் புரியாது, வாழ்க்கையும் புரியாது.

சாஸ்திரங்களில் நேரத்தை இழக்காதே. அந்த நேரத்தை உன்னை அறிவதில் செலவழி. நீ என்னும் சாஸ்திரம் புரிந்தால் மற்ற சாஸ்திரங்களும் புரிந்தமாதிரிதான்.

உலகைப் பற்றி இப்போதே கவலைப்படாதே. தற்சமயம் நீ உன்னைப் பற்றி கவலைப்படு. இப்போது உன் நிலை குழப்ப மயமாக உள்ளது. உனது படகு முழுகிக் கொண்டிருக்கிறது. நீ வேறு யார் படகைக் காப்பாற்ற முயலுகிறாய்? உனக்கே நீந்தத் தெரியாது. நீ வேறு எவரையும் நீரிலிருந்து காப்பாற்ற முயலாதே.

மக்களைப் பற்றிக் கவலைப்படுகிறாயா? உனது உள்ளத்தின் உள்ளே உள்ள நிலைமையை நீ பார்த்ததுண்டா? உன்னைப் பற்றி யோசிப்பதற்கு பயப்படுவதால்தான் நீ அதைத் தவிர்க்க மக்களின் கவலை பற்றி பேசுகிறாயா? வீட்டுக்குள்ளே போக பயப்படுவதால்தான் வாசலில், தெருவில் நிற்கிறாயா?

சமூக சேவை செய்பவர்கள் சிலர் என்னைச் சந்திக்கையில் தங்களின் சேவைகளைப் பற்றி என்னிடம் கூறுவதுண்டு. "நீங்கள் உங்களுக்கான சேவையை பூர்த்தி செய்துகொண்டீர்களா?" என்று நான் அவர்களை மடக்குவேன். அதற்கு அவர்கள், "எங்களைப் பற்றி யோசிக்க எங்களுக்கு அவகாசம் எங்கே இருக்கிறது? தியானம் முதலியவை செய்ய எங்களால் நேரம் எப்படி ஒதுக்க முடியும்? சமூக சேவைக்கே எங்களுக்கு நேரம் போதவில்லையே" என்று அங்கலாய்க்கிறார்கள்.

நீங்கள் தியானம் செய்ததில்லை என்றால் உங்கள் சமூக சேவை போலியானது. சேவை நோக்கம் மறைந்து 'சேவை செய்கிறேன்' என்னும் போதையே அதிகரிக்கிறது. 'நான் சமூகசேவை செய்கிறேன்' என்று சொல்லும்பொழுதே அதில் அகங்காரம் தொனிக்கிறது.

முதலில் உன்னை அறிந்துகொள். உன்னை அடையாளம் கண்டுகொள். அப்பொழுது உன்னிடம் தானாகவே அன்பும் கருணையும் பெருக்கெடுக்கும். இதனால் தானாகவே நீ சமூகசேவை செய்வாய். அதை நீ இயல்பாகச் செய்வாய்; அடக்கமாகச் செய்வாய். அப்படி இல்லாவிடில் வலுக்கட்டாயமான,

போலியான கருணையினால் செய்யும் சமூகசேவை புள்ளிவிவரத்துக்கு மட்டுமே பயன்படும்.

நீ முதலில் உன்னைக் கவனி. நீ நோயாளியாக இருந்தால், நீ துன்பப்படுபவனாக இருந்தால், ஆனந்தமாக இல்லாவிடில், நீ பெரிய அளவிலோ, முழுமையாகவோ சமூகசேவை செய்ய முடியாது. இதனால் சில சமயம் நீ யாருக்கு சேவை செய்கிறாயோ அவர்களுக்குக் கெடுதல் விளையலாம்.

மக்கள் அல்லல்படுகிறார்கள் காரணம், அவர்கள் தியானம் செய்வதில்லை. சமூகசேவனாகிய நீயும் தியானம் செய்வதில்லை. உலகத்தை சுகம் பெறச்செய்ய ஒரேவழி தியானத்தைப் பரப்புவதுதான். மக்கள் தியானம் பழகினால் மன இறுக்கம் நீங்கி சாந்தமாக விளங்குவார்கள். உடலளவில் ஆரோக்கியம் பெறுவார்கள். ஆத்ம அளவில் தங்கள் ஆளுமையின் மையத்தை வந்தடைவார்கள். பிறகு வாழ்க்கையிலிருந்து துன்பங்கள் விலகிவிடும். துன்பம் என்பதை நாம்தான் உற்பத்தி செய்கிறோம். அடிப்படையில் பிறர் உனக்குத் துன்பமிழைப்பதில்லை.

## கடைசிக் கேள்வி

**ஓஷோ அவர்களே! உலகம் கடவுளின் லீலையெனில், விளையாட்டெனில் இதில் ஏன் இவ்வளவு துன்பம் நிறைந்திருக்கிறது? சயரோகம், புற்றுநோய், பிளேக், சாவு இவையும் லீலையின் பகுதிகளா, அங்கங்களா?**

நிச்சயமாக எல்லாமே லீலைதான். எல்லா நிகழ்ச்சிகளும் கடவுளின் விளையாட்டின் அங்கங்கள்தாம்.

நீ மரத்திலிருந்து பழங்களைப் பறிக்கிறாய். இதனால் பாரம் குறைந்ததாக மரம் சந்தோஷப்படுமா? நீ வருவதைப் பார்த்து மரங்கள் ‘அதோ கொலைகாரப் பாவி வந்துவிட்டான்’ என்ற கூவுவது உன் காதில் விழுகிறதா? அவை உன்னை மரங்களைப் பாழ்படுத்தும் நச்சுண்ணியாகக் கருதுகின்றன. நீ இயற்கை முழுவதையும் நாசமாக்குகிறாய். மலைகளைச் சிதைக்கிறாய்.

ஏரிகளை மூடி வீடு கட்டுகிறாய். விண்வெளியில் பயணிக்கத் தொடங்கிவிட்ட நீ அதையும் குப்பைக்கிடங்காக்கி வருகிறாய். மனிதன் என்னும் நோய் பரவி எல்லாவற்றையும் விழுங்கிவருகிறது. நீ உன் அசைவ உணவிற்காகக் கொன்று தின்ற மிருகங்களை எண்ண முடியுமா? உனக்கு உணவாகப் பயன்பட்டமைக்காக அந்த விலங்குகள் மகிழுமா?

நீ காட்டிற்குப்போய் சிங்கத்தைக் கொன்றால் மக்கள் உனக்கு மாலை போடுவார்கள். மாவீரன் (பஹாதுர்) என்று பாராட்டுவார்கள். ஆனால் சிங்கம் உன்னைக் கொன்றால் அந்த சிங்கத்திற்கு யார் மாலை போடுவார்கள்? சிங்கங்கள் வேண்டுமானால் 'ஒரு மனுஷன், ஒரு எதிரி தொலைஞ்சான்' என்று தமது பாஷையில் பேசிக்கொள்ளக்கூடும்.

உனது பார்வை ஒருதலைப்பட்சமாக உள்ளது. நீ மனிதன் என்ற தரப்பிலிருந்து எதையும் காண்கிறாய்.

**ஒ**ரு சயரோகி. அவனது ரத்தத்தில் நிறைய நோய் கிருமிகள். அவற்றில் இரண்டு நேருக்கு நேர் சந்தித்தன. நமஸ்காரம், நலம் விசாரித்தபின் ஒரு கிருமி இன்னொன்றிடம், "நீ சோகமாகத் தெரிகிறாயே. வெளுத்தும் காணப்படுகிறாய். உன்னை பெனிசிலின் மருந்து தாக்கிவிட்டதா என்ன?" என்று விசாரித்தது.

உனக்கு பெனிசிலின் மருந்தாக இருக்கிறது. சயரோக கிருமிகளுக்கு பெனிசிலின் நோய் போன்று அழிக்கும் எதிரியாகும். வாழ்க்கை விசாலமானது. வாழ்க்கையை எல்லாத் தரப்புகளிலிருந்தும் பார். மனிதன் என்னும் தரப்பிலிருந்து மட்டும் நீ பார்ப்பதை நிறுத்து. அது ஒரேயொரு கோணத்திலிருந்து வாழ்க்கையைப் பார்ப்பதாக மட்டுமே அமையும்.

நீ வாழ்க்கையை எல்லா கோணங்களிலிருந்தும் பார். அப்போது அது லீலை மாத்திரமே என்பது பிடிபடும். பிறகு உலகில் குறை எதுவும் இருப்பதாகத் தெரியாது. இங்கே பரந்து விரிந்த ஒரு விளையாட்டு நடைபெற்று வருகிறது. இந்த விளையாட்டில் ஒருவன் வெல்கிறான்; இன்னொருவன் தோற்கிறான். விளையாட்டு என்றால் வெற்றியும் தோல்வியும்

வழக்கம்தான். தோல்வியின்றி வெற்றி இருக்க முடியாதே. ஆகவே தோல்வியும் விளையாட்டின், லீலையின் அங்கம்தான். யாருக்கும் தோல்வியே இல்லாத, வெற்றி மட்டுமே உள்ள விளையாட்டு ஒன்று இருக்க முடியுமா? பிறகு அது எப்படி விளையாட்டாகும்?

துன்பமும் வெற்றியின் அங்கமா என்று கேட்கிறாய். துன்பம் இன்றி சுகம் இருக்க முடியுமா? தோல்வியின்றி வெற்றி உண்டா? மரணமில்லாத வாழ்க்கை உண்டா? இளமைக்குப் பின் முதுமைதானே. இரட்டை நிலையிலிருந்து தப்பிக்க வழியில்லை.

விளையாட்டிற்கு இரண்டு தரப்பினர் தேவை. ஒரு தரப்பு தோற்று மற்றது வென்று விளையாட்டு நடைபெறுகிறது. ஒரு பக்கமே வென்றால், இன்னொன்று எப்போதும் தோற்றால், எப்பொழுதும் வெற்றி-தோல்வியின்றி முடிந்தால் அந்த விளை யாட்டு சலித்துவிடும். இந்த ரகசியத்தை, அதாவது வெற்றியும் தோல்வியும் சமம் என்பதை அறிந்தால், வாழ்க்கையென்னும் கணக்கைப் புரிந்துகொண்டதாக அர்த்தம்.

ஒருவன் தோற்கிறான், ஒருவன் வெல்கிறான்; ஒருவன் விழிக்கிறான், ஒருவன் தூங்குகிறான்; ஒருவன் பிறக்கிறான், ஒருவன் இறக்கிறான்—கடைசியில் கணக்கு சரியாகிவிடுகிறது. நேர்செய்யப்பட்டு விடுகிறது.

கடைசியில் மிஞ்சுவது ஒருவன்தான், இருவரில்லை. இதை அறிந்தவன் விளையாட்டு வட்டத்திற்கு வெளியே சென்று விடுகிறான். உனக்கு ஊட்டுபவன் (கடவுள்) சுகத்தைப்போல நீ துன்பத்தையும் பருக வேண்டும் என்று விரும்புகிறான். அமிர்தம்போல நஞ்சையும் ஏற்றுக்கொள்.

உலகை, உலக வாழ்க்கையை லீலை என்று ஒப்புக்கொண்டு விட்டால் இனி நாம் புகார் செய்வதற்கு எதுவுமில்லை என்று அர்த்தமாகிறது. விளையாட்டுதான் என்பதால் அதை கம்பீரமாக, தீவிரமாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. வெற்றி-தோல்வி எல்லாம் சமம். வெல்வதும் நாம், தோற்பதும் நாம். இங்கே இரண்டாவதாக எவரும் இல்லை. இங்கே ஒருவனே தன்னை இரண்டாகப் பிரித்துக் கொண்டு விளையாடுகிறான். கடவுள்தான்

ஒளிகிறார். அவர்தான் தேடுகிறார். இங்கே தேடுபவரும் தேடப்படுபவரும் இரண்டல்லர்.

**சுகமான தினங்களைக் கொடுப்பவர் எவரோ**
**அவரே துன்ப நாட்களும் அளிக்கின்றார்**
**மதுப்பானை அடியில் விஷத் துளிகளிருப்பது**
**விந்தையான விஷயம் அன்று**
**இதுவே இயற்கையின் விளையாட்டு**
**வசந்த காலத்திற்குப்பின் இலையுதிர்காலம்**
**வருவது எல்லா வனத்திலும் உண்டு**
**இந்த மாறுதல் வழக்கமானது**
**ஆகவே நான் சொல்கின்றேன்**
**அழுகையும் புலம்பலும் அவசியமில்லை**
**சுகமான நாட்களைச் சிரித்துக் கழி**
**துன்ப நாட்களில் சிரித்துக் களி**

சுகத்தை வரவேற்று ஏற்றதுபோல் துன்பத்தையும் சுவீகரித்துக் கொண்டால், அந்த ஏற்பு முழுமையாக இருந்தால் விளையாட்டு ஆரவாரம் நீங்கி அமைதியாகிவிடும்.

இரண்டே வழிகள் உள்ளன. மோதல் வழி ஒன்று. மோதிப் பிரிவுகள், துண்டுகளாக ஆகு. மோதினால் சில சமயம் வெற்றி, சிலசமயம் தோல்வி. சிலசமயம் சுகம். சில சமயம் துன்பம். சிலசமயம் மாலை சூட்டுவார்கள். சில சமயம் மண் எறிந்து தூற்றுவார்கள்.

இன்னொரு வழி வெறும் பார்வையாளனாக (சாட்சியாக) இருந்துவிடு. பிறகு வெற்றி-தோல்வி கிடையாது. சாட்சி என்றால் விளையாடுபவனாக இல்லாமல் விளையாட்டுக்கு வெளியே போனவன் என்று அர்த்தமாகிறது. நீ தொலைவில் உட்கார்ந்து விளையாட்டைப் பார்க்கிறாய். விளையாட்டில் எத்தனையோ ஏற்ற இறக்கங்கள், மாறுதல்கள். ஆனால் பார்ப்பவன் அப்படியே உள்ளான்.

**நேற்று நின்ற இடத்தில் உலகம் இன்றில்லை**
**காலை வெயில் தெரிந்த முற்றத்தில்**
**இப்போது நிழல் தவழ்கிறது**
**தினமும் இங்கே புதுப் பிறப்பு தினமும் இங்கே சாவு**

**கண்களை ஒருமுறை துடைத்து விழித்தால்**
**உலகமே மாறிப் போகிறது**
**ஓடும் ஆற்றின் ஒரே நீரில்**
**இரண்டாம் முறை கால் வைக்க முடியாது**

இங்கே எதுவும் நிலையாகத் தங்குவதில்லை. வெற்றி தோல்வியாகவும், தோல்வி வெற்றியாகவும் மாறுவது இங்கே வழக்கம். மரணம் நடந்த அதே வீட்டில் திருமணக் கொண்டாட்டமும் நடைபெறும். வெயிலும் நிழலும் மாறி-மாறி வரும். கண்களை ஒரு முறை கசக்கிவிட்டுத் திறந்துபார். அதற்குள் எல்லாம் மாறியிருக்கும்.

இந்த மாறுதலை நாம் லீலை, விளையாட்டு என்கிறோம். ஆகவே இதை கம்பீரமாக எடுத்துக்கொள்ளக் கூடாது. இதை மேலோட்டமாக எடுத்துக்கொண்டால் நீ விளையாட்டைக் கடந்தவனாகி எந்தப் பாதிப்புக்கும் உள்ளாகாமல் இருப்பாய்.

ஹெராக்ளிடஸ் ஒரே நதியில் இரண்டு முறை இறங்க முடியாது என்றார்.* இங்கே எதுவும் இரண்டாம் முறை அப்படியே கிடைக்காது. போனவன் திரும்பியதில்லை. வந்தவனும் போவதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறான். பூ முழுவதும் மலர்ந்ததும் அது வாடுவதும் தொடங்குகிறது. இங்கே எத்தனை இன்பம், எத்தனை துன்பம் என்று கணக்குப் போடாதே.

எல்லாம் லீலை என நீ நினைத்தால் எதனாலும் பாதிக்கப் படாமல் நீ பார்வையாளனாக (சாட்சியாக) மட்டுமே இருந்துவிட முடியும். கம்பீரமாக, தீவிரமாக எதையும் நீ எடுத்துக்கொண்டால் நீ செய்பவனாக (கர்த்தாவாக) ஆகிவிடுவாய். உன்னை அகங் காரம் சூழ்ந்துகொள்ளும். சுகம்-துக்கம் என்னும் இரட்டைகளில் சிக்கிக்கொள்வாய். பார்ப்பவனாக மட்டும் இருந்தால் நல்லது-கெட்டது, சுபம்-அசுபம், ஆதரவு-எதிர்ப்பு, இப்படியிருக்கலாம்-இப்படி இருக்கக்கூடாது என்பவற்றின் தாக்கத்திற்கு உள்ளாகாமல் நடுநிலையாளனாக இருப்பாய். இதனால் மனம் அமைதிபெற்று விளங்கும்.

---

* Heraclitus (540-480 கி.மு.) கிரேக்க ஞானி. அவர் சொன்னது Upon those who step into the same river, different and ever different waters flow down

**ஹரி ஓம் தத்ஸத்!**

அஷ்டாவக்ரர் மொழிகிறார்:

நிரோதாதீனி கர்மாணி ஜஹாதி ஜட தீர்யதி |
மனோரதான் ப்ரலாபான்யச கர்த்து மாப்னோத்ய
தத்க்ஷணாத் || 251

மந்த: ச்ருத்வாபி தத்வஸ்தும் ந ஜஹாதி விமூடதாம் |
நிர்விகல்போ பஹிர்யத்னாத் அந்தர் விஷபலாலஸ: || 252

ஞானத் கலித கர்மா யோ லோக த்ருஷ்ட்யாபி கர்மத்ருத் |
நாப்னோத்யவஸரம் கர்த்து வக்த்துமேவ ந கிஞ்சன || 253

க்வ தம: க்வ ப்ரகாஷோ வாஹானம் க்வ ச ந கிஞ்சன |
நிர்விகாரஸ்ய தீரஸ்ய நிராதகஸ்ய ஸர்வதா || 254

க்வ தைர்யம் க்வ விவேகித்வம் க்வ நிராதம் கதாபி வா |
அநிர்வாச்ய ஸ்வபாவஸ்ய நி: ஸ்வபாவஸ்ய யோகிந: || 255

ந ஸ்வர்க்கோ நைவ நரகோ ஜீவன்முக்திர்ன சைவ ஹி |
பஹுநாத்ர கி முக்தேந யோக த்ருஷ்ட்யா ந கிஞ்சன || 256

நைவ ப்ரார்த்தயதே லாபம் நாலாபேநாநுஷோசதி |
தீரஸ்ய ஷீதலம் சித்தம் அம்ருதேநைவ பூரிதம் || 257

**கௌ**தம புத்தர் பேராசையைத் துறந்தார். பணம், வசதிகள், அந்தஸ்தைக் கைவிட்டார். ஆனால் ஒரு தீவிர நிலையிலிருந்து இன்னொரு தீவிர நிலைக்குச் சென்றார். அனைத்தும் தியாகம் செய்தார். தனது உடலை மிகுந்த வலி-வேதனைக்கு உள்ளாக்கினார். உடல் மெலிந்து எலும்புக்கூடாகி விட்டது. அவரால் நிற்கவும் உட்காரவும் முடியவில்லை.

அவர் ஒருமுறை நிரஞ்சனா நதியைக் கடக்க வேண்டியிருந்தது. நதி அபார வேகத்திலிருந்தது. அவரது உடலில் சக்தியில்லை. அவர் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து யோசித்தார்:

'என்னிடம் எல்லாம் இருந்தபோதும் ஏதோ விட்டுப் போனதாகத் தோன்றியது. எல்லாவற்றையும் தியாகம் செய்தும் அதன் பலனாக எதையும் பெறவில்லை. ஆகவே எங்கேயோ தவறு இருக்கிறது. அரச போகத்தாலும் திருப்தி பெறவில்லை. தியாகத்தாலும் மனநிறைவு இல்லை. ஏதோ ஓர் அடிப்படையான விஷயம் என் கண்ணில் படாமல் உள்ளது.'

அந்த சமயம் கிராமப் பெண்கள் சிலர் நாட்டுப் பாடல பாடியபடி அந்த வழியே சென்றனர்:

**வீணைக் கம்பியைத் தொய்வாய் விடாதே**
**ஒலியே எழாது**
**வீணைக் கம்பியை இறுக்கி முறுக்காதே**
**பேரொலியுடன் அது அறுந்து போகும்**

சத்குருவிடம்கூட கிடைக்க முடியாத உபதேசம் புத்தருக்கு அந்தப் பட்டிக்காட்டுப் பெண்களின் பாட்டைக் கேட்டுக் கிடைத்தது. அவருக்குள் ஒரு கிரணம் இறங்கியது. தன் தவறு புரிந்தது. 'நான் எப்பொழுதும் மிகை நிலையில், அதிகபட்ச போகம் அல்லது அதிகபட்ச தியாகம் என்ற நிலையில் வாழ்ந்திருக்கிறேன். நடுவில் நின்று பார்க்கவில்லை. நான் தேடும் மார்க்கம் ஒருவேளை மத்திய நிலையில் இருக்கக்கூடும்' என்று புத்தர் ஊகித்தார்.

அன்றிரவு அவர், ஒருநாள் நாட்டைத் துறந்ததுபோல், தியாகத்தையும் துறந்தார். செல்வத்தைத் துறந்ததுபோல் தியானத்தையும் துறந்தார். உலகவாழ்க்கையைத் துறந்ததுபோல் நிர்வாணம் (சூனியம்) என்னும் நிலையை அடையும் ஆசையையும் கைவிட்டார். அன்றிரவே அவரது ஆத்மாவில் புரட்சி ஏற்பட்டது. சித்தார்த்தரான அவர் மறுநாள் காலை பூரண ஞானம் பெற்ற புத்தராகிவிட்டார்!

சத்தியத்தை அறிந்த அனைவரும் மிகையாக இருத்தலை எதிர்த்துள்ளனர். ஆனால் மனம் ஊசல் (பெண்டுலம்) போல் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்குப் போகிறது. அவ்வாறு செல்வது அதற்கு சுகமாக உள்ளது. ஊசல் நடுமத்தியில் நின்று விட்டால் கடிகாரம் ஓடுவது நிற்கிறது. கால ஓட்டம் நின்றுபோகிறது. இது சமாதிநிலை போன்றது.

'அறியாமை மிகுந்தவன் மனத்தை அடக்குதல் முதலியவற்றைக் கைவிட்டு அவற்றில் ஈடுபடாமல் இருந்தால் உடனே தன் ஆசைகளையும் ஏக்கங்களையும் நிறைவேற்றிக் கொள்வதில் ஈடுபடுகிறான்.' **(சுலோகம் 251)**

நம் மனம் அத்தகையது. நாம் எப்படியாவது போகங்களைக் கைவிட்டால் யோகத்தில் ஈடுபடுகிறோம். ஒரு பரமஞானியைச் சந்திக்க நேர்ந்து அவர், "தியாகமும் ஒரு மிகை நிலை. அதனால் என்ன பலன் கிடைக்கப்போகிறது?" என்றால், நாம் உடனே தியாகத்தைவிட்டுப் போகத்திற்குத் திரும்பிவிடுகிறோம்.

அஷ்டாவக்ரர் போகத்தையும் ஆதரிக்கவில்லை; தியாகத்தையும் ஆதரிக்கவில்லை. அறியாமை மிக்கவன் எதையும் தனக்குச் சாதகமாக எடுத்துக்கொள்கிறான். அவன் நினைக்கிறான்—"சரி, பணத்தால் கிடைக்காததை தியானத்தால், புண்ணியச் செயல்களால், தானமளிப்பதால் பெறுவேன். பதவியால் கிடைக்காததை தியாகத்தால் அடைவேன். சுக வசதிகளால் பெறாததை ஆணிப்படுக்கையில் (ஹடயோகம்) படுத்து அடைவேன்.'

**ரா**பியா என்ற பெண் சூபித் துறவியைச் சந்தித்த ஒருவன், "நான் தர்ம (அற) நெறிப்படி வாழ்ந்தால், கடவுள் என்னை நோக்கி வளைவாரா? என்னை நோக்கிப் பார்ப்பாரா?" என்று கேட்டான். (Whether God would incline towards me if I get converted to righteousness?)

ராபியா சொன்னார், "அவ்வாறு ஒருபோதும் நிகழாது இதற்கு எதிரான சூழ்நிலைதான் வழக்கமானது. கடவுள் உன்னைக் கவனித்து நோக்கினால் நீ அறவாழ்க்கையில் ஈடுபடுவாய்."

(It is the opposite. If he should incline towards you, then you can be converted to righteousness.)

நீ வளைந்துகொடுப்பதால், அறவாழ்க்கை நடத்துவதால் மட்டும் நீ நினைக்கிறபடி எதுவும் நடந்துவிடாது. நீதான் உன்னைக் கெடுத்துக் கொண்டாய். உன் அகங்காரம் உன்னைச் சிறைப்படுத்தி வைத்திருக்கிறது.

முதலில் பணம் சேகரித்தாய். பிறகு தியாகத்தைத் திரட்டினாய். உலக வாழ்வை விரும்பினாய். பிறகு மோட்ச ஆசை உன்னைப் பிடித்துக்கொண்டது. எந்த நிலையிலும் 'நீ' என்னும் அகங்காரம் பிடித்தவன் நீடிக்கிறான். அகங்காரம் உன் ஆளுமையின் மையத்தைப் பிடித்துக்கொண்டது.

அஞ்ஞானி போகங்களை விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்கிறான். எப்படியோ போக ஈடுபாடு நீங்கினால் அதே வெறியுடன் யோகத்தில் இறங்குகிறான். விஷயம் மாறுகிறதே தவிர குணம் மாறவில்லை. முன்பு காசு சேகரித்தான். இப்போது புண்ணியம் சேகரிக்கிறான். பொருள் மாறியதே தவிர சேகரிக்கும் குணம் மாறவில்லை. முதலில் இவ்வுலகில் சுகம்பெற விரும்புகிறான். பிறகு மேலுலகத்தில் கிடைக்கக்கூடிய சுகங்களுக்கான பட்டியல் தயாரிக்கிறான் சுகத்தில் நாட்டம் எப்போதும் நீடிக்கிறது.

பயம் தொடர்கிறது. பேராசை தொடர்கிறது. முன்பு அவன் கடவுளை வழிபடும்போது 'எனக்கு அரசர் போன்ற பெரிய பதவி, ஏராளமான சொத்து, சமூக கௌரவம் கிடைக்க வரம் அருளுங்கள்' என்று வேண்டினான். அவை சலித்தபின், "பிரபு, அவையெல்லாம் வேண்டாம். என்னை சுவர்க்கலோகத்திற்கு அழைத்துக் கொள்ளுங்கள். எனக்கு சுவர்க்க சுகம் வேண்டும். கட்டாயம் வேண்டும்' எனக் கேட்டுக்கொள்கிறான். அதாவது, அவன் கடவுளைக் கருவியாக உபயோகப்படுத்த விழைகிறான். மாறாக, அவன் தன்னைக் கருவியாக நினைத்துக் கடவுளிடம் தன்னை உபயோகித்து புனிதப்படுத்துமாறு வேண்டுதல் செய்யவேண்டும்.

எகிப்திய மேற்கோள் ஒன்றின்படி, நீ குருவைத் தேடி அடைந்தபின் அவரிடம், "நான்தான் உங்களைத்

தேர்ந்தெடுத்தேன்," என்று ஆணவமாகக் கூறக்கூடாது. "நான் உங்களைத் தேடியபோது என் புண்ணியத்தின் பலனாகத் தாங்கள் கிடைத்து என்னைச் சீடனாக ஏற்றுக்கொண்டீர்கள். மிக்க நன்றி." என்று பணிவுடன் கூறவேண்டும்.

அடிப்படை என்னவெனில் எந்த சூழ்நிலையிலும் உனது அகங்காரம் தலைதூக்கக்கூடாது.

அல்-ஹில்லாஜ் மன்சூர் என்ற சூஃபி ஞானி தூக்கில் போடப்பட்டார். அவருடைய கை-கால்கள் வெட்டப்பட்டன. காரணம், அவர் தன்னை 'நான் கடவுள்' என அறிவித்துக் கொண்டதுதான்.

அஸ் ஸிம்னானி என்றொரு துறவி இது பற்றி பாடல் எழுதியுள்ளார். அதில் மன்சூரைத் தூக்கில்போட்ட இரவு அவரை எதிர்த்தவர்களில் ஒருவர் மன்சூர் சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்லப்படுவதாகக் கனவு கண்டார். இதை அவரால் நம்ப முடியவில்லை. அன்று மன்சூருக்கு எதிர்ப்புக் காட்டிய கூட்டத்துடன் அவரும் மன்சூர்மேல் கல் எறிந்தவர். 'மன்சூரைத் தூக்கிலிடுக' என்று கோஷமிட்டவர். அவர் கடவுளிடம் காரணம் கேட்பதுபோல் பாடல் அமைந்துள்ளது:

Oh God! why Hallaj was swept away to heaven
for crying out 'I am God!'
Then he heard a voice speaking
When Hallaj uttered those words
he had forgotten himself.
He thought only of me
Therefore in Hallaj's mouth
The 'I am' is the effect of my grace

அதாவது, மன்சூர் 'நான் கடவுள்' என்று சொன்னபோது அவன் முழுமையாக தான் இல்லாமல் போனான். கடவுள் மட்டுமே மிஞ்சினார். அது மன்சூருக்கு ஆசீர்வாதமாக அமைந்தது.

எல்லாம் ஒரு சிறு விஷயத்தைப் பொறுத்து உள்ளது. நீ எது செய்யினும் அதில் 'நான்' என்னும் உணர்வை நிரப்பாதே.

அப்போது நீ எதுவும் செய்யாமலேகூட கடவுள்வரை சென்றடைவாய். 'நீ' என்பவன் இருக்கும்வரை ஜபம்-தவம்-யாகம் முதலியவை எவ்வளவு செய்தாலும் பயன் விளையாது. உன் திமிர்தான் அதிகரித்தபடி செல்லும். அப்போது உனக்கும் கடவுளுக்குமுள்ள தூரமும் அதிகரிக்கும். நீ எந்த அளவிற்கு ஆஜராக இருக்கிறாயோ அந்த அளவிற்குக் கடவுள் உன்வரையில் இல்லாமல் போய்விடுவார்.

என்னிடம் எவராவது வந்து, "கடவுள் எங்கே இருக்கிறார்? நான் பார்க்க வேண்டும்," என்று கூறும்போது எனக்கு மிகவும் சங்கடமாகிவிடுகிறது. "நீ என்பவன் இருக்கும்வரையிலும் நீ கடவுளைப் பார்க்க முடியாது," என்று நான் அவர்களை அனுப்பி விடுவது வழக்கம். நீ இருப்பதுதான் திரைமாதிரி தடுக்கிறது. கடவுள் தன்னை பர்தாவால் மறைத்துக் கொள்ளவில்லை. உன் கண்களில்தான் கட்டு போடப்பட்டு மறைக்கிறது.

ஜடபுத்தி உள்ளவர்கள் முதலில் மனத்தை அதன் இஷ்டப்படி அலையவிட்டு போகங்களில் திளைக்கின்றனர். பிறகு திடீரென மனம் மாறி யோகத்தில் அதே தீவிரத்துடன் ஈடுபடு கின்றனர். முதலில் மனத்தின் அடிமையாக இருந்தவர்கள் பிறகு வலுக்கட்டாயமாக மனத்தை அடிமையாக்கப் பாடுபடுகின்றனர். அதில் மிகைநிலையைத் தொட்டதும் அவர்கள் போகத்திற்கு மீண்டும் திரும்பக்கூடும். இக்கரைக்கு அக்கரை பச்சை என்பது போல்தான் இது.

அஷ்டாவக்ரர் தியானம் தேவையில்லை என்று சொல்வதாக நினைக்கக்கூடாது. அவர் "தியானத்திலிருந்து கீழ்நோக்கிச் சரிந்து விடக்கூடாது; அதற்கு மேலே உள்ள நிலைக்கு உயரவேண்டும்" என்கிறார். இந்த இரு நிலைகளிலும் தியானம் என்பது இல்லாமல் போகிறது.

கீழ்நோக்கிச் சரிந்தால் மீண்டும் ஆசைகள் பிடித்துக் கொள்கின்றன. அவை அணைந்து போவதில்லை. ஏனெனில் அவை வலுக்கட்டாயமாக அடக்கப்படுகின்றன. ஒரு போர்வீரன் சாதாரண நேரத்தில் அமைதியாக இருப்பான். ஆனால் தேவைப் பட்டால் ஆவேசம் கொள்வான். அதேபோல், அடக்கிவைத்த

ஆசைகளும் தூங்கும் எரிமலை ஒருநாள் குமுறுவதுபோல், விழித்து வெளிப்படும்.

நாம் சமூகத்தில் சந்திக்கின்ற சாதுக்களும் மகாத்மாக்களும் போர்வீரன் போன்றவர்களேயாவர். அவர்கள் தங்கள் ஆசைகளை பலவந்தமாக வறுத்து, வடிகட்டி, கட்டுப்பாட்டின் கீழ் வைத்துள்ளனர். அவர்கள் கெட்டவர்களோ, குற்றவாளிகளோ அல்லர். குற்றம் செய்திருந்தாலும் தங்களுக்குத்தான் குற்றம் இழைத்தவர்களே தவிர பிறருக்கு அல்ல. ஆனால் பொதுமக்கள் நினைப்பதுபோல் அவர்கள் முக்தர்கள் அல்லர். அவர்களைச் சான்றோர் என்று மட்டும் கூறலாம். அவர்கள் மேலும் வளர்ச்சி பெற்று உண்மையிலேயே ஞானிகளாக மாற வாய்ப்புண்டு.

நீ எங்காவது செல்லும்போது பாதையில் ஒரு ரூபாய் கிடந்தால் நீ எடுக்க மாட்டாய். 'நான் ஒன்றும் திருடனில்லை' என்று கூறிக்கொள்வாய். ஆனால் கணிசமான தொகை கொண்ட பணப்பையைக் கண்டால் உன்னால் அதை எடுக்காமல் இருக்க முடியாது. அக்கம்பக்கத்தில் யாராவது பார்க்கிறார்களா என்பதில் எச்சரிக்கையாக இருப்பாய். ஆகவே உன் நேர்மைக்கும் எல்லை உண்டு.

ஞானியின் நல்லொழுக்கத்திற்கு எல்லை இல்லை. உன் நேர்மை நிபந்தனையுடன் கூடியதாகும். நிபந்தனை நிறைவேறா விடில் உன் நேர்மையும் மாறுதலடையும். ஞானிகளின் ஒழுக்கம் நிபந்தனையற்றது. அவர்கள் ஒழுக்கத்தில் தீயாக ஜொலிப்பவர்கள்.

அஷ்டாவக்ரர் போகத்தை ஆதரிக்கவில்லை. அவர் யோகத்தின் சார்பாகவும் பேசவில்லை. போகம், யோகம் இரண்டும் தன்னை, அகங்காரத்தை, மையமாகக் கொண்டது என்கிறார். இரண்டிலும் செய்பவன்-அனுபவிப்பவன் என்னும் கூறுகள் உள்ளன.

அகங்காரம் நீங்கிய வேளையில் கடவுள் நமக்குள் இறங்கிவருகிறார்.

'மந்தபுத்திக்காரன் உயர்தத்துவங்களைக் கேட்டும் தனது முட்டாள்தனத்தைக் கைவிடுவதில்லை. வெளிவிஷயங்களில்

கட்டுப்பாடின்றித் திளைத்து ஆசைகள் நிறைந்தவனாக ஆகிறான்.' **(சுலோகம் 252)**

**ம**ந்தபுத்திக்காரன் மூடனில்லை. மூடனும் மூர்க்கனும் ஒன்று. எவ்வளவு விளக்கினாலும் புரிந்துகொள்ள மாட்டார்கள். நாம் என்ன சொல்கிறோம் என்பதுகூட அவர்களுக்குப் புரிவதில்லை. மந்தபுத்திக்காரன் விஷயத்தைப் புரிந்துகொள்வான். ஆனால் அதற்கு காலதாமதம் ஆகும். சட்டென்று அவனால் புரிந்துகொள்ள முடியாது.

சிற்றின்பங்கள் பயனற்றவை. இதை நாம் மந்தமதி காரண மாக முதுமையில்தான் புரிந்துகொள்கிறோம். இளமையிலேயே இது புரிந்தால் நாம் பொலிவுடன் விளங்குவோம். சிற்றின்பங்கள் பற்றி முதுமையில் அறிவது காலம் கடந்த ஞானம். முதுமையில் எல்லோருமே வாழ்க்கையில் அடிபட்டு ஓரளவு அறிவாளிகள் ஆகிவிடுவது வழக்கம்தான். ஆசைகளை இனி அனுபவிக்க முடியாதபடி உடலும் மனமும் பலகீனமாகின்றன. அதை ஒப்புக்கொள்ளாமல் முதியவர்கள் 'நாங்கள் ஆசைகளை வென்று விட்டோம்' என்று அகங்காரம் கொள்கின்றனர். இளைஞர்களை முட்டாள்களென நகைக்கின்றனர். இதே முட்டாள்தனத்தைத்தான் தாங்களும் செய்தோம் என்பது அவர்களுக்கு ஞாபகமிருப்ப தில்லை.

முதுமை காரணமாக அறிவு பெற்றால் அதற்கு ஒரு மதிப்பும் கிடையாது. இனி இன்பங்களில் ஈடுபடமுடியாததை முதியவர்கள் பற்றின்மை, தவ வாழ்க்கை என்னும் சொற்களால் ம்றைத்துக் கொள்கின்றனர்.

சாது-சந்நியாசிகள் பலர் அடிக்கடி உபவாசம் (உண்ணா நோன்பு) மேற்கொள்ளுகிறார்கள். எவ்வளவு நாள் உபவாசம் இருந்தோம் என்பதில் பெருமை கொள்ளுகிறார்கள். அவர்களு டைய பக்தர்களும் தங்கள் சாமியாரின் சாதனை என்று பூரிப்படைகிறார்கள். சிலரது உபவாசம் உண்மையாக இருக்கலாம். வேறு சிலர் மேற்கொள்ளும் உபவாசம் போலியானது. அவர் களுக்கு நாக்கு செத்துவிட்டது அல்லது வயிற்றில் ஏதோ கோளாறு. பசியிருந்தும் வாயில் எதுவும் போட்டாலே திகட்டிவிடுகிறது.

ஆனால் அதையெல்லாம் மறைத்து சாதானையாளர்கள் போல் அவர்கள் பக்தர்களை ஏமாற்றுகிறார்கள். சாப்பிட முடியாதவனின் உபவாசம் ஒரு சாதனையாகுமா?

புத்தர், மகாவீரர், அஷ்டாவக்ரர் போன்றவர்கள் தர்க்கம் (வாதம்) செய்வதன் மூலம் சத்தியத்தை அறியவோ, அடையவோ முடியாது என்று சொன்னால் நம்பலாம். ஆனால் அதையே கிளிப்பிள்ளைபோல் ஒரு மூடன் சொன்னால் அதில் சாரம் கிடையாது. அவனுக்கு தர்க்கம் என்றால் என்ன என்பதே தெரி யாது. சாப்பிட முடியாதவன் உண்ணாவிரதம் என்பதுபோல்தான் தர்க்கம் தெரியாதவன் சத்தியம் பற்றி பேசுவதும்.

மந்தபுத்திக்காரனுக்கு அறிவுரை சொன்னால் அதை அவன் கேட்பதுபோல் தோன்றும். காதால் கேட்டுவிட்டான் என்றும் தோன்றும். அதை அவன் மனப்பாடமும் செய்யக்கூடும். ஆனாலும் அவனுக்குள் ஆன்மிகப் புரட்சி நிகழ்வதில்லை. அப்படியானால் கேட்டதெல்லாம் வீண்தான்.

உன்னையே எடுத்துக்கொள். புத்தர் போன்ற ஞானிகளின் உபதேசம் கேட்டாய். சமண முனிவர்களின் விளக்கவுரைகளையும் கேட்டாய். பரமஹம்சர்கள் எனப்படுவோரின் சொற்பொழிவுகளில் நனைந்தாய். ஆனால் உன்னிடம் எந்த மாறுதலும் விளைய வில்லை. காரணம், ஆன்மிக விஷயங்களில் பெரும்பான் மையோர் மந்தபுத்திக்காரர்களே.

மந்தபுத்திக்காரன் தாமதமாகத்தான் எதையும் புரிந்து கொள்கிறான். இயேசுநாதர் மீது கல்லெறிந்தவர்கள் மந்த புத்திக்காரர்கள். தாமதமாக அவரை உணர்ந்தபின் அவரை வழிபடத் தொடங்கினார்கள். புத்தர் வாழ்ந்தபோது அவரை ஏசியவர்கள் பலர். அவர் இறந்தபின் அவருடைய சிலைகள் இன்றுவரைகூட செதுக்கப்பட்டு வழிபாட்டில் உள்ளன. புத்தர் திரும்பி வந்தால்? இந்த புது அவதாரம் புரியாத நிலையில் கல்லெறிதான் படுவார்!

மக்கள் பரம்பரைக்கு மிகுந்த மதிப்புத் தருகிறார்கள். எதுவும் எந்த அளவு பழைமையானதோ அதற்கேற்ப அதை வழிபடு

கிறார்கள். அவர்களது மூளை சமகாலத்துடன் இணைந்து செல்வதில்லை. இங்கே சிலர் வேதம் ஓதுகிறார்கள். ஆனால் இப்போதும் புதிய வேதங்கள் தோன்றுவதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. வேதங்களைப் போலவே இவர்களது புத்தியும் 5000 ஆண்டுகள் பிற்பட்டதாக உள்ளது. என் கருத்துகளைப் பழிப்பவர்களும் 5000 ஆண்டுகளுக்குப் பின்னர் அவற்றைப் பாராட்டக்கூடும்.

காலத்துடன் இணைந்து நடைபோடுவது மேதைத்தனம். காலத்தைவிட சற்று முன்னால் நடைபோடுவது ஞானம். ஆனால் பின்னோக்கிச் சரிந்து சமகாலத்துக்கும் தனக்கும இடையே இடைவெளியை உண்டாக்குதல் மந்தபுத்தி.

மந்தபுத்திக்காரன் அம்பு எய்தால் அது எதிரேயுள்ள இலக்கைச் சென்று தாக்காமல் பின்புறம் உள்ள திசையில் செல்லும். தற்காலத்துடன் ஒட்டிவாழும் மேதை விடும் இலக்கைத் தாக்கும். அம்பு செல்லும் திசையில் இலக்கு இருக்கும்.

விழிப்புணர்வின் (ஆன்மஞானத்தின்) கடைசி நிலை காலத்தைக் கடந்து முன்னேறியதாக இருக்கும். அந்த ஞானிகள் கூறுவது சில நூற்றாண்டுகள் பின்பே புரிந்து கொள்ளப்படும். ஏனெனில் சமகால மக்களின் சிந்தனை ஞானிகளின் கருத்துகளின் வேகத்திற்கு ஈடுகொடுக்க முடியாது. இதுவே புத்தத்துவம் என்பதுமாகும். புத்தத்துவம் என்பது நாளை நடக்கவுள்ளதை இன்றே பார்த்திடும் ஆற்றலாகும்.

வேறு விதமாகவும் விளக்கலாம். அலுவலகத்தில் முதலாளி உன்னைக் கண்டித்தார். ஆனால் உன் கோபம் வீடு திரும்பியபின் வெடிக்கிறது. காரணமின்றி அல்லது அற்பத் தவறுக்காகப் பிள்ளையை அடித்துவிடுகிறாய். அப்போதுதான் நீ யாரையோ (முதலாளியை) தாக்க விரும்பி அது பிள்ளையின் மேல் சுமத்தியதை நீயே தெரிந்துகொள்கிறாய். கோபம் செயலாகய மாறிய பிறகே உன் அறிவு விழிக்கிறது.

ஆக, கோபத்தின் வளர்ச்சியில் மூன்று நிலைகள் காண்கிறோம். முதலாவது, கோபம் பிறக்கும் முதல் நிலை. சூரியன்

உதிப்பதற்கு முன்னால் கிழக்கு சிவப்பதைப் போன்றது இந்நிலை. சூரியன் உதித்தது. கோபம் பிறந்ததை அதனுடன் ஒப்பிடலாம். சூரியன் தலைக்கு நேராக வந்தது. கோபம் ஒரு செயலாக வெளிப்படுவது இதற்கு சமம்.

கோபம் செயலாக மாறியபின்தான் உணர்பவர்கள் மந்தபுத்திக்காரர்கள். கொலையாளி கொலை செய்துவிட்டபின் விழித்துக்கொள்கிறான். 'ஐயோ! என்ன பாவம் செய்துவிட்டேன்!' என்று பதறுகிறான்.

அவனைவிட பக்குவம் அதிகமுள்ளவன் கோபம் மூளும்போதே அதை இனம் கண்டுவிடுகிறான். கோபம் வெளிவந்தே தீருகின்ற அந்த நிலையில் தனது கோபத்தால் விபரீத விளைவோ, அதிகச் சேதமோ விளையாமல் (damage control) தடுக்க பிரயத்தனப்படுகிறான்.

ஞானம் பெற்றவன் கோபத்தின் சாயல் தெரியும்போதே அதைத் தடுத்துவிடுகிறான். விதை முளைக்கும் முன்பே அதற்குத் தடைபோடுகிறான். பிறகு கோப மரம் வளர வாய்ப்பு நீங்குகிறது.

உபதேசங்களைத் தொடர்ந்து கேட்டும், துறவிகளின் தொடர்பு (சத்சங்கம்) காரணமாகவும் உனக்கும் உலக வாழ்க்கையில் சாரம் இல்லை என்று படுகிறது. போகம் அர்த்தமற்றது என்று தோன்றுகிறது. ஆனால் இது மேலோட்டமான பாதிப்புதான். உள்ளே எந்த மாறுதலும் இல்லை. எனினும் நீ வெளியுலகைத் துறந்து காட்டுக்கு ஏகுகிறாய். குகையில் உட்கார்ந்து விடுகிறாய். ஆனால் நீ யோசிப்பது நீ விட்டுவந்த உலகைப் பற்றிதான். கையில் ஜெபமாலை எடுத்து மணிகளை எண்ணுகிறாய். ஆனால் மனம் முன்பு ரூபாய் நோட்டுகளை எண்ணியதை நினைத்துப் பார்க்கிறது. வெளியே ஒருவிதமாகவும் மனத்துள் இன்னொரு விதமாகவும் இரட்டை வாழ்க்கை நடத்தும் மனிதன் நோயாளியாகிறான். ஏனெனில் அவனது ஆளுமை உடைந்த நிலையில் (split personality) உள்ளது.

நான் சென்ற 20 ஆண்டுகளில் சந்தித்த துறவிகளில் பலர் உண்மையில் மனநோயாளிகளே! அவர்களுக்கு சிகிச்சை தேவை.

உடல் நோயானால் துறவி சிகிச்சை பெறுவதை எவரும் தப்பாக நினைப்பதில்லை. அவர் குணமாக வேண்டும் என்று பக்தர்கள் பிரார்த்திப்பர்.' ஆனால் மனக்கோளாறை அவர் வெளிப்படையாக ஒப்புக்கொள்ள முடியாது. அவர் மனநல மருத்துவரிடம் போனால் பக்தர்கள் அவர்மீது நம்பிக்கை இழப்பார்கள். தாங்கள் வகிக்கும் மடம் சம்பந்தப்பட்ட பணிகளில் ஆர்வம் மறைந்தாலும் அவர்கள் அதை வெளிக்காட்ட முடியாது. அவர்கள் தினமும் நேரம் தவறாமல் ஒரேமாதிரிக் கடமைகளை இயந்திரம்போல் செய்ய வேண்டியுள்ளது. பூஜை, ஜெபம், தவம், உபவாசம் என்று எதிலும் நெகிழ்ந்துகொடுக்க முடியாது. வெளியே தெய்விகப் புன்னகை யுடன் தெரியும் அவர்களின் உள்ளத்திலோ எரிமலைபோல் கொதித்துக் கொண்டிருக்கிறது.

நீ எப்படி என்பதை எடைபோட ஓர் உரைகல் ஏற்படுத்திக்கொள். உண்மையான மதிப்பீடு வெளியேயிருந்து அல்ல. உள்ளேயிருந்து வரவேண்டும். மனத்தில் ஆசைகள் மிஞ்சியிருந்தால் உலக வாழ்க்கையைத் தொடர்வதே மேல். எங்கும் ஓடிப்போகாதே. இது தோல்விபோல் இருந்தாலும் யாரையும் ஏமாற்றவில்லையே. பொய்த் துறவியாக இருப்பதை விட உண்மையான இல்லறத்தானாக நீடிக்கிறாயே. இந்த உண்மைத் தன்மை ஒருகாலத்தில் உன்னை உண்மையான துறவறத்திற்கு இட்டுச்செல்லக்கூடும். போலியாக வீட்டை விட்டு ஓடுதல் உண்மையான துறவறத்திற்கு வழிவகுக்காது.

ஆகவே நான் என்னுடைய துறவிகளை எதையும் விட்டு ஓடிப்போகுமாறு சொல்வதில்லை. நான் அவர்களிடம், "நீங்கள் எங்கே எந்நிலையில் உள்ளீர்களோ அதிலேயே உறுதியாக நில்லுங்கள். ஓடிப்போவது கோழைத்தனம். அது பயந்துபோன மனிதன் செய்யும் காரியம். உள்ளே மிஞ்சியிருக்கும் ஆசை களைத் தெரிந்துகொள்ளுங்கள். அவற்றிடம் அஞ்சி குகையைத் தேடி ஓடுவதால் அவை நீங்கிவிடாது.

'ஞானம் கிடைத்ததன் காரணமாக எவருடைய கர்மங்கள் நஷ்டம் அடைந்தனவோ அந்த ஞானி உலகின் பார்வையில் வேண்டுமானால் செயல்கள் செய்யாமல் இருக்கலாம். ஆனால்

உண்மையில் 'அவன் எதுவும் சொல்லவோ, செய்யவோ வாய்ப்பு எடுத்துக்கொள்வதில்லை.' **(சுலோகம் 253)**

இரண்டு விதமாக கர்மங்கள் (செயல்கள்) அழியக்கூடும். வலுக்கட்டாயமாக ஒரு நடவடிக்கையால் ஒரு கர்மத்தை அழித்தால் பலனில்லை. அது நீங்கிவிட்டதாக நீதான் ஏமாறுவாய். இதை அறிய நுணுக்கம் தேவை.

உனக்கு எதனாலோ கோபம் உண்டாகிறது. இக்கோபத்தை நீ இரண்டு வழிகளில் நீக்கிக்கொள்ள முடியும். செயல் மூலம் நீக்குவது ஒரு வழி. நீ கோபத்தின் மீது ஏறி அமர். அதன் நெஞ்சில் உட்காரு. அதை அசைய விடாதே. வெளியே போக விடாதே. உன்னைச் சமாளித்துக்கொள். உன்னைக் கட்டுப்படுத்திக் கொள். எல்லாப் பக்கங்களிலிருந்தும் உன்னைத் தடுத்துக்கொள். 'என்ன நடந்தாலும் சரி, கோபம் எதைச் செய்யத் தூண்டுகிறதோ அதைச் செய்யமாட்டேன்' என்று உனக்குள் சொல்லிக்கொள்.

இது முடியுமதான். ஆனால் ஒரு நடவடிக்கையால் கோபத்தைத் தடுத்தால் எவ்வளவு காலம் அந்தக் கட்டுப்பாட்டு நடவடிக்கை நீடிக்கும்? நடுவில் களைத்துப் போவாய் அன்றோ. சற்று ஓய்வெடுப்பாய் அல்லவா? இரவில் தூங்குவாய் அல்லவா? அப்போது கனவில் யாரையாவது கொலை செய்வாய்! கோபத் திற்கு வடிகால் கிடைத்துவிடும். அது நீங்குவது உனக்குக்கூட தெரியாமல் போகும்.

மனைவி மீது கோபம். ஆனால் வெளியிலிருந்து வந்து கதவைப் படபடவென்று தட்டி வேகமாகக் கதவை உதைத்துத் திறப்பதன் மூலம் உன் கோபத்தை வெளியேற்றி விடுகிறாய். கோபத்தை இடமாறுதல் (transference) செய்கிறாய்!

மனைவிக்கு இன்று உன் மேல் கோபம். ஆகவே இன்று பாத்திர ஓசையும் அவை கீழே விழும் ஓசையும் அதிகம். அவள் உன்னை நேரடியாகத் தாக்கிப் பேசவில்லைதான். பாத்திரத்தை எறிந்து உன்னைக் காயப்படுத்தவில்லைதான். ஏனெனில் கணவன் கண்கண்ட தெய்வமாயிறே. இன்று டீ கோப்பை விழுந்து உடைகிறது. அவள் வேண்டுமென்று அவ்வாறு செய்யவில்லை. ஆவேசத்தால் கை நடுக்கம் இருக்கிறது.

அவள் தேநீரைக் கிண்ணத்தில் ஊற்றும் விதத்திலும் படபடப்புத் தெரியும். கறி-கூட்டில் உப்பு அதிகம் சேர்ந்திருக்கும். வேண்டுமென்று அவ்வாறு செய்யவில்லை. கோபம் தன்னை மறக்கச்செய்கிறது. தண்ணீர் தெளிக்கப்படுவதுபோல் கோபம்தான் அங்குமிங்குமாகப் பரவுகிறது. அருவியின் குறுக்கே பாறையை வைத்தால் பல வழிகளில் சிதறுவதுபோல் கோபமும் ஒரேசமயத்தில் பல விதமாக வெளிப்படுகிறது. இவ்வாறு பல வகைச் செயல்கள் (கர்மம்) மூலம் கோபம் வெளிப்படுகிறதே தவிர, கர்மத்தால் கோபம் தடைப்படுவதில்லை.

மாறாக, கோபத்தின் சுபாவத்தை அறிந்து, அதை நேருக்கு நேர் பார்க்கக்கூடியவன் கோபப்படுதல் வீணானது என்பதை அறிகிறான். ஆகவே கோபத்தால் தூண்டப்பட்டு எச்செயலும் புரிவதில்லை. இதையே ஞானத்தின் மூலம் கர்மத்தை வெல்லுதல் என்கிறோம்.

கோபத்தை ஒருமுறை நன்கு புரிந்துகொண்டபின் கோபப்படுதல் இயலாததாகிவிடும். தடுத்தல் பற்றிய கேள்வியே எழாது. கர்மம் மூலம் கோபத்தைத் தடுப்பவன் அதைப் புரிந்து கொள்ளாமலே தடுக்கிறான். ஞான விழிப்புப் பெற்றவனுக்குக் கோபத்தைத் தடுக்க வேண்டிய அவசியமின்றி அதுவாகவே நின்றுபோகிறது. ஏனெனில் கோபம் என்பதே அறியாமையில் உண்டாகிறது. அந்த அடிப்படை ஞானத்தின் மூலம் சிதறுகிறது.

கர்மத்தை இன்னொரு செயலால் அழிக்காமல் ஞானத்தால் கரைத்து, முயற்சி ஏதும் செய்யாமல் ஞானத்தால் எதையும் புரிந்துகொள்பவன் தனது பார்வையாலேயே புரட்சியை, மாறுதலை உண்டாக்குவான்.

இயற்பியல் துறை ஆராய்ச்சியின்படி உயிருள்ள பொருளை நீ உற்றுக் கவனித்தால் சில மாற்றங்கள் நிகழுமெனக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

நீ ஒரு மரத்தைக் கவனமாகப் பார்க்கிறாய். அதனால் அந்த மரத்திற்கு என்ன பாதிப்பு வந்துவிடும் என நினைக்கிறாய். பலர் சேர்ந்து அன்புடன் பார்த்தால் மரம் ஒருவிதமாக மாறுவதாயும்,

பலர் கோபத்துடன் பார்த்தால் மரம் வேறு விதமாக மாறுவதாகவும் கண்டறியப்பட்டுள்ளது. அதை அறிய உபாயங்களும் உள்ளன. ஒருவன் மரத்தை வெட்டக் கோடாலியுடன் வந்தால் மரம் முழுதும் பலவிதமான அலை (பய அலை) பரவுகிறது என அறிவியலார் கூறுகின்றனர். அவன் மரத்தை வந்தடையும் முன்பே இந்த நடுக்க அலை பரவுகிறது.

தோட்டக்காரன் வருவது தொலைவில் தெரியும்போதே செடிகளில் ஒருவிதமான திருப்தி அலை பரவுகிறது. ஏனெனில் அவன் அவற்றிற்குத் தண்ணீர் ஊற்றி நல்லுறவை ஏற்படுத்திக் கொண்டுள்ளான். இதையெல்லாம் விஞ்ஞானிகள் பரிசோதித்துப் பார்த்துள்ளனர். மரங்களும் அனுபவ அடிப்படையில் உணர்ச்சி வசப்படுகின்றன என்று கண்டுள்ளனர்.* பார்வை ஒன்றே போதும் தாவரத்தின் இயல்பு மாறும். விலங்குகளும் அவ்வாறு நடந்துகொள்கின்றன.

உன்னையே எடுத்துக்கொள். நாலு பேர் உன்னை அன்புடன் அல்லது மரியாதையுடன் பார்த்தால் உனக்குள் ஓர் இதமான மாறுதலை உணர்கிறாய் அல்லவா? அதேபோல் உன்னை நாலுபேர் கோபத்துடன், வெறுப்புடன் முறைத்தால், உனக்குள்ளே ஏதோ எதிர்மறையான மாறுதல் தோன்றுவது உண்டல்லவா?

இதேபோல் நீ உனக்குள் பார்த்தால் மாறுதல்கள் நிகழ்வது தர்க்கப்படி சரியாக இருக்கும். அதற்கு நீ வெளியுலகத்தைப் பார்க்காமல் கண்களை மூடிக்கொள்ள வேண்டும். அவ்வாறு நீ அகக் கண்ணால் உற்று நோக்க, உள்ளே இருக்கும் காமம், சினம், பேராசை முதலியவை கலைய, கரையத் தொடங்கும். அவ்வாறு பார்க்கும்போது சில குணங்கள் வளர்ச்சியும் பெறுகின்றன. அகப்பார்வையால் தேய்வதை பாபம் என்றும், வளர்ச்சி பெறுவதை புண்ணியம் என்றும் நாம் வகைப்படுத்தலாம்.

நீ அன்பை உற்று நோக்கினால் அது வளர்கிறது. ஆகவே அன்பு புண்ணியம், நற்செயல். நீ சினத்தை உற்று நோக்கினால்

* சர் ஜெகதீஷ் சந்திரபோஸ் உயிரிகளின் நுணுக்கமான அசைவுகளையும் அதிர்வுகளையும் பதிவு செய்யும் கருவிகளைக் கண்டுபிடித்தார்.

ஓர் இளைஞன் ஓடி பக்கத்திலுள்ள சந்திற்குச் சென்றான். அங்கே யாருமே கண்ணிற்கு எட்டிய தொலைவுவரை தென்படவில்லை. இளைஞன் புறாவின் கழுத்தைத் திருகிக் கொன்றான். குருவிடம் திரும்பிவந்து தீட்சையளிக்குமாறு கேட்டான். அவர் பொறுத்திருக்கச் சொன்னார்.

மூன்று மாதங்களாகியும் இரண்டாம் இளைஞன் திரும்பவில்லை. புறாவைக் கொல்லப் பக்கத்து சந்தே போதுமே. தன்னோடு வந்தவனுக்கு இன்னுமா தனியான இடம் கிடைக்கவில்லை என்று முதலாம் இளைஞன் எரிச்சலுற்றான். இரு இளைஞர்களும் ஒன்றாக வந்து தீட்சை கேட்டதால் இரண்டாவனும் வந்த பிறகுதான் அடுத்த நடவடிக்கை என்று குரு திட்ட வட்டமாகக் கூறிவிட்டார்.

மூன்று மாதங்களுக்குப் பின் சில நாள் கழித்து இரண்டாமவன் திரும்பிவந்தான்—உயிருடன் இருந்த புறாவுடன்! அவனது நிலை பரிதாபமாக இருந்தது. உடல்வற்றிப் போயிருந்தது. ஆனால் கண்கள் அபூர்வ ஒளியுடன் மினுமினுத்தன. குருவின் சரணங்களைத் தலையால் தொட்டு வணங்கி, புறாவைத் திருப்பிக் கொடுத்துவிட்டான்.

“குருதேவ்! இதைக் கொல்ல இயலாது. நீங்கள் விதித்த நிபந்தனை என்னைச் சிக்கலில் மாட்டிவிட்டது. மூன்று மாதமாகத் தவித்துப்போய் விட்டேன். எல்லா இடங்களிலும் யாராவது என்னைப் பார்ப்பதாகவே உணர்ந்தேன்.

“ஓரிடத்தில் பூமிக்கடியில் நிலவறை போன்ற குகை இருந்தது. அங்கே அடர்ந்த இருட்டு. யாரும் என்னைப் பார்க்க வாய்ப்பே இல்லை. ஆனால் புறா என்னையே பார்ப்பதைக் கவனித்தேன். ஆகவே நிபந்தனைப்படி அதைக் கொல்ல முடியவில்லை.

“பிறகு அது என்னைப் பார்க்க முடியாதபடி கூடையில் அடைத்தேன். கூடைக்குள் கையை நுழைத்துப் புறாவைக் கொல்ல முயன்றபோது, நான் என்பவன் அந்த இடத்தில் இருப்பதை உணர்ந்தேன். ஆகவே வெளியாள் எவரும்

மௌனம் என்பதற்கு மொழியைக் கடந்துபோதல் என்று அர்த்தம். இது உள்நோக்கிய பயணத்துடன் சம்பந்தப்பட்டது. அங்கே, உள்ளே, சொற்கள் கிடையாது. சொல் இல்லாத அந்த இடத்தில் கடவுள் இருக்கிறார். சொல் தொலைந்த இடத்தில் கடவுள் இருக்கிறார். அங்கே இருப்பவரே அவர் ஒருவர்தான். இரண்டு பேர் உள்ள இடத்தில்தானே பேச்சு (சொல்) எழும்பும்.

ஞானி இரட்டைகளைக் கடந்தவர். ஆகவே இருட்டு, ஒளி போன்ற இரட்டைகள் அவரைப் பொறுத்தவரையிலும் இல்லை.

சாஸ்திரங்கள் கடவுளை ஒளிமயமானவர் என்கின்றன. அவ்வாறு சொல்வதற்கான காரணத்தை சாஸ்திரங்கள் வெளிப் படுத்தவில்லை. இருட்டு என்றாலே மனிதன் பயப்படுவதுதான் இதன் காரணம். ஒளி தோன்றினால் நம்பிக்கை பிறக்கிறது. அப்போது வெளிப்பொருட்கள் தெரிந்து நமக்கு சூழ்நிலை புரிகிறது.

தனக்குள்ளே பார்க்க முடிந்தவன் இருட்டைக் கண்டு அஞ்சுவதில்லை. உள்ளே ஒளியில்லாமல் வெளியே மட்டும் பார்க்கத் தெரிந்தவன்தான் இருட்டென்றால் பயப்படுகிறவன். ஏனெனில் இருட்டில் கண் தெரிவதில்லை. உலகமே மறைந்துபோகிறது. இருட்டில் காட்சிகள் மறைந்துவிடுகின்றன. சித்த புருஷர்கள் காட்சிகளைப் பார்ப்பதில் ஆர்வம் காட்டுவ தில்லை. காட்சிகளைக் காட்டுபவனை (கடவுளைக்) காண்பதில்தான் அவர்களுக்கு ஆர்வம்.

ஆனால் எத்தகைய அடர்ந்த இருட்டாயிருந்தாலும் சரி, நீ எப்படியும் இருக்கிறாய் அல்லவா? நீ இருட்டில் மறைந்து விடவில்லை என்பதை நீ அறிவாய்.

**கு**ரு ஒருவரை இரண்டு இளைஞர்கள் அணுகித் தங்களுக்கு தீட்சையளிக்குமாறு வேண்டிக் கொண்டனர். அதற்குமுன் குரு அவர்களை சோதிக்க விரும்பினார். ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு புறாவைக் கொடுத்து, "யாருமே இல்லாத இடத்தில் அதைக் கொன்று முடித்து வாருங்கள். பிறகு தீட்சை தருகிறேன்," என்றார்.

ஓர் இளைஞன் ஓடி பக்கத்திலுள்ள சந்திற்குச் சென்றான். அங்கே யாருமே கண்ணிற்கு எட்டிய தொலைவுவரை தென்படவில்லை. இளைஞன் புறாவின் கழுத்தைத் திருகிக் கொன்றான். குருவிடம் திரும்பிவந்து தீட்சையளிக்குமாறு கேட்டான். அவர் பொறுத்திருக்கச் சொன்னார்.

மூன்று மாதங்களாகியும் இரண்டாம் இளைஞன் திரும்பவில்லை. புறாவைக் கொல்லப் பக்கத்து சந்தே போதுமே. தன்னோடு வந்தவனுக்கு இன்னுமா தனியான இடம் கிடைக்கவில்லை என்று முதலாம் இளைஞன் எரிச்சலுற்றான். இரு இளைஞர்களும் ஒன்றாக வந்து தீட்சை கேட்டதால் இரண்டாவனும் வந்த பிறகுதான் அடுத்த நடவடிக்கை என்று குரு திட்ட வட்டமாகக் கூறிவிட்டார்.

மூன்று மாதங்களுக்குப் பின் சில நாள் கழித்து இரண்டாமவன் திரும்பிவந்தான்—உயிருடன் இருந்த புறாவுடன்! அவனது நிலை பரிதாபமாக இருந்தது. உடல்வற்றிப் போயிருந்தது. ஆனால் கண்கள் அபூர்வ ஒளியுடன் மினுமினுத்தன. குருவின் சரணங்களைத் தலையால் தொட்டு வணங்கி, புறாவைத் திருப்பிக் கொடுத்துவிட்டான்.

"குருதேவ்! இதைக் கொல்ல இயலாது. நீங்கள் விதித்த நிபந்தனை என்னைச் சிக்கலில் மாட்டிவிட்டது. மூன்று மாதமாகத் தவித்துப்போய் விட்டேன். எல்லா இடங்களிலும் யாராவது என்னைப் பார்ப்பதாகவே உணர்ந்தேன்.

"ஓரிடத்தில் பூமிக்கடியில் நிலவறை போன்ற குகை இருந்தது. அங்கே அடர்ந்த இருட்டு. யாரும் என்னைப் பார்க்க வாய்ப்பே இல்லை. ஆனால் புறா என்னையே பார்ப்பதைக் கவனித்தேன். ஆகவே நிபந்தனைப்படி அதைக் கொல்ல முடியவில்லை.

"பிறகு அது என்னைப் பார்க்க முடியாதபடி கூடையில் அடைத்தேன். கூடைக்குள் கையை நுழைத்துப் புறாவைக் கொல்ல முயன்றபோது, நான் என்பவன் அந்த இடத்தில் இருப்பதை உணர்ந்தேன். ஆகவே வெளியாள் எவரும்

இல்லாவிடிலும், 'நான்' என்பவன் இருப்பதால், யாருமே இல்லாத இடமே கிடையாது என்ற தெளிவு பிறந்தது. நான் எங்கே போனாலும் என்னையும் அழைத்துகொண்டுதான் போவேன் என்பது புரிந்தது. நான் புறாவைக் கொல்லாததால் எனக்கு தீட்சை தராவிட்டாலும் பரவாயில்லை. நீங்கள் வைத்த சோதனையி லிருந்து நான் பெரும் பயன் பெற்றேன். எனக்கு என்னைவிட்டு என்றும் அகலாத ஆத்மா பற்றி சிறிது அறிந்துகொண்டேன்," என்று அவன் பணிவுடன் கூறினான்.

குரு புன்னகையுடன், "இந்த அனுபவம்மூலம் நீ சுயமாகவே தீட்சை பெற்றுவிட்டாய்," என்றார். மற்ற இளைஞனை, "நீ மந்தபுத்திக்காரன். உண்மைப் பொருளைப் புரிந்துகொள்ள முடியாதவன். உனக்கு தீட்சை கிடையாது. இங்கிருந்து ஓடிப்போ," என்று விரட்டிவிட்டார்.

நீ எவ்வளவு ஆழ்ந்த இருட்டினுள் உட்கார்ந்தாலும் நீ என்பவன் பிரசன்னமாகியிருக்கிறாய். 'நான் எப்போதும் இருக்கிறேன்' என்னும் அனுபவம் கிடைக்கிறது. இது இருட்டிற்கு அப்பாற்பட்ட அனுபவம். இந்த அனுபவம் பெற வெளிச்சம் தேவையில்லை. இது தனக்கென்று தனி ஒளிகொண்டது. இது சுயம்பிரகாசி. இதற்கென வெளிச்சான்று தேவையில்லை. இந்த அனுபவமே சான்றுதான்.

கண்களை மூடி உள்ளே பிரகாசத்தை உணர்பவன் இருட்டிற்கு பயப்படமாட்டான். சராசரி மக்கள் இருட்டிற்கு பயப்படு வதால், அவர்களுக்குத் தெம்பூட்ட 'கடவுள் ஒளிமயமானவன்' என்று ஞானிகள் பாதி உண்மையைச் சொன்னார்கள். 'இருட்டும் அவனே' என்று சொல்லி அவர்கள் மக்களைக் கலவரப்படுத்த விரும்பவில்லை.

வேறு விதமாகவும் கூறலாம். உள்ளே இருக்கும் இருட்டும் ஒளியுமற்ற சத்தியத்தை அறிந்தும் அதை ஒளி என்று ஞானிகள் கூறியதற்கு இன்னொரு பொருளுண்டு. உள்நோக்கிப் பயணம் செய்கையில் வெளியில் ஒருவகை ஒளியும் உள்ளே இன்னொரு வகையான ஒளியும் உண்டென்று அர்த்தமெடுத்துக் கொள்ளலாம்.

வெளி ஒளியை உணர்வது முதல் அனுபவம். இது சராசரி மக்களின் அனுபவம். உள் ஒளியை உணர்வது அடுத்த அனுபவம். இது உள்முகமாக நோக்குபவர்களின் அனுபவம். அஷ்டாவக்ரரின் கருத்துகளில் நம்பிக்கை உள்ளவர்கள் உள்ளே-வெளியே இரண்டும் தனித்தனியல்ல என்பார்கள். உள்முக-வெளிமுகப் பயணங்கள் தனித்தனியல்ல. இங்கும் இரட்டை என்பது கிடையாது. பிறகு இருளோ, ஒளியோ தனித்தனியாக இருக்க முடியாது.

ஒரு பேச்சுக்காக—முதலில் வெளியே இருந்து உள்ளே செல்ல வேண்டும். பிறகு உள்ளேயிருந்து அதற்கும் உள்ளே செல்லவேண்டும். வெளியே இருந்து விடுதலை பெற வேண்டியது கட்டாயமாகும். உள்ளே செல்வதன் முதல் கட்டத்திலிருந்தும் விடுதலை தேவை. அதற்கு அப்பாலுள்ள கட்டத்தில் நீ உள்ளேயும் இல்லை, வெளியேயும் இல்லை. அந்த சமயம் பெரும் புரட்சி நிகழ்கிறது. அங்கே இருட்டோ வெளிச்சமோ கிடையாது.

'வர்ணிக்க முடியாத சுபாவமுடைய மற்றும் சுபாவம் அற்ற யோகிக்கு தைரியம் (சகிப்புத் தன்மை), விவேகம், அச்சமின்மை ஆகியவை எதற்கு? அவை தேவைப்படா.' **(சுலோகம் 255)**

**யோ**கி என்பவன் யார் என இங்கே வரையறுத்துக் கூறப்படுகிறது. அவன் சொற்களால் விளக்க முடியாத சுபாவம் கொண்டவனாக இருப்பான். அதே சமயம் சுபாவம் என்பதே இல்லாதவனாக இருப்பான்! ஒரு விதத்தில் அவன் முக்தி பெற்றவன். இன்னொரு விதத்தில் அவன் தன் நிஜத்தை அடைந்தவன். இழந்தவன் பெறுகிறான் என்று இங்கு கூறுவது முரண்பாடுபோல் தோன்றுகிறது. ஆன்மிக மொழியில், தன்னை இழக்காமல் தன்னைப் பெற முடியாது. தன்னை முழுமையாக இழந்துவிடும்போது, தன்னை மூழ்கடித்து விடுகின்றபோது அதன் பலனாகத் தன்னைத்தான் நாம் பெறுகிறோம்.

ஒரு கட்டத்தில் 'நான் இருக்கிறேன்' என்றுகூட நீ சொல்ல முடியாது. 'நான் இருக்கிறேன்' என்று சொல்லியபடி நீ உள்ள வரையிலும் நீ அலைகிறாய். நீ இன்னும் சொந்த வீட்டிற்குத் திரும்பவில்லை. ஏனெனில் எல்லா 'நான்'களுக்கும் 'நீ' என்னும்

இணையும் தேவைப்படுகிறது. நான் என்பது நீ என்பதன் பிளவு, ஜோடி அல்லது இரட்டைதான்.

குழந்தை பிறந்தபின் அதற்கேற்படும் முதல் அனுபவம் 'நான்' என்பது அல்ல. நீ என்னும் அனுபவத்தையே அது முதலில் பெறுகிறது. அதன் முதல் பார்வை தாயார் மீது படுகிறது. குழந்தை தன்னைப் பார்த்துக்கொள்ள முடியாது. தாயார், டாக்டர், நர்ஸ், பார்வையாளர்கள் என்று குழந்தையின் 'நீ' என்னும் பட்டியல் நீள்கிறது. பிறகு சுவர், வீட்டுப் பொருட்கள், பொம்மைகள் என்றெல்லாம் பார்க்கிறது. 'நான்' உணர்வு அப்போது இருப்பதில்லை.

குழந்தையின் முன்னால் கண்ணாடியைக் காட்டினாலும் அதில் தெரியும் உருவம் 'நான்' என்று குழந்தை அறிந்திருக்க வில்லை. அது பிரதிபிம்பத்தைத் தடவும், முத்தமிடும், அடிக்கும். சில சமயம் கண்ணாடியைத் திருப்பி, பின்னால் ஏதாவது உள்ளதா என்று பார்க்கும். அங்கு எதுவும் இல்லாதது கண்டு குழப்பமடையும்.

அது தனது கை கட்டைவிரலையோ, கால் கட்டை விரலையோ சூப்புகிறது. அது தனது உடலின் பாகம் எனக் குழந்தைக்குத் தெரிவதில்லை. ஏதோ பொருள் என்று நினைத்து வாயால் இழுக்கிறது. அது தன் அனுபவங்களை முதன் முதலாக வாயின் மூலமே பெறுகிறது. பொம்மையைக் கொடுத்தால் அதைக் கடிக்கிறது. அதன் ஒரு புலன்தான், சுவைப் புலன்தான் முதலில் இயக்கம் பெறுகிறது. பிறந்ததும் அது பெறும் முதல் அனுபவம் பால் குடித்தல். இந்த அனுபவத்தின் அடிப்படையிலேயே அது மற்ற எல்லாப் பொருட்களையும் ஆராய்கிறது. எந்தப் பொருளையும் அது வாயில் வைத்துப் பார்க்கிறது.

காலப்போக்கில் இந்த 'நீ' என்னும் கண்ணோட்டத்துடன் 'நான்' உணர்வு இலேசாகத் தலைதூக்குகிறது. அம்மா வருவதையும் போவதையும் பார்க்கும் அது தான் வேறாக, தனியாக இருப்பதை உணர்கிறது. 'அம்மா இல்லாவிட்டாலும் நான் இருக்கிறேன்' என்று கோர்வையாக எண்ணுவதில்லை. இது

உள்ளுணர்வுதான். இதுதான் மொழி கற்கும்போது 'நான்-நீ' என்ற பிரிவுகளாகக் குழந்தையின் மனத்தில் பதிகிறது.

ஆகவே வாழ்க்கையில் முதலில் நீ என்பது வருகிறது. பிறகுதான் 'நான்' வருகிறது. இது சாதாரணப் பிறப்பு. ஆன்மிகத்தில் பக்குவம் பெற்று நீ புதுப்பிறவி எடுக்கும்போதும் நீ முதலிலும், நான் பிறகும் வரும். நீ என்பது போனபின் நான் அதிக நேரம் நிலைத்திராது. இந்த நான் என்பது நீ என்பதன் நிழல்போல் வந்தது. அவ்வாறே 'நீ'யின் நிழலபோல் நீங்கிவிடும். எனவே ஒரு துறவி 'நான்' என்று கூறினால், இன்னும் 'நீ' என்பது அவரை விட்டு நீங்கவில்லை என்பதைப் புரிந்துகொள். 'நீ' உணர்வு அவருக்கு அருகில் இங்குமெங்கும் உள்ளது. அதன் நிழல் 'நான்' மீது பட்டுக்கொண்டிருக்கிறது. 'நீ'க்குத்தான் 'நான்' என்பதைவிட அதிக மதிப்பு.

இந்த வேளையில் யோகி சுபாவம் இல்லாதவனாக ஆகிறான். இது 'நான்' என்று தன்னைப் பற்றி அவன் கூற முடியாது. இது வேடிக்கையான விஷயம். அவன் இருக்கிறான். ஆனால் அதை அவன் கூற முடியவில்லை. ஆகவே இந்த சுலோகத்தில் இந்த நிலையைச் சொற்களால் வர்ணிக்க முடியாது என்று சொல்லப்பட்டது.

சொந்த வீட்டிற்குத் திரும்பியாகிவிட்டது. ஆனால் இந்த நிலையை விளக்க இயலாது. யோகி வழக்கமான சுபாவத்திலிருந்து விடுபட்டு, விவரிக்க முடியாத சுபாவத்தைப் பெறுகிறான். அற்ப சுபாவத்திலிருந்து விடுபட்டு, பரந்து விரிந்த சுபாவத்தை அடைகிறான். இதன் பொருள் அவன் ஒன்றுமே இல்லாமல் போகிறான் என்பதாகும். சூன்யமாகிறான் என்பதாகும். ஒரு துளி தூசி அளவுகூட அவன் மிஞ்சியிருப்பதில்லை.

'யோகிக்கு சுவர்க்கமும் இல்லை, நரகமும் இல்லை. ஜீவன் முக்தியுமில்லை. இந்த விஷயத்தில் அதிகமாகச் சொல்லுவதால் என்ன பயன்? யோகியின் யோகப் பார்வையில் இவை ஒன்றுமே இல்லை.' **(சுலோகம் 256)**

இரு சொற்கள் கவனிக்கத் தக்கவை. பல மதங்கள் சுவர்க்கம், நரகம் என்னும் இரண்டு சொற்களைச் சுற்றி அமைந்துள்ளன. இந்துமதம் 'மோட்சம்' என்னும் மூன்றாவது சொல்லைக் கண்டுபிடித்தது. 'மோட்சம்' என்பதற்கான சரியான சொல் ஐரோப்பிய மொழிகளில் இல்லை. ஏனெனில் இந்தக் கோட்பாடே ஐரோப்பாவில் இல்லை. படிக்கட்டுகளிலேயே நிற்பவை.

ஆகவே ஐரோப்பிய மதங்களை முதிர்ச்சி அடையாதவை, படிக்கட்டுகளிலேயே நிற்பவை என்று கூறலாம். கிழக்கில்தான் சிகரம் சென்றடையப்பட்டது. நரகம் என்பது துன்பங்களின் விரிவாக்கமாகும். இது நமது அனுபவத்திற்கு உட்பட்டது. சுவர்க்கம் என்பதற்கு சுகங்களின் விஸ்தரிப்பு என்று பொருள். இதுவும் நமது அனுபவத்திற்கு உட்பட்டது. நாம் வாழ்க்கையில் இன்ப துன்பத்தை அறிந்துள்ளோம். சுகங்களை ஒரு பக்கமாகவும், துன்பங்களை இன்னொரு பக்கமாகவும் பிரித்துவைத்தோம். இரண்டையும் நிரப்பினோம். சுவர்க்கமும் நரகமும் தயாராகிவிட்டன. நாம் விரும்பியதையெல்லாம் சுவர்க்கத்தில் திரட்டினோம். நாம் வெறுத்ததையெல்லாம் நரகப் பிரிவில் தள்ளினோம். உலகை சுகம்-துக்கம் என்னும் இரண்டாகப் பிரித்தோம். சுவர்க்கமும் நரகமும் தோன்றிவிட்டன. அவை உலகைக் கடந்த வேற்று லகங்கள் இல்லை. இவ்வுலக அனுபவங்களின் இரு வகைகள்தாம் அவை.

நரகத்தில் என்ன நடக்கிறது? அங்கே மனிதர்களை தீயில் வாட்டுவார்கள் என்று கேள்விப்பட்டுள்ளோம். அது இந்த உலகத்தில் நமக்கு வழக்கமாக நடப்பதை அங்கே தொடர்கிறோம்.

சுவர்க்கத்தில் என்ன நடக்கிறது? மதுக்குளங்களின் அருகே, நிரந்தரமாகப் பசுமையாக உள்ள மரங்களின் கீழ் உட்கார்ந்து, பேரழகிகளுடன் மது பருகி ஆனந்தமாக இருப்போம் என மக்கள் நினைக்கிறார்கள். அது இவ்வுலகில் வழக்கமாக நடப்பதன் மிகைக் கற்பனையும் எதிர்பார்ப்பும் மட்டுமேயாகும்.

சுவர்க்கமும் நரகமும் உலகைக் கடந்தவையல்ல என்று அறிந்த கிழக்கு நாடுகளில் 'மோட்சம்' என்னும் புதிய சொல்

உருவாக்கப்பட்டது. மோட்சம் என்பது இன்பம்-துன்பம் இரண்டையும் கடந்த நிலையாகும். சுவர்க்கம்-நரகம் இரண்டிற்கும் அப்பாற்பட்ட நிலையாகும்.

அஷ்டாவக்ரரோ இந்த சிந்தனையையும் கடந்து, அனைத்திலும் உச்ச நிலையில் சுவர்க்கம்-நரகம் மட்டுமல்ல, மோட்சமும் கிடையாது என்று அறிவிக்கிறார். அவர் மோட்சத்தையும் கடந்த ஒரு விஷயம் பற்றி பேசுகிறார். இந்த அளவிற்கு ஆழமாக எந்த ஞானியும் சிந்தனை செய்ததில்லை. ஆகவேதான் அஷ்டாவக்ரரின் படைப்பை நான் **மகா கீதை** என்கிறேன். கிருஷ்ணர் நம்மை மோட்சம்வரை இட்டுச் சென்று அங்கே விடுகிறார். இயேசுநாதரும் மோட்சம்வரை கூறியுள்ளார். அஷ்டாவக்ரர் மோட்சத்துக்கு அப்பாலும் அழைத்துச் செல்கிறார்.

அஷ்டாவக்ரர் சுவர்க்கம்-நரகம் கிடையாது என்றும், அவை வெவ்வேறு சூழ்நிலைகளில் மனத்தின் உச்சக்கட்டமான உணர்ச்சி நிலைகள் மாத்திரமே என்கிறார். மோட்சம் என்பது நாம் இன்ப துன்பங்களின் இந்த உச்சக்கட்டமான நிலையிலிருந்தும் விடுதலை பெறுவதாகும். அந்த விடுதலை (முக்தி) அனுபவம் தற்காலிகமானது.

பல ஆண்டுகள் சிறையிலிருந்து விடுதலை பெற்ற கைதி வெளியே கொண்டுவரப்படுகிறான். விலங்குகள் நீக்கப்படுகின்றன. அவனுடைய சொந்தத் துணிகள் திருப்பியளிக்கப்படுகின்றன. அவன் வாசலைக் கடந்து சாலையில் வந்து நிற்கிறான். அப்போது அவன் பரிபூர்ணமான சுதந்திரத்தை அனுபவிக்கிறான். அந்த உணர்வு சில நாட்களே இருக்கும் என்றாலும், சாதாரணமாகச் சாலையில் செல்கின்ற மக்கள், சிறைக்கே சென்றிராதவர்கள் பூரணமான சுதந்திரம் என்ன என்பதை அறிய முடியாதவர்களாக இருப்பார்கள்.

அந்த கைதி ஆனந்தத்தால் நடுத்தெருவில் நடனமாடி னாலும் ஆச்சரியமில்லை. அவன் மக்களைப் பார்த்து, "நான் சுதந்திரமடைந்துவிட்டேன். இந்தத் திறந்த வானமும், சூரியன் சந்திரன்-நட்சத்திரங்களும் எவ்வளவு அழகு!" என்று கூறுகிறான். அதற்கு அவர்கள், "அதெல்லாம் சரிதான். அவை அழகுதான்.

ஆனால் அதற்காக நாங்கள் நடுத்தெருவில் கூத்தாடவில்லையே,'' என்பார்கள்.

அந்த மனிதன் அந்த சமயம் அனுபவிக்கின்ற உணர்வை பல்லாண்டுகள் சிறைவாசத்தின் பின்னணியில் வைத்துப் புரிந்து கொள்ள வேண்டும். சில நாள் கழித்து இந்த ஆவேசம் தணிந்ததும் அவன் தெருவில் துள்ளமாட்டான்.

இதுபோலவே மனிதன் உலகம் என்னும் சிக்கலான வலையிலிருந்து விடுதலை பெற்று அந்த சுதந்திர உணர்வில், மோட்சம் பெற்றுவிட்டதற்காக குதூகலமடைகிறான். இந்த உற்சாகத்தை உலகம் என்னும் பின்னணியில் வைத்துப் பார்க்க வேண்டும். சில நாட்களில் இந்த உற்சாகம் காணாமல் போய்விடும். மோட்ச சந்தோஷமும் நிரந்தரமானதன்று.

புத்தர், மகாவீரர், மீராபாய், கபீர்தாசர் முதலிய ஞானிகள் அனைவருமே ஒரு கட்டத்தில், மறுபிறவி என்பதைக் கடந்துவிட்டோம் என்பதை உணர்ந்து நடனமாடியிருப்பார்கள். அதுவும் சிறிது காலத்திற்குத்தான். பிறகு வழக்கமான, கம்பீரமான நிலைக்குத் திரும்பியிருப்பார்கள்.

கைதி நீண்ட காலம் சிறையில் இருந்தால் அவன் வெளி வந்த பிறகும் சிறிது காலம் சிறையின் நிழல் (பாதிப்பு) அவன்மீது படிந்திருக்கிறது. அதனால்தான் வெளியுலகில் அவன் மற்றவர்களைவிட சுதந்திரத்தை அதிகமாக அனுபவிக்கிறான்.

உலகமும் ஒருவகைச் சிறை. சுவர்க்கமும் நரகமும் அதற்குள்ளேயே இருக்கின்றன. எனவே சுவர்க்கம்-நரகம் கடந்த மோட்ச நிலையை அடையும் மனிதன் புதிதாக சுதந்திரக் காற்றை சுவாசித்துத் துள்ளுகிறான். ஆனால் அஷ்டாவக்ரரின் யோகி மோட்சத்தையும் கடந்து செல்வதால் அவனது யோகப் பார்வையில் சுவர்க்கம், நரகம், முக்தி (மோட்சம்) சுகம், துக்கம் என்று எதுவுமில்லை.

மோட்சத்தைக் கடந்த நிலையில் யோகியே மிஞ்சியிருப்ப தில்லை. வேறு என்ன மிஞ்சும்? இப்படி இல்லாமல் போகும்

நிலையை புத்தர் மகாசூன்யம் அல்லது நிர்வாணம் என்பார். அகங்காரம் என்னும் தீபம் அணைந்துபோகிறது.

'ஆன்ம வீரனின் உள்ளம் அமிர்தம் நிறைந்து குளிர்ச்சி யானது போன்றது. ஆகவே அவன் எந்த லாபத்திற்காகவும் வேண்டிக் கொள்வதில்லை. எந்த நஷ்டத்திற்கும் ஒருபோதும் கவலைப்படுவதில்லை' **(சுலோகம் 257)**

**கு**ளிர்ச்சி (குளுமை) என்னும் சொல் முக்கியம். அமிர்தத்துடன் முதல் முறை தொடர்பு ஏற்படுகையில், நிரந்தரப் பொருளுடன் சம்பந்தப்படுகையில், அபூர்வமான மகிழ்ச்சி உண்டாகிறது (ecstacy). சாதகன் சமாதியில் ஆழ்கிறான். தனக்குள் பல சூரியன்கள் உதித்ததுபோல், பல தாமரைகள் மலர்ந்ததுபோல் உணர்கிறான். எங்கும் நறுமணத்தை உணர்கிறான். எங்கும் எழிலைக் காண்கிறான்.

ஒரு விசேஷ சக்தி வெடித்துக் கிளம்புகிறது. தூசி-குப்பை நீங்கியது. நைந்து பழையதானவை நீங்கின. புதுமை எதிலும் தெரிந்தது. சாவு நினைவு நீங்கியது. பிறவிச் சக்கரம் சுழல்வது நின்றது. இனி வருவதும் போவதும் கிடையாது. அமிர்த ஸ்பரிசம் கிடைத்ததால் இனி அழிவும் கிடையாது. சதங்கை அணிந்து ஆடத் தோன்றும். இந்த உணர்ச்சிக் கொந்தளிப்பும் காலப்போக்கில் தணிந்து விடும். ஆகவே குளுமை (சீதளம்) என்னும் சொல் இந்த சுலோகத்தில் வருகிறது.

இதனால்தான் ஆன்மவீரன் இந்த சாந்தநிலையை அடைந்தபின் எதையும் (லாபம்) எதிர்பார்ப்பதில்லை; நஷ்டத்திற்காக வருந்துவதில்லை. இனி எதையும் இழப்பதோ, பெறுவதோ இல்லை. இனி எங்கும் போக வேண்டாம். பயணம் முடிந்துவிட்டது. சேருமிடம் வந்துவிட்டது. இனி இயக்கம் கிடையாது. எல்லாம் நின்றுவிட்டது. இதுவே சமாதி; பதஞ்சலி கூறும் நிர்விகல்ப (choiceless) சமாதி. இதுவே பரம சூன்யமான, சாந்தமான, சீதளமான நிலை.

**ஹரி ஓம் தத்ஸத்!**

## முதல் கேள்வி

**ஓஷோ அவர்களே! என் மனத்தில் ஒரு கேள்வி எழுகிறது. முதல் முறையாக எழுகிறது. நீ யார்? நீ எங்கே உள்ளாய்? நான் என்னை முழுமையாக அறிமுகம் செய்து கொண்டுவிட்டால் நன்றாக இருக்கும். அறிமுகம் இன்றி இருவர் எப்படி ஒன்ற முடியும்? நான் கடவுளின் தர்பாரைச் சென்றடைய விரும்புகிறேன்.**

**நீ** அதிகமாக உணர்ச்சிவசப்படுவதாகத் தோன்றுகிறது. இதனால் நீ உன்னையே ஏமாற்றிக்கொள்ளும் ஆபத்து உள்ளது. நீ உன்னைத் தயாரித்துக் கொண்டு கிளம்பும் முன் கடவுளுடன் அறிமுகம் ஏற்பட்டால் நன்றாக இருக்குமென உனக்குத் தோன்றுகிறது.

அரசனின் தர்பார் வேறு; கடவுளின் தர்பார் வேறு. நீ உன்னைத் தகுதியாக்கிக் கொண்டு கடவுளின் தர்பாருக்குப் போக விரும்புகிறாய். அந்தத் தகுதியை நிச்சயிப்பது யார்? நீயே நிச்சயிப்பது. பிறகு நீயே தகுதி பெற்றுவிட்டதாக நினைப்பது உன் அகங்காரமேயாகும். மற்ற இடங்களில் நடிக்கும் நீ கடவுளின் தர்பாருக்காவது நீ எப்படி உள்ளாயோ அப்படியே போகக் கூடாதா? கடவுளின் முன்னிலையில் நீ ஒன்றும் இல்லாதவனாக, அஞ்ஞானியாக, அப்பாவியாக நிற்க முடியாதா? அங்குமா 'நான் யார் தெரியுமா?' என்னும் அகங்காரத்தை எடுத்துக்கொண்டு போவாய்?

நீ கூறியது பெரிய விஷயம்போல் தோன்றுகிறது. ஆனால் அதன்மூலம் அகங்காரம் என்னும் நீசத்தனமான விஷயத்தை

மறைக்கிறாய். இது உடல் நாற்றத்தை மறைக்க வாசனைப் பொருள்களை உபயோகப்படுத்துவது போலாகும்.

நீ இருக்கின்றபடியே கடவுளின் தர்பாரை நோக்கிச் செல். விசேஷமான, போலித்தனமான ஏற்பாடுகள் செய்யாதே. அலங்கரித்துக் கொள்ளாதே. நீ உன்னை அங்கே வேறு விதமாகக் காட்டிக்கொள்ளத் தேவையில்லை. உன் வருகை குறித்துக் கடவுள் எந்த நிபந்தனையும் விதித்து வைத்திருக்கவில்லை. மடாதிபதிகள், ஆசிரமத்து சந்நியாசிகள் நீ தம்மிடம் வர நிபந்தனை விதிப்பார்கள். 'தீட்சை பெறு, தவம் செய், தியாகி ஆகு, குறிப்பிட்ட விதமாக நடந்துகொள், புண்ணியம் தேடு' என்றெல்லாம் அவர்கள் கூறும் நிபந்தனைகளை நிறைவேற்றி உன்னைத் தகுதியாக்கிக் கொள்ள இந்த ஒரு பிறவி போதாது.

நீ எப்படி இருந்தாலும் சரி, புண்கள் நிறைந்தவனாக, புழுதி மண்டியவனாக, அசுத்தமானவனாக, அழகற்றவனாக, அறிவிலியாக இருந்தாலும் கடவுளைக் கூப்பிடு. அப்படியே அவரை நோக்கிப் பயணி கடவுள் உன்னை வரவேற்பார். நீ திருடனாக இருந்தாலும், நேர்மையற்றவனாயினும் வரவேற்புப் பெறுவாய். ஏனெனில் நீ எப்படி இருக்கிறாய் என்று கடவுள் பார்ப்பதில்லை. நீ பூசி மெழுகாமல், ஒப்பனை செய்துகொள்ளாமல் அப்படியே வருகிறாயா என்றே அவர் கவனிக்கிறார்.

அவர் உன்னை ஏற்றுக்கொண்டுதான் ஆக வேண்டும். அவரால்தானே நீ ஏற்பட்டாய். அவரின் உதவியன்றி நீ எதுவாகவும் ஆகியிருக்க முடியாது. திருடனாகக்கூட ஆகிவிட முடியாது. நீ திருடச் செல்லும்போது அவர்தான் உனக்குள்ளே மூச்சுவிடுபவராக இருக்கிறார். நீ பாவம் செய்யப் போனபோதும் அவர்து உதவியுடன்தான் சென்றாய். நீ சொந்தமான முயற்சியால் எங்கும் போக முடியாது. அவர் தரும் வலிமையின்றி உன்னால் நடக்க முடியாது. நீ எப்போதும் அவரது வில்லில் பூட்டிய அம்பாக இருக்கிறாய். நீ எந்த இலக்கையும் தகர்த்ததில்லை. உன் எல்லா லட்சியங்களின் பூர்த்தியிலும் அவர் தரும் சக்திதான் உன்னை இயக்குகிறது.

இதை நீ தெரிந்துகொண்டால் கடவுளின் தர்பாருக்குச் செல்ல உன்னைத் தயாரித்துக்கொள்ளப் போவதாகவெல்லாம் சொல்லமாட்டாய். நீ நினைப்பது என்ன? 'முதலில் ஏதாவது ஏற்பாடு செய்துகொள்கிறேன். என்னைத் தகுதியுடையவனாக ஆக்கிக் கொள்கிறேன்' என்கிறாய். அதனால்தான் 'தர்பார்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறாய். கடவுளின் இல்லம் அது, தர்பாரில்லை. தர்பார் என்பது அரசர்கள் விஷயத்தில்தான் பொருந்தும். அங்கே போக தயாரிப்புத் தேவைதான். அடிப்படையில் அரச தர்பாரில் மதிப்பு உனக்குத் தரப்படவில்லை; உன் பகட்டலங்காரத்துக்குத்தான் மதிப்பு.

மிர்ஜா காலிப்* வாழ்வில் ஒரு நிகழ்ச்சி. அரசர் பகதூர் ஷா அவரை தர்பாருக்கு விருந்துண்ண அழைத்திருந்தார். தலைநகரின் முக்கியமானவர்களும் அழைக்கப்பட்டிருந்தனர். காலிப் ஏழை. கடனிலும் மூழ்கியிருந்தார். அவரிடம் நல்ல உடைகளும் இல்லை. பிறகு அவர் 'எனக்கு அழைப்பு வந்துள்ளது. நான் எப்படி உள்ளேனோ அப்படியே செல்வேன்' என்று முடிவெடுத்தார். நண்பர்கள் அப்படிப் போகக்கூடாது என்று கூறித் தங்களிடமிருந்த நல்ல ஆடைகளையும், காலணிகளையும் கொண்டுவந்து தந்தனர். அவற்றை அணிவதா, வேண்டாமா என்று காலிப் யோசித்தார், 'என் துணிகள்தாம் எனக்குச் சொந்தம். மற்றவர்கள் தந்துள்ள ஆடைகள் உயர் ரகமானவை என்றாலும் அவை இரவல்தானே. எதற்காக நான் இந்தப் பொய்யைச் சுமக்க வேண்டும்?'

அவர் மனத்தை தைரியப்படுத்திக் கொண்டு தன்னிடமிருந்த பழைய ஆடைகளையே அணிந்து அரண்மனைக்குச் சென்றார். நண்பர்கள் எச்சரித்திருந்தபடியே அவரைக் காவலர்கள் உள்ளேவிட மறுத்தனர். அவரிடமிருந்த அழைப்பைப் பிடுங்க முயன்றனர். அதை அவர் திருடிக் கொண்டு வந்துவிட்டதாகக் குற்றம் சாட்டினர். அவரை அங்கிருந்து விரட்டினர்.

---

* (1796-1869) உருது மொழியில் தலைசிறந்த கவிஞர். ஆனால் வாழ்க்கையில் அவர் அனுபவித்தது தோல்வியும், துன்பமும் வறுமையுமே. காலிப் என்றால் வெற்றி வீரன் என்று பொருள்!

காலிப் மிகவும் வருத்தமாகவும் அவமானமாகவும் உணர்ந்தார். அவர் தடுக்கப்பட்டது அரசருக்குத் தெரியாது என்பதால், காலிப் தான் விருந்திற்குப் போகாவிடில் அரசர் தன்னை அவமதித்ததாகக் கருதிக் கோபம் கொள்வார் என்று அவர் மனத்துக்குள் பலமாகச் சிரித்தபடி வீடு திரும்பினார். நண்பர்கள் தந்திருந்த ஆடம்பர உடைகளை அணிந்து மீண்டும் அரண்மனைக்குச் சென்றார். அதே காவலர்கள் அவரை அடையாளம் கண்டுபிடிக்காமல் குனிந்து சலாம் செய்து மரியாதையாக உள்ளே அழைத்துச் சென்றனர்.

அரசர் காலிப்பை தன் அருகிலேயே உட்காரவைத்தார். பல பிரமுகர்கள் அங்கிருந்தும் அரசர் கவிதைத் திறமைக்கு மிகுந்த மரியாதை தருபவராக இருந்தார். அவரே அவ்வப்போது பாடல்கள் புனைவதுண்டு. ஆகவேதான் அவர் காலிப்பிற்கு விசேஷ மரியாதை தந்தார். அப்போது காலிப் விருந்தில் பரிமாறப்பட்ட பொருட்களைக் காண்பித்து, "ஏ கோட்டே, இதைச் சாப்பிடு ஏ சட்டையே, இதைச் சாப்பிடு. ஏ தலைப்பாகையே, இதைச் சாப்பிடு," என்று சொல்லலானார்.

அரசர் திகைத்துப்போய்க் காரணம் கேட்டார். ஒருவேளை காலிப் அளவுமீறிக் குடித்துவிட்டு வந்திருக்கிறாரோ என நினைத்தார். அதை ஊகித்த காலிப், "பாதுஷா அவர்களே! நான் துளிக்கூடக் குடித்திருக்கவில்லை. உண்மையில் இங்கு வந்துள்ளவன் நானில்லை. இந்த ஆடைகள்தாம் வந்துள்ளன. ஆகவே அவையே விருந்துண்ணட்டும். அழைப்பு எனக்குத்தான் அனுப்பியிருந்தீர்கள். வாயிற்காவலர்கள் என்னை உள்ளே வர அனுமதிக்கவில்லை. நான் வீட்டிற்குத் துரத்தப்பட்டுவிட்டேன்," என்று விளக்கினார்.

இது மனிதர்களின் தர்பார். நீ கடவுளின் தர்பாரும் இப்படித்தான் இருக்கும் என நினைக்கிறாயா? நீ அங்கே எப்படிச் சென்றாலும் ஏற்றுக்கொள்ளப்படுவாய்.

கடவுளைச் சந்தித்தல் என்பதன் அர்த்தமென்ன? அவர் உன்னிடமிருந்து விலகித் தனியாக உட்கார்ந்திருக்கவில்லை. நீ

அங்கே போய்க் கதவைத் தட்டி உள்ளே அழைக்கப்படுவாய் என்னும் நிலை இல்லை. கடவுள் உனக்குள்ளே அமர்ந்திருக்கிறார். அவரது தர்பார் உனக்குள்ளேதான் இருக்கிறது. உன் சுபாவம்தான் அந்த தர்பார்.

நீ உன்னை அறிந்துகொண்டு பிறகு கடவுளை அறிதல் என்பது சாத்தியமே இல்லை. உன்னை நீ அறிந்தால் கடவுளை அறிந்துகொண்ட மாதிரிதான். இவை வெவ்வேறு நிகழ்ச்சிகள் அல்ல. ஒரே நிகழ்ச்சி இரண்டு பலன் தருகிறது. உன்னை அறிந்தபின் கடவுளை அறியலாம் என்னும் எண்ணத்தைக் கைவிடு. நீ உன்னை யார் என நினைக்கிறாயோ அது வாஸ்தவத்தில் நீ இல்லை. 'நான் உடல், நான் மனம், நான் இந்த மதத்தவன், நான் இந்த ஜாதிக்காரன், நான் இந்த நிறத்தவன், நான் இந்த பிராயத்தினன்' என்று நீ நினைக்கும் எதுவும் உன் நிஜத்தன்மைக்குப் பொருந்தாது. இவையெல்லாம் உடலும் மனமும் சேர்ந்த இணைப்புகளின் பெயர்கள். நீ இவற்றைக் கடந்து இருக்கிறாய். நீ சாட்சி (பார்வையாளன்). அந்த சாட்சித் தன்மையில் பிரவேசிப்பது பரமாத்மாவில் பிரவேசிப்பதாகும்.

உலகத்தில் நிலவும் நடைமுறைகளும், உள்ளுலக நடைமுறைகளும் வெவ்வேறானவை. இங்கே பணம், பதவி, அந்தஸ்து பெறப் போராட வேண்டியிருக்கிறது. எங்கும் எதற்கும் பலத்த போட்டி. மற்றவர்கள் பிடுங்குவதால் நீயும் பிடுங்கித்தான் எதையும் பெற முடியும். ஏனெனில் உனக்கொன்று கிடைத்தால் அது இன்னொருவனுக்குக் கிடைக்காது. இதை மாற்றியும் சொல்லலாம். இங்கே இரண்டு வழிகள்தாம் உள்ளன—பிடுங்கு, பிடுங்கவிடு!

உள்ளுலக நடைமுறைகள் வேறானவை. நீ அங்கே ஞானி ஆவதற்காக இன்னொருவன் முட்டாளாக வேண்டியதில்லை. இன்னொருவனும் ஞானியாக ஆக முடிந்தால், உன்னுடையது எதுவும் பறிபோகாது. உள்ளுலகில் போட்டி எதுவும் கிடையாது. அங்கே போராடி எதையும் பெறவேண்டியதில்லை. அங்கே எதுவும் முயற்சியின்றியே கிடைத்துவிடும். எங்கும் போக-வரத் தேவையில்லை.

தியானம் என்பது என்ன? ஓரிடத்தில் அமர்வதுதான். உடலால் அமர்வதுடன் உள்ளத்தாலும் அமர வேண்டும். இதுதான் ஆசனம் என்பதும். அதாவது. இருக்கை (seat). உட்கார்ந்தபின் அசைவதில்லை. போவது-வருவது இல்லை. பூ நடுக்கம்கூட இல்லை. அசைவின்றி உள்ளே உட்கார்ந்துவிட்டாய். அங்குதான் சந்திப்பு நிகழ்கிறது.

வெளியே செல்ல வேண்டுமாயின் (உதாரணமாக தில்லிக்கு) நீ பயணம் மேற்கொள்ள வேண்டும். ஆனால் உனக்குள் செல்ல நீ பயணத்தைக் கைவிட வேண்டும். வெளியே தேட, கண்களைத் திறந்துவைத்திருக்க வேண்டும். உள்ளே தேட, கண்களை முழுமையாக மூடிக்கொள்ள வேண்டும். வெளியில் எதுவும் செய்ய உடலை இயக்க வேண்டும். உள்ளே எதுவும் செய்ய உடலைக் கருவியாகக் கொள்ள முடியாது. வெளியே செல்ல உடல் என்னும் குதிரை தேவை. உள்ளே செல்ல உடல் தேவைப்படாது. வெளியே செல்ல முதலில் யோசனை செய்ய வேண்டும். உள்ளே செல்ல எண்ணங்களே கூடாது.

வெளியுலகம் அறிவியல்படி இயங்குகிறது. காரணம், பிறகு காரியம் என்பது விஞ்ஞான நடைமுறை (cause and effect). முதலில் தாய், பிறகு குழந்தை. முதலில் விதை-பிறகு மரம். இந்த நடைமுறையில் மாற்றம் கிடையாது.

உள்ளுலகத்தில் இதற்குத் தலைகீழாக நிகழ்கிறது. அங்கு விளைவு முதலில், காரணம் பிறகு. முதலில். குழந்தை. பிறகு தாயார்! வெளியுலக கணிதம் இங்கே செல்லாது.

வெளியுலகம் தர்க்க சாஸ்திரத்தை ஆதாரமாகக் கொண்டதாகும். அதன்படி, நீ உன்னை அறியாதவரையிலும் கடவுளை எப்படி அறிவாய்? முதலில் நாமே யாரென்று தெரியவில்லையே. கடவுளை எங்கே தேடுவாய்? உன்னை நீ அடைய முடியாத நிலையில் இன்னொன்றை எப்படிப் பெறுவாய்? உனக்கே சுயநினைவு இல்லாதபோது கடவுளை நோக்கி எப்படிப் பயணிப்பாய்.

கள் குடித்துவிட்டு தடுமாறியபடி வரும் ஒருவன் “கடவுளைத் தேடப் போகிறேன்,” என்று சொன்னால் நீ என்ன

கூறுவாய்? 'இந்தாப்பா, நீ முதலில் சுயநினைவுக்கு வா. உன்னால் கால்களை நேராக ஊன்ற முடியவில்லை. சரியான திசையில் போக முடியவில்லை. இந்தக் கோலத்திலா நீ கடவுளைத் தேடிப் போகிறாய்? நீ நல்ல உடல்நிலையில் இருந்து தேடினால்கூட கடவுள் கிடைப்பதில்லையே,'' என்று அறிவுறுத்துவாய்.

வெளியுலகில் இந்த வாதம் எடுபடும். ஆனால் உள்ளுலகில் கள் குடித்ததுபோல் தள்ளாடியபடி வருகின்றவர்களே பிரவேசிக்க முடிகிறது. நீ எப்படியோ அப்படியே உன்னை உள்ளே வரவேற்க வேண்டும். உள்ளே இருக்கும் கடவுளும் உனது நேர்மைக்காக உன்னை வரவேற்பார். ஆனால் யதார்த்ததை மறைத்து தந்திரங்கள் செய்தால் நீ உள்ளே புக முடியாது. உள்ளே ஒப்பனைக்கு மதிப்பில்லை.

கடவுளிடம் உன் சுய ரூபத்தை ஏன் மறைக்க வேண்டும்? உன்னைப் படைத்தவர் எதிரில் நீ ஏன் வித்தியாசமாக நடிக்க வேண்டும்? யாரிடமிருந்து தோன்றினாயோ அவரிடமிருந்து உன்னை எப்படி மறைத்துக் கொள்வாய்? நீ பாவியா, கெட்டவனா, நல்லவனா? நீ எப்படி உள்ளாயோ அப்படியே பயணித்தால்தான் கடவுளின் இடத்திற்குப் போய்ச்சேருவாய். போய்ச் சேர்ந்தால் உனக்குள் ஒரு புரட்சி நிகழும். இதுவரைப் போய்ச் சேர்ந்தவர்கள் பலத்த மாறுதல்களுக்கு உள்ளாகியிருக்கின்றனர்.

## இரண்டாவது கேள்வி

**ஓஷோ அவர்களே! உலகக் கடலைக் கடந்து பரம ஆத்மாவில் கலந்துவிடுவதற்கு ஜட பக்தி, மூட பக்தி, குருட்டு பக்தி என்னும் மூன்றில் எதைப் பின்பற்றுவது?**

இந்தக் கேள்வியே ஒரு பக்தனின் கேள்விபோல் இல்லையே. பக்தியை இப்படியெல்லாம் ஏசுகிறாயே.

பக்தன் ஒரு பக்தியைத்தான் அறிந்திருக்கிறான். பக்தியைப் பல வகைகளாகப் பிரித்து அவன் ஆராய்ச்சி செய்வதில்லை. ஞானிகள்தாம் எத்தனை விதமான பக்தி உண்டு என்று அறிந்துள்ளனர். பக்தன் ஒன்று என்ற எண்ணிக்கைக்கு மேல் அறிந்திருக்கவில்லை!

இயேசுநாதரைப் பற்றி ஒரு கற்பனைக்கதை. அவர் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தார். கணித ஆசிரியர் கூட்டல் சொல்லித் தந்தார். ஒன்றும் ஒன்றும் சேர்ந்தால் இரண்டு என்றார். இயேசுநாதர், "சார்! அது தெளிவாகப் புரிகிறது. ஆனால் ஒன்று என்றால் என்ன? அதை முதலில் விளக்குங்களேன்," என்றார்!

பாவம்! ஆசிரியர் திகைத்துப் போனார். என்ன பதில் சொல்ல முடியும்? ஒன்று என்பதை புத்தர், கிருஷ்ணர் போன்றவர்கள்தானே விளக்க முடியும். உலகில் எளிய விஷயங்களை விளக்குவதுதான் மிகவும் கடினம். இரண்டு என்னும் எண்ணை 1+1 எனப் பிரித்துச் சொல்ல முடியும். ஆனால் ஒன்று என்பதைப் பிரிக்க முடியாது. பிரிக்க முடியாத விஷயம் பற்றிய கேள்விக்குப் பதிலும் கிடைக்காது.

வானவில் என்பது என்ன என்று கேட்டால் நீ ஏழு வண்ணங்களின் வரிசை என்பாய். உன்னால் அந்த நிறங்களை அதேவரிசையில் சொல்லவும் முடியும் (VIBGYOR). ஆனால் அதில் தெரியும் மஞ்சள் நிறம் என்றால் என்ன என்று கேட்டால் என்ன சொல்வாய்? கடினமான (complex) விஷயங்களைப் பிரித்துப் போட்டு விளக்க முடியும். வானவில்லை இப்படி ஏழாகப் பிரிக்கிறோம். ஆனால் ஒரு நிறத்தை விளக்குவது கடினம்.

மேற்படிக் கதையில் ஆசிரியர் எரிச்சலடைந்தார். இயேசுநாதரின் பெற்றோரைக் கூப்பிட்டு, "உங்கள் மகனை வீட்டிற்குக் கூட்டிப்போய் விடுங்கள். இவன் முதல் பாடத்திலேயே தகராறு செய்கிறான். இவன் இங்கிருந்தால் மற்ற பிள்ளைகளையும் கெடுத்துவிடுவான்," என்றார்!

வாழ்க்கையின் கடைசியில் வரும் கேள்விக்குப் பதிலை இயேசுநாதர் இப்பொழுதே கேட்டால் ஆசிரியர் திணறித்தானே போவார். பல்கலைக்கழகப் படிப்பின் முடிவில்கூட பதில் கிடைக்காத கேள்வியை, வாழ்க்கையின் கடைசிக் கட்டத்தில்கூட பதில் கிடைப்பது சந்தேகமான கேள்வியை சிறுவர் இயேசு தொடக்கப்பள்ளியில் கேட்கிறார்!

ஒரு சிறுவனிடமிருந்து இதுவரை எவருமே வகுப்பில் கேட்காத கேள்வியைத் திடீரென இயேசுநாதர் கேட்டதால்

ஆசிரியர் அதிர்ச்சியடைந்தார். ஒன்றும் ஒன்றும் இரண்டு என்று சொன்னவர் ஒவ்வொரு பொருளைக் காட்டியிருக்க முடியும். ஆனால் இயேசுநாதர் கேட்டது ஆன்மிக இயலைச் சார்ந்த கேள்வி.

ஒன்றை மட்டும் வழிபடத் தேர்ந்தெடுத்து அதிலேயே லயிப்பவன், இன்னொன்று இல்லாதவன் (அனன்ய), பக்தன் ஆவான். அவன் விஷயத்தில் இரண்டு என்பது கிடையாது. அவன் அந்த ஒன்றின் அடையாளம் அறிந்துகொண்டவன்.

பக்தியின் வகைகள் பற்றிய இந்தக் கேள்வியில் சிறிது ஞானமும் கலந்திருக்கிறது. பக்திக்கு ஞானம் இடையூறானது. பக்தியின் அடிப்படை அன்பு. அன்பு காரணமில்லாமல் ஏற்படுவது. எனவே ஞானி பக்தி என்று நிறுத்திக் கொள்ளாமல் குருட்டு பக்தி என்கிறான். ஆனால் ஞானிக்கு அன்பு வழியைப் பற்றி விசேஷமாக என்ன தெரியும்? அதனால்தான் ஞானிகள் பக்தி பலவகைப்படும் என்று நினைத்து ஒவ்வொன்றிற்கும் பெயர் வைத்திருக்கிறார்கள்.[1]

உனக்கு பக்தி இருந்தால் போதும். அது எந்த வகை பக்தி என்ற ஆராய்ச்சி வேண்டாம். உன் பக்தி ஜட பக்தியா, மூட பக்தியா, குருட்டு பக்தியா என்ற கவலை வேண்டாம். உனது பக்தியை உலகம் குருட்டு பக்தி என்று இகழ்ந்தால் அதைக் காதில் போட்டுக்கொள்ளாதே. பக்தியின் காரணமாக உனக்குப் புதிய பார்வை கிடைத்துள்ளதை உலகம் அறிந்திருக்கவில்லை. மற்றவர்கள் வாழ்வில் பக்தி இல்லாத நிலையில் நீ பக்தயுள்ளவன் என்று கூறுவதை உலகம் ஆதரிக்காது.

எச்.ஜி. வெல்ஸின்[2] ஒரு கதையில் மெக்சிகோவில் ஒரு கிராமத்தில் பிறக்கும் குழந்தைகள் எல்லோரும் பார்வை

---

1 நாரத பக்தி சூத்திரம் பக்தியின் ஒன்பது வகைகளைக் கூறுகிறது: இறைவன் புகழ் கேட்டல், போற்றுதல், நினைவுபடுத்திக் கொள்ளல், திருவடி தொழுதல், அருச்சித்தல், வந்தனம் செய்தல், ஊழியம் செய்தல், நட்புப் பாராட்டல், சரணாகதி.

2 H.G.Wells (1866-1946) The Time Machine என்றும் புகழ்பெற்ற நாவலை எழுதிய ஆங்கிலேய எழுத்தாளர்.

இழந்தவர்களாகவே இருக்கின்றனர். வேறு கிராமத்திலிருந்து ஒற்றைக் கண்ணன் ஒருவன் வழி தவறி இந்த கிராமத்துக்கு வந்து விட்டான். அவன் ஒற்றைக் கண்ணால் கண்டதை சொல்லும் போதெல்லாம் மற்றவர்கள் நம்பவில்லை. காரணம், அவர்கள் அவனுக்கு ஒரு கண் நல்ல நிலையில் உள்ளதைப் பார்க்க முடியவில்லை.

அக்கிராமத்துப் பெண் ஒருத்தி அவரை நேசித்தாள். ஒற்றைக் கண்ணரும் அவளை விரும்பினார். ஆனால் கிராம மக்கள் ஒரு நிபந்தனை விதித்தனர். "எங்கள் கிராமத்தில் இந்தப் பெண் உள்பட யாருக்கும் பார்வை கிடையாது. ஆகவே நீ எங்களில் ஒருவனாக ஆக முடியாது. நீ உன் கண்ணைப் பிடுங்கி விட்டு எங்களைப்போல் ஆனால்தான் எங்கள் ஊர்ப்பெண்ணை நீ மணக்கலாம்" என்று கிராமத் தலைவர் மக்கள் சார்பில் அறிவித்து விட்டார்.

அந்த மனிதன் யோசித்து முடிவுகூற ஓர் இரவு அவகாசம் கேட்டான். இரவு முழுதும் 'கண்ணா? காதலா?' என்று தனக்குள் விவாதித்துப் பார்த்தான். கடைசியில் அவன் 'காதல் எங்கும் கிடைக்கும். கண் போனாலோ பார்வை போவதுடன் புதிய காதலும் கிடைக்காது' என்பதை உணர்ந்து இரவோடிரவாக அவன் கிராமத்தைவிட்டு ஓடிப்போனான்!

அன்பு பார்வை தருகிறது. சிலவற்றை அன்பின் மூலமே காணலாம். வேறு விதத்தில் அவற்றைப் பார்க்க முடியாது. கடவுளை தர்க்கத்தின் மூலம் காண முடியாது. அன்பு மூலம்தான் அவரது தரிசனம் கிடைக்கும். அழகையும் அன்பின் மூலம்தான் காண முடியும். அதற்கு தர்க்கம் உதவாது. உனக்கு பக்தியில் ஈடுபாடு உண்டெனில் ஞானிகள் கூறும் பக்தியின் வகைகளில் அக்கறை செலுத்தாதே. பக்தி மொத்தமே ஒன்றுதான். அது இரண்டாகக்கூடப் பிரிவதில்லை.

'உலகக் கடலைக் கடத்தல்' என்பதுகூட ஞானிகளின் மொழியே தவிர, பக்தனின் மொழியில்லை. ஞானி உலகம் சலித்துப்போய் அதைக் கடப்பது எப்போது என ஏங்குகிறான். பக்தனுக்கு உலகின் மீது வெறுப்பில்லை. உலகம் அவனுக்குக்

கடவுளின் பிரதிபிம்பம். அவன் உலகக் காட்சிகளில், ஒலிகளில், வண்ணங்களில், ருசிகளில் அவன் பரமாத்மாவின் சௌந்தர்யத்தையே உணர்கிறான். அவனுக்கு உலகம் பயங்கரமான கடல் இல்லை; அழகிய நந்தவனம்.

'உலகக் கடல்' என்னும் சொல் உனக்கு வெறுப்பேற்றினால், அதைப் படைத்த கடவுளிடம் மட்டும் எப்படி ஈடுபாடு இருக்க முடியும்? 'ஓவியம் பிடிக்காது, ஓவியனைப் பிடிக்கும். சங்கீதம் பிடிக்காது, பாடகனைப் பிடிக்கும். நடனம் பிடிக்காது, நடனக்காரரைப் பிடிக்கும்' என்று சொல்வதுபோல்தான் 'உலகைப் பிடிக்காது, கடவுளைப் பிடிக்கும்' என்று சொல்வதும். ஏனெனில் இவற்றைத் தனித்தனியாகப் பிரித்துப் பார்க்க முடியாது, பார்க்கவும் கூடாது.

படைப்பிலிருந்து கடவுளைப் பிரித்துப் பார்ப்பது அவரை அவமதிப்பதாகும். பக்தன் அப்படிப் பிரிக்கமாட்டான். அவன் மோட்சம் பற்றி பேசுவதில்லை. இவ்வுலகையே அவன் மோட்ச உலகென நினைக்கிறான். இது புரட்சிகரமான கண்ணோட்டம்.

ஞானிக்கு மோட்சம் வேறு எங்கோ உள்ளது. உலகக் கடலிலிருந்து விடுதலை கிடைத்தால் அக்கரையில் மோட்சம் உள்ளது என்கிறான். அவன் கூறும் மோட்சம் வாழ்க்கைக்கு எதிரானது. வாழ்க்கை எப்போது முடிந்து, பிறவித் தொடர் முடிவடையுமோ அப்போது ஏற்படும் நிலையை ஞானி மோட்சம் என்கிறான்.

ஞானி கூறும் மோட்சம் சற்று பலகீனமானது. அவனால் இந்த உலகைச் சமாளிக்க முடியவில்லை. பக்தனின் மோட்சம் வலுவானது. 'உலகம் இருந்துவிட்டுப் போகட்டுமே. இன்னும் எத்தனை உலகம் வேண்டுமானாலும் இருக்கட்டுமே. எனது முக்திக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை. பல சோதனைகள், கட்டுப்பாடுகள் இருந்தாலும் எனது முக்தி அழிந்து விடுவதில்லை' என்பது பக்தனின் கண்ணோட்டம்.

உன்னைச் சிறையில் தள்ளினாலும் நீ உன்னைச் சுதந்திரமானவன் என உணர்ந்தால் அந்த சுதந்திரம் பூரணமானது.

வாழ்க்கையில் சுகமான சூழ்நிலையில் நீ மகிழ்ச்சியாக இருந்தால் அதில் ஒன்றும் சிறப்பில்லை. துன்பமான சூழ்நிலையிலும் நீ நகைத்தால் அந்தப் புன்னகை மதிப்பு வாய்ந்தது. காலில் முள் குத்தினாலும், கழுத்தில் தூக்குக்கயிறு மாட்டப்பட்டும் நீ புன்னகை செய்தால் அந்தப் புன்னகையின் சிறப்பை மதிப்பிடவே முடியாது. வாழும்போது நீ கூத்தாடினாலும் அதில் விசேஷம் இல்லை. சாகும் சமயம் எழுந்து ஒருமுறை நீ நடனமாடினால் நீ உண்மையிலேயே தலைசிறந்த நடனக் கலைஞன்தான். நீதான் நடனக் கலையை முழுமையாகக் கற்றுக்கொண்டவன்.

சாதகமான சூழ்நிலையுடன் ஒத்துப்போவது முற்றிலும் இயற்கையானதுதான். பாதகமான, எதிர்ப்பான சூழ்நிலையுடனும் சமரசம் செய்துகொள்ளல் புரட்சிகரமான அணுகுமுறையாகும். இமயமலை குகையில் அமர்ந்து மன அமைதி பெறுவது ஒரு சாதனையன்று. கடைத்தெருவில் உன் கடையில் உட்கார்ந்தபடி, தராசில் பொருட்களை எடைபோட்டுக் கொடுத்து, அப்போதும் உன்னால் சாந்தமாக இருக்க முடியுமென்றால் அந்த அமைதி இமயமலை ஞானியின் மன அமைதியைவிடப் பல மடங்கு உயர்தரமானது.

**து**லாதரர் என்ற வைசியர் அப்படிப்பட்டவராக இருந்தார் என்று புராணக் கதை ஒன்று கூறும். ஒரு ஞானி மலைப் பகுதியில் நிண்ட காலம் அசையாமல் நின்றபடி தியானம் செய்துவந்தார். ஆகவே அவரது நீண்ட கேசத்தில் சில பறவைகள் கூடுகட்டின! அவை இஷ்டப்பட்டபோது வரும். ஆனால் அவர் சிறிது தலையசைத்தாலும் பறந்து போய்விடும். அருகே கிளைகளில் உட்காரும் அவற்றை அவர் கூப்பிட்டாலும் வராது.

தியானத்தில் மரம் அல்லது தூண்போல் நிற்கும் தனது சாதனை பற்றி அந்த ஞானி கர்வமாக இருந்தார். அவர் காசியிலிருந்து வந்த யாத்திரீகர் ஒருவரிடம் தனது சாதனை பற்றி பெருமையாகப் பேசினார். வந்தவர் சொன்னார், "ஆனால் பறவைகள் உங்களிடம் நெருங்குவதில்லையே. காசியில் துலாதரர் என்றொரு வைசியர் உள்ளார். வெளிக்காட்டிக் கொள்ளா விட்டாலும் அவரும் ஒரு ஞானி என்றே மக்கள் பேசிக் கொள்கிறார்கள்."

"அவர் என்ன செய்கிறார்?" என்று ஜடாமுடி ஞானி கேட்டார்.

"அவரது கடையில் நாள் முழுதும் கூட்டம். அவர் கையில் எப்பொழுதும் எடைபோடக் கையில் தராசு பிடித்தபடி இருப்பார். அதனால் அவரது உண்மைப் பெயர் மறைந்துபோல் துலாதரர் என்ற பெயர் அமைந்துவிட்டது (துலா=தராசு, தரர்=தரிப்பவர்)."

போயும் போயும் கடையில் வியாபாரம் செய்யும் ஒரு வைசியரா ஞானியாகவும் விளங்க முடியும். தன்னைப்போல் பிராமணராக இல்லாமல், சாஸ்திரங்கள் கற்காமல், தவம் செய்யாமல் ஒருவர் எப்படி ஞானியாக முடியும் என்று ஜடாமுடி ஞானிக்கும் விளங்கவில்லை. உண்மையைக் கண்டறிய அவர் காசி சென்றார்.

அந்நகரத்தில் எங்கும் சந்துபொந்துகள்தாம். சந்துகள் கூட்டத்தால் நிரம்பிவழிந்தன. தெருமாடுகளும் சாமியார்களும் பெரும் எண்ணிக்கையில் வருவதும் போவதுமாக இருந்ததால் ஞானிக்கு எரிச்சல் ஏற்பட்டது. எங்கும் சிறுசிறு கடைகள். ஒவ்வொரு கடை முன்பும் கூட்டம். வாடிக்கையாளர்கள் போடும் சத்தம். தெருவெல்லாம் குப்பை. இந்த சூழ்நிலையில் ஒருவன் ஞானியாக எப்படி இருக்க முடியும் என்று திகைத்தார் ஜடாமுடி ஞானி. ஏற்கெனவே ஞானியாக இருப்பவரும் சில மணி நேரம் இந்த சூழ்நிலையில் இருந்தால் ஞானத்தையெல்லாம் இழந்துபோவார் என்றும் ஜடாமுடி ஞானிக்குத் தோன்றியது.

அவர் துலாதரரின் கடையருகே நின்று நடப்பதைக் கவனித்தார். கடையின் முன்புறம் வாடிக்கையாளர்கள் திரண்டிருந்தனர். ஒருவரை ஒருவர் முட்டியும் மோதியும் தள்ளிக் கொண்டிருந்தனர். அவ்வப்போது சில பறவைகள் துலாதரரின் தலைமீதும் தோள்மீதும் உட்காருவதும் பறப்பதுமாக இருப்பதைக் கவனித்தார். அவை அவரிடம் சிறிதும் அஞ்சவில்லை. அவரும் அவற்றிடம் கவனம் செலுத்தாமல், இடைவிடாமல் தராசால் சாமான்களை நிறுத்துப் பார்த்து வாடிக்கையாளர்களுக்குக் கொடுப்பதில் மும்முரமாக இருந்தார். ஜடாமுடி ஞானி அவரை அணுகி, "நீ பதற்றமோ, எரிச்சலோபடாமல் எப்படி நாள் முழுதும்

அமைதியாகப் பணிகளைக் கவனிக்க முடிகிறது? உனது ரகசியம் என்ன?” என்று விசாரித்தார்

துலாதரர் விளக்கினார்: “என்னிடம் ரகசியம் ஒன்றும் கிடையாது. நான் சாஸ்திரம் படித்தவனோ, ஞானியோ இல்லை. தராசில் தூக்கிப் பார்த்துப் பார்த்து நான் உள்ளத்தினுள் இருக்கும் தராசைப் பயன்படுத்துவதிலும் பயிற்சி பெற்றேன். கடையில் தராசு நிறுத்துப்பார்க்கிறேன். மனத்திலும் நான் நிறுத்துப்பார்க்கிறேன். கடைத் தராசில் இரண்டு தட்டுகளும் சமநிலைக்கு வரும்போது தராசு முள் சரியாக நடுப்பகுதிக்கு வந்து நிற்கும். அப்போது நான் என் மனத்தராசின் முள்ளையும் மையத்துக்குக் கொண்டு வருகிறேன். இரண்டு தட்டுகளையும் சமமாக்குகிறேன். அவ்வாறு சமமாக்குவதற்காக இன்பம்-துன்பம், வெற்றி-தோல்வி, உலகம்-மோட்சம், அமைதி-குழப்பம், கிடைத்தல்-இழத்தல், சந்திப்பு-பிரிவு எல்லா இரட்டைகளையும் மனத்தராசில் பார்த்து அவற்றை சமமாக உணரும் பக்குவம் பெற்றேன். நானோ வைசியன். எனக்கு ஆன்மிகம் தெரியாது. தியானம் முதலியவை நான் செய்ததில்லை. தாங்கள் பெரிய ஞானிபோல் தோன்றுகிறீர்கள். தங்கள் பாதங்களைப் பணிகிறேன்.”

ஞானியின் கண்கள் திறந்தன. காட்டில் தனிமையில் மன அமைதியுடன் விளங்குவது பெரிய விஷயமல்ல என அவர் உணர்ந்தார். சராசரி மனிதனுக்குக்கூட அங்கே அமைதி கிடைக்கும். இமயமலைப் பகுதிக்குச் சென்றால் அங்கு வீசும் குளிர்ந்த காற்று நம் உடலை வருடும்போது நம்மை அறியாமலே நம் உடலும் மனமும் அமைதியடையும். ஆனால் அப்படிக் கிடைக்கும் அமைதியில் உனது பங்கு ஒன்றுமில்லையே. நீ மலையிலிருந்து இறங்கினால் உன் அமைதியும் சேர்ந்தே இறங்கும். அடிவாரத்தைத் தொட்டதும் உன் அமைதியும் காணாமல் போய்விடும். அமைதிக்கு வாய்ப்பில்லாத இடத்தில் பெறும் அமைதியே உண்மையானது.

பக்தன் கூறுகிறான், ‘இறைவா! இவ்வுலகம் உன்னுடையது. உனது கைவண்ணத்தால் இது உருவானது. ஆகவே இங்கே உன்னைத் தேடுவேன். உலகம் உனது படைப்பு என்பதால்

இங்குதான் எங்காவது நீ ஒளிந்திருப்பாய். எங்காவது ஓரிடத்தில் நான் உன்னைப் பிடித்துவிடுவேன். அவசரம் இல்லை. உன்னைத் தேடுவதே எனக்கு இனிமையான அனுபவமாக அமைந்துள்ளது.

பக்தனின் மொழி வேறு. உலகை பயங்கரமான கடல் என்று சொல்லி அவன் உலகை அவமதிப்பதில்லை. ஏனெனில் கடலைப் படைத்தவரும் கடவுள்தானே. பக்தன் கடலைக் கடக்க விரும்புவதில்லை. அப்படிச் செய்தால் அவன் கடவுளையும் கடந்துபோக நேரிடும். அவன் கடவுள் என்னும் மாகடலில் ஆழ்ந்து மூழ்கிவிடவே ஆசைப்படுகிறான்.

மனத்தில் ஞானிகள் கூறிய உபதேசங்கள் நிறையத் திணிக்கப்பட்டிருந்தால் நீ பக்தனாக முடியாது. பக்தன் கூறுகின்ற, பின்பற்றுகின்ற பல விஷயங்களை ஞானிகள் ஆமோதிப்ப தில்லை.

ஞான வழி மூலமாகவும் கடவுளை அடையலாம். அப்படியானால் பக்தி வழியில் செல்லக்கூடாது. இரண்டு படகுகளில் ஒரேசமயம் பயணிக்க முயலாதே. அப்படிச் செய்தால் நீ தண்ணீரில் விழுந்துவிடுவாய். எங்கும் போய்ச்சேர மாட்டாய்.

ஞானி என்பதற்கு என் அர்த்தம் வேறு, நீ நினைக்கும் அர்த்தம் வேறு. நீ ஞானி என நினைப்பவன் சாஸ்திரங்களைக் கற்றிருப்பான். அறிஞனாக (பண்டிதனாக) இருப்பான். மதக் கோட்பாடுகளில் (சித்தாந்தங்களில்) பயிற்சி பெற்றிருப்பான். ஆன்மிகத் தகவல்களின் களஞ்சியமாகத் திகழ்வான்.

நான் ஞானி என நினைப்பவன் எல்லா அறிவையும் வீசி எறிந்தவனாக இருப்பான்! சாஸ்திரங்களை ஒதுக்கித் தள்ளியிருப்பான். அறிவைப் பெறுவதுடன் நில்லாமல் அறிவின் மையத்தை, அறிவின் தோற்றுவாயை அவன் தேடிச்செல்வான்.

ஞானி என்ற சொல்வதைவிட தியானி (தியானத்தில் லயிப்பவன்) என்று சொல்வது அதிகம் பொருந்தும். தியான வழி, பிரேம வழி என இரண்டுள்ளன. தியானி ஆத்மாவைத் தேடுகிறான். நான் யார் என ஆராய்கிறான். இந்த நிரந்தரக் கேள்விக்கு விடை காண்பதில் இறங்குகிறான். பிரேமி இதுபற்றி

கவலைப்படுவதில்லை. 'நான் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் என்னை உன் சரணங்களில் ஏற்றுக்கொள் பிரபுவே' என்று வேண்டுகிறான். சாக்கடையையும் கடல் ஏற்கிறதல்லவா? நீ ஏற்றால் நானும் பரிசுத்தனாகிவிடுவேன், சிற்றோடையையும் கடல் ஏற்பதுபோல் அற்பனான என்னையும் ஏற்றால் நானும் கடலின் பிரிக்க முடியாத அங்கமாகிவிடுவேன்' என்று பிரேமி அறிவிப்பான்.

பக்தன் கடவுளில் மூழ்க விரும்புகிறான். ஞானி தனக்குள் மூழ்க விரும்புகிறான். இருவரும் சென்றடைவது ஒரே இடத்தைத்தான்! ஏனெனில் அடிப்படையில் உன் உள் மையம் எதுவோ அதுவே கடவுளுமாகும். சொற்கள்தாம் வேறு. பயண திசை வெவ்வேறாயினும் சேருமிடம் ஒன்றே. எனவே நீ பக்தனாகவோ, ஞானியாகவோ ஒன்றையே தேர்ந்தெடு. ஞானி உலகுடனான உறவை விவாகரத்து (தலாக்) செய்கிறான். பக்தன் உலகைக் கடவுளின் அம்சமென்று அதனுடன் விவாக பந்தம்போல் ஒட்டிக் கொள்கிறான். எங்கும் எதிலும் அவன் கடவுளையே உணர்கிறான்.

ஆகவே அவன் முக்தி பற்றி பேசுவதில்லை. பக்தனின் அகராதியில் முக்தி என்னும் சொல் இல்லை. அவன் புதிய-புதிய முறையில் இறைவனுடன் கட்டிப் போடப்படுவதை விரும்புவான். 'பிரபு, என்னை மறந்து விடாதீர்கள். உமக்கு கோடி-கோடி பக்தர்கள் இருக்கிறார்கள். எனக்கோ உம்மைவிட்டால் எவருமில்லை' என்று கதறுவான்.

பக்தனுக்கு இந்த உலகம் பகையானதன்று. அவன் உலக வாழ்க்கைக்கு எதிரியல்லன். வாழ்க்கை என்பது கடவுள் தந்தது. அது அவருக்குச் சொந்தம். கடவுளுடையது எல்லாமே சுபமாகத்தான் இருக்கும்; அழகாகத்தான் இருக்கும். இங்கிருக்கும் ஒவ்வொன்றிலும் அவரது கையெழுத்து உள்ளது. பக்தனுக்கு உலகைக் குறித்து எந்தப் புகாருமில்லை.

பக்தன் மீண்டும்-மீண்டும் பிறக்கத் தயங்குவதில்லை. ஏனெனில் மறுபடியும் கடவுளைத் தேட வாய்ப்புக் கிடைக்கிறது. அவன் களைப்படைவதில்லை. ஞானி கையில் உள்ள

பிறவியிலேயே களைத்துப் போகிறான். 'அடுத்த பிறவி என்று தள்ள வேண்டாம். பிறவா வரம் தாரீர்' என்று கெஞ்சுகிறான். எப்பொழுது இப்பொழுதுள்ள பிறவியிலிருந்து விடுதலை கிடைக்குமென ஏங்குகிறான்.

நீ உன் மனத்தைத் தெளிவாக ஆக்கிக்கொள். உன் மனத்தைச் சரியாகப் புரிந்துகொள். உன்னிடம் இதயத்திற்கு முதலிடம் எனில் பக்திதான் உனக்குத் தகுந்த வழி. இதயம் உறங்கிவிட்டிருந்தால், அது விழிப்புப் பெறாவிடில், இதய ஒலி கேட்காமலிருந்தால் தியான வழிதான் உனக்குப் பொருந்தும். ஒன்று, பிரார்த்தனைகளால் நிரம்பு அல்லது சிந்தனைகள் இல்லாமல் மனத்தை வெற்றிடமாக்கு. பக்தியையும் ஞானத்தையும் கலந்தால் நீ இலக்கை அடைய முடியாமல் அலைவாய். ஒரு கையால் உண்டாவதை இன்னொரு கை அழித்துவிடும்.

### மூன்றாவது கேள்வி

**விருப்பத்தின் [ஆசையின்] பின்னணியில் இயற்கையான தூண்டுதல் உள்ளது. அந்த இயற்கையின் போக்குப்படியே வாழ்ந்தால் அது ஞான விழிப்பிற்கு உதவுமல்லவா?**

இயற்கை என்று சொல்லும்போது அது மூன்று விதமாக அமைந்துள்ளது. ஒருவகை இயற்கையில் விலங்குகள், பறவைகள் முதலியவை உள்ளடங்கியுள்ளன. இவை உயிரியக்கம் பெற்றிருப்பினும் மயக்கம்போன்ற நிலையில் வாழ்கின்றன. புத்தர், கிருஷ்ணன், அஷ்டாவக்ரர், மீராபாய், கபீர்தாசர் இன்னொரு வகையினர். இவர்கள் முழுவிழிப்புப் பெற்றிருந்தனர்.

பறவைகள் பாடுவது தூக்கத்தில் குரலெழுப்பது போன்றது. தாங்கள் பாடுகிறோம் என்றோ, தங்கள் குரல் எத்தகையது என்றோ அவை சிறிதும் உணர்ந்திருக்கவில்லை. பூக்களுக்குத் தாங்கள் அழகாக இருக்கிறோம் என்றோ, நறுமணம் பரப்புகிறோம் என்றோ தெரியாது. அவை மயக்கமடைந்தவைபோல் உள்ளதால் இந்நிலையை ஜட பிரக்ருதி என்கிறோம் (unconscious).

மீராபாய் முழுவிழிப்புடன் கோயில்களில் நடனமாடினார். புத்தர் .முழுவிழிப்புடன் உபதேசங்கள் வழங்கினார். இவர்கள் போன்றவர்கள் சேதன பிரகிருதி (முழு சுயநினைவுடன் ஈடுபட்டவர்கள்) வகையினர் ஆவர். (full awareness.)

நடுவில் உள்ள வகை சராசரி மனிதர்களின் வகையாகும். இது பாதி விழிப்பு-பாதி மயக்கம் போன்ற நிலை (semi-conscious). ஜட வகையில் என்றும் எந்த மாற்றமும் ஏற்படாது. எக்காலத்திலும் விலங்குகளும் பறவைகளும் ஒரேமாதிரி ஒலியெழுப்பும். பூக்கள் ஒரே மாதிரி மலரும். இந்த வகையைச் சேர்ந்தவை இயற்கை விதிகளுக்கு எதிராக என்றும் செயல்படுவதில்லை.

மனிதனை மயக்க மருந்து கொடுத்து ஸ்ட்ரெட்சரில் வைத்து மலர்த் தோட்டத்துக்குள் சுற்றிவருவதாக வைத்துக்கொள்வோம். சூரிய கிரணங்கள் அவன்மீது படும். குளிர்ந்த காற்று அவனை வருடும். பூக்களின் மணம் அவனைச் சூழும். ஆனால் அவனுக்கு அந்த சமயத்தில் எந்த உணர்வும் பாதிப்பும் இருக்காது. அவனுக்கு நினைவு திரும்பியதும் அதே தோட்டத்திற்கு அதேபோன்ற சூழ்நிலையில் அழைத்துச் சென்றால் அவன் ஆனந்தக் களிப்படைவான். மயக்கம், விழிப்பு இரண்டும் கலந்தவன் சராசரி மனிதன்.

விலங்குகள்-பறவைகள் குளோரோஃபார்ம் கொடுத்தது போன்ற நிலையில் உள்ளன. ஞானிகள் முழுவிழிப்புடன் உள்ளனர். மனிதன் நடுவில் தொங்குகிறான். பாதி உறக்கம்-பாதி விழிப்பு நிலையில் உள்ளான். இதனால்தான் அவன் எப்போதும் கவலையில் இளைத்திருப்பான். கவலை என்பதற்கு மன இறுக்கம் என்றும் பொருளுண்டு. ஒருபக்கம் ஜட வகை இழுக்க, இன்னொரு பக்கம் விழிப்பு வகை இழுக்க, மனிதன் தத்தளிக்கிறான்.

விலங்குகள்-பறவை வகை மனிதனைப் பின்னோக்கி இழுக்கிறது. அவை தங்கள் வகைக்குத் திரும்புமாறு சொல்கின்றன. "எங்களைப் போலவே கவலைகள் இல்லாத மயக்க நிலையின் சுகத்தை அனுபவி," என்று கூப்பிடுகின்றன.

மனிதன் அந்த நிலைக்குப் போகவே கள் குடிக்கிறான். வேறு உபாயம் அவனுக்குத் தெரியவில்லை. திரைப்படம் பார்ப்பதும் தற்காலிக மயக்கம் தருகிறது. இயற்கையின் வடிவங்களும் மனிதன் சிறிது நேரம் தன்னை மறக்க உதவுகின்றன. கடற்கரை, மலைகள், மரங்களின் பசுமை முதலியவையும் மனிதனைக் கவர்கின்றன. ஆனால் இந்த இடங்களிலேயே மனிதன் நீடிக்க முடியுமா? அவன் காட்டு வாழ்க்கைக்குத் திரும்ப முடியுமா? மதுவும்கூட சில மணி நேரம்தானே வேலை செய்யும்.

பிறகு இன்னொரு வகையினர் மனிதனை ஆகர்ஷிக்கின்றனர். மகாவீரர், கிருஷ்ணர், கபீர்தாசர், இயேசுநாதர் போன்றவர்கள் இதே மனித சமூகத்தில் தோன்றி உலவுகின்றனர். அவர்களது வாழ்க்கை சராசரி மனிதனின் வாழ்க்கையில் புதிய தாகத்தைத் தூண்டிவிடுகிறது. நாமும் அவர்களைப்போல் ஆகமாட்டோமா என மனிதன் ஏங்குகிறான். அவர்கள் அவனுக்கு அழைப்பு விடுவதுபோல் தோன்றுகிறது. இந்த அழைப்பு அவனை மயக்கத்தை நோக்கியல்லாமல் விழிப்பை நோக்கி அமைகிறது.

நடுவில் மாட்டிக்கொண்டுள்ள மனிதன் சங்கடப்படுகிறான். பூமியையும் தொடாத, ஆகாயத்தையும் எட்டாத திரிசங்கு போன்ற நிலையில் சராசரி மனிதன் உள்ளான். மேல்நோக்கிச் செல்லுதல் (ஞானியாகுதல்) கடினம். பின்னோக்கி விழுதல் எளிதானது. மறுபடி மிருகமாவது சுலபம். ஆதிகாலத்தில் நாம் ஏறத்தாழ விலங்குகளின் வாழ்க்கைதான் நடத்திவந்தோம். அந்தப் பழக்கங்களில், அந்த உணர்வுகளில் சில இப்போதும் நீடிக்கின்றன.

கோபம் பொங்கியெழும்போது நீ மிருகம்போல் நடந்துகொள்கிறாய். கோபித்துக் கொள்வது எளிது. ஆனால் எவ்வளவு நேரம் நீ கோபநிலையிலேயே இருப்பாய்? அதிலிருந்து வெளிவந்துதானே ஆக வேண்டும். காமத்திற்கும் இது பொருந்தும். காமமும் நீர்க்குமிழிபோல் தோன்றி உடைந்தபின் நீ பழைய நிலைக்கு வருகிறாய். முன்பைவிட பலகீனமாக உணர்கிறாய். உன்மீதே உனக்குச் சற்று வெறுப்பும் பரிதாபமும் உண்டாகிறது. கோபம் நீங்கிய பிறகும் இதேபோன்ற மனநிலை உண்டாகிறது. கூடவே குற்ற உணர்வும் மேலிடுகிறது.

ஏன் அப்படி? சிறிது நேரம் நீ மிருகநிலைக்குத் தாழ்ந்து விட்டது உன் உள்ளத்தை உறுத்துகிறது. 'நான் மனிதன்' என்னும் அகங்காரம் அடி வாங்குகிறது. 'நானா இப்படி நடந்து கொண்டேன்?' என்று உன்னையே நீ கேட்டுக் கொள்கிறாய். அல்லது தப்பித்துக்கொள்ள விளக்கம் தருகிறாய். "ஆமாம், நான் என் பையனை அடித்தேன். கோபத்தினால் அல்ல. அவன் கெட்டுப்போய்விடக் கூடாது என்ற அக்கறையால்தான் தண்டித்தேன்," என்பாய். உன் அப்பாவும்தானே உன்னை அடித்தார். அதனால் நீ நல்லவனாக மாறிவிட்டாயா? அவர் அடிக்காதிருந்தால் நீ கெட்டுப்போயிருப்பாயா?

தலைமுறை-தலைமுறைகளாகத் தந்தை மகனை அடிப்பது வழக்கமாக உள்ளது. இந்தக் கொடிய பழக்கம் இன்னமும் நீங்கவில்லை. அப்பாக்கள் எல்லோரும் அடித்தனர். மகன்கள் எல்லோரும் அடிவாங்கினர். அடியாத மாடு படியாது. அடிக்கிற கைதான் அணைக்கும் என்னும் போலியான சமாதானங்களும் தலைமுறை தோறும் நீடித்துவருகின்றன. இதெல்லாம் மனிதன் தன்னிடமுள்ள மிருகத் தன்மையை மறைப்பதற்காகக் கூறும் விளக்கங்கள். இவை உண்மையை மறைப்பதற்கான முகமூடிகள்.

கோபம் ஆறிய பின் மனிதன் தன் செயலை நினைத்து வருந்துகிறான். காமம் தணிந்த பிறகும் மனிதன் தரம் தாழ்ந்துவிட்டதுபோல் உணர்கிறான். கள்ளின் போதை நீங்கியபின் குடிகாரன் தன் மீதே பரிதாபப்படுகிறான். மனிதன் ஏன் இப்படி சுய இரக்கம் கொள்ள வேண்டும்? மனிதன் அடிப்படையில் வீழ்ச்சியடைய, மிருகநிலைக்குப் போக, ஜட வகையில் சேர விரும்பவில்லை என்பது தெளிவாகிறது. பின்னோக்கிச் சரிவது மனிதனுக்கு இயற்கையாக உள்ள அகங்காரத்தையும் கஷ்டத்துக் குள்ளாக்குகிறது.

இதனால் மனிதன் அவ்வப்போது தன்னை உயர்த்திக் கொள்ளும் முயற்சிகளில் ஈடுபடுகிறான். புத்தர், மகாவீரர் போன்றோரின் உதாரணங்களால் கவரப்பட்டு அவன் மேல்நோக்கி இழுக்கப்படுகிறான். அவர்களுக்கு சமமாக ஆகமுடியாதென்பதை அவன் அறிவான். ஆனால் அவன் எடுத்த முயற்சிகளின் காரணமாக அவன் முன்பைவிட நல்லவனாக, உயர்ந்தவனாக

வளர முடியும். வானத்தைத் தொடுமளவு முயன்றால் தென்னை மரத்தின் உச்சியைத் தொடும் அளவாவது உயரலாம் அல்லவா?

மனிதன் மட்டும்தான் நடுவில் தொங்குகிறான். அவன் பாதி-பாதியாக உள்ளான். எல்லா விலங்குகளும் பூரண வளர்ச்சி பெற்றுவிட்டன. அவை நூற்றாண்டுகளாக இருந்ததுபோலவே என்றும் நீடிக்கும். மனிதன் மட்டும்தான் இன்னும் முழுமனிதனாக நிறைவடையவில்லை புத்தர், அஷ்டாவக்ரர் போல் எண்ணிக்கையில் குறைந்தவர்களே மனிதராயிருந்தும் பூரணத்துவம் பெற்றனர்.

வைரம் அடிப்படையில் ஒருவகைக் கல். மண்ணில் நீண்ட காலம் புதைந்து கிடந்ததால் அசுத்தங்களால் மூடப்பட்ட அதன் உண்மையான மதிப்பு முதலில் தெரிவதில்லை. பொற்கொல்லர் அழுக்குகளை நீக்கி, ஒட்டிக்கொண்டிருக்கும் கல்-மண் பகுதிகளை வெட்டியும் தேய்த்தும் அகற்றி வைரமாக ஒளிவிடச் செய்கிறார்.

கோஹினூர் வைரம்* வெட்டியெடுக்கப்பட்டபோது அதன் எடை தற்போதைய எடையைவிட மூன்று மடங்கு அதிகமாக இருந்தது. அது வெட்டப்பட்டு, செதுக்கப்பட்டு, பட்டை தீட்டப்பட்டபோது அதன் எடை குறைந்ததுபோனது. முதலில் அருவருப்பான கல்லாகத் தோன்றிய அது இப்போது அது தனக்கென்ற தனிப்பாதை அழகுடன் ஜொலிக்கிறது. அதை வெட்டி எடுத்தவர்கள் இப்போது கோஹினூரைக் கண்டால் இரண்டும் ஒன்றே என நம்பமாட்டார்கள்.

நீயும் இப்படி மூல நிலையிலுள்ள கல்போல் பக்குவப் படாமல் கரடுமுரடாக இருக்கிறாய். தேர்ச்சிபெற்ற சத்குரு கிடைத்தால் நீ நன்கு உருவாக்கப்படுவாய். உன்னிடம் மறைந்துள்ள சிறப்புகள் வெளிப்படும். உனக்குள் மயக்கநிலையில் இருப்பது விழிப்புப் பெறும். ராமன் விழித்துக்கொண்டால் காமன் தூங்கப்போய் விடுவார்.

---

* தற்பொழுது எலிசபெத் ராணியின் கிரீடத்தில் பதிக்கப்பட்டுள்ள கோஹினூர் வைரம் இந்தியாவில் 14ஆம் நூற்றாண்டில் வெட்டியெடுக்கப்பட்டது. முதலில் 191 காரட் எடைகொண்ட அந்த வைரம் 1852இல் வெட்டிச் செதுக்கப்பட்டு 109 காரட் ஆக்கப்பட்டது.

காமம் என்பது விரிவான அர்த்தம் கொண்டது. 'இதைச் செய்வேன், அதை அடைவேன், இப்படி ஆவேன், அதை அனுபவிப்பேன், இதை நழுவவிட மாட்டேன்' இவை எல்லாம் காலையில் பூத்த மலர் போன்றவை. மாலையில் இவை வாடிவிடும்.

ஆனால் சில வாடாமலர்களும் உண்டு. அவற்றை அடைவதுதான் வாழ்க்கையின் லட்சியம். இவை விழிப்பு நிலையில்தான் கிடைக்கும். எனவே விழி. உன்னை எழுப்பு. எது நிகழ முடியுமோ அது நடைபெறட்டும்.

**நான்காம் கேள்வி**

> **ஓஷோ அவர்களே! பெண் துறவி ராபியா ஓர் உபதேசத்தில் கடவுள் உன்னை நோக்கித் திரும்பினால், நீ ஆன்மிகத்தில் பிரவேசித்து முன்னேற முடியும் என்றார். அப்படியானால் முயற்சி எடுப்பது மனிதனின் கையில் இல்லையா?**

மனிதனின் கையே மனிதனின் கையில் இல்லையே! மனிதனின் கை கடவுளின் கையில் அல்லவா உள்ளது. நீ அவரைப் பிரிந்து உயிர் வாழ முடியாது. வெளியே போன மூச்சு உள்ளே வந்தால்தான் நீ என்பவன் இருப்பாய். சூரிய கிரணங்கள் உடலில் படும்போது வெம்மையை உணர்ந்தால்தான் நீ என்பவன் இருப்பாய். நீ சாப்பிட்ட உணவு, சக்தியாக மாறினால்தான் நீ இருப்பதாக அர்த்தம்.

அடிப்படையில் 'நாம்' என்று யார் இருக்கிறோம்? ஆனால் நாம் நம்மை மையமாக வைத்துக்கொண்டு எவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறோம், ஆரவாரம் செய்கிறோம்! அலைகள் என்று தனியாக இல்லாவிடிலும் அந்த நீரோட்டம் எவ்வளவு ஆர்ப்பரிக்கிறது! கடலிலிருந்து அலையென்று தனியாக இல்லை. அலையைக் கடலிலிருந்து பிரிக்க முடியாது. பிரிக்க முடியாத ஒன்றை இருப்பதாகவும் கொள்ள முடியாது.

ஆன்மிகத்தில் இறங்குபவனுக்கு நாட்கள் செல்லச் செல்ல, 'நான் என்பவன் இல்லை. கடவுள்தான் இருக்கிறார்' என்னும்

எண்ணம் வலுப்பெறுகிறது. தான் சூன்யமாகி (பூஜ்ஜியமாகி) விட்ட உணர்வு மேலோங்குகிறது. இப்படி மாறும் சுபாவத்தை அஷ்டாவக்ரர் சொற்களால் விளக்க முடியாது (அநிர்வசனீய) என்கிறார்.

நீ உன்னை உன் கையிலேயே பிடித்துவைத்திருந்தாய் நீ அற்பமான மனிதனாக வாழ்ந்து முடிந்துவிடுவாய். கடவுளின் கையில் உன் கையைக் கொடுத்துவிட்டால் அற்புதங்கள் நிகழும். கடவுளின் விசாலமான கரங்களை நம்பாமல் நீ உன் மெலிந்த கையை நம்புகிறாய். நீ கடவுளின் கையில் கருவியாக அமைந்து சாதனைகள் புரிந்திருக்க முடியும். நீயோ கர்த்தா (நானே செய்பவன் என்னும்) மனப்பான்மையை வளர்த்துக் கொண்டாய். அதனால் நீ சுருங்கிப்போனாய்.

**எனது உடல் மண்ணாலானது**
**நீ விரும்பின் அது பொன்னாகும்**
**எனது வீணையின் அறுந்த கம்பி**
**நீ விரும்பின் ஒலியெழுப்பும்**
**எனது என்று உலகில் எதுவுமில்லை**
**எல்லாம் உனது நிழலே யாகும்**
**வெண்ணிலவும் விண்மீனும்**
**மரமும் செடியும் கொடியும் மலரும்**
**எல்லாம் உனது மாயைப் படைப்பு**
**சொல்லும் உனதே, பொருளும் உனதே**
**குரலின் மீதும் உரிமை உனதே**

கடவுளின் ஸ்பரிசத்தால் களிமண்ணும் கட்டித்தங்கமாகும். உறங்கிய வீணை விழித்தெழும். வெப்பமானவை எல்லாம் சந்தனமாகும் ஆனால் இந்த மாறுதல்கள் நிகழ உன்னை அவர் கையில் ஒப்படைத்துவிட வேண்டும்.

மனிதன் படும் கவலைக்கு அவனேதான் காரணம். வெளியார் நீ விரும்பாமல் உனக்குக் கவலையை உண்டாக்க முடியாது. நீ தேவையின்றி எல்லாச் சுமையையும் எல்லா பொறுப்பையும் உன் தலைமேல் தாங்கிச் செல்கிறாய். இதனால் நீ மெலிந்து களைத்துக் காணப்படுகிறாய். நடப்பதுகூட உனக்கு சிரமமாகிவிட்டது.

சுமையை இறக்கிவை. சுமைக்குச் சொந்தக்காரர் கடவுள். நீயும் அவருக்குச் சொந்தம்தான். அவரது சுமையை நீ தூக்கி வருவதாகக் கற்பனை செய். எஜமானரின் பெட்டி-படுக்கையைத் தூக்கிவரும் வேலைக்காரன்போல் சந்தோஷப் படு. இப்படி உன் பொறுப்பை, சுமையை எல்லாம் கடவுளுக்கு மாற்றிவிட்டால் அதுவே சந்நியாசம் (பொறுப்புத் துறத்தல்).

நீ சூனிய நிலைக்கு உயர்ந்துவிட்டால் நீ பேசுவதெல்லாம் வேதமாகிவிடும். ஆனால் உன்னிடம் அகங்காரம் குடியிருந்தால் நீ வேதத்தை உரக்க ஓதினாலும் அது கிளிப்பேச்சாக மட்டுமே அமையும். உன் மூலம் கடவுளைப் பேசவிடு. அவரது ஒலிபெருக்கியாக மட்டும் இரு. பிறகு உன் ஒவ்வொரு சொல்லும். உபநிடதமாகும். ஆனால் உனக்கு உபநிடத அறிவு உண்டு என்பதை வெளிப்படுத்த விரும்பினால் அது மதிப்பிழந்ததாக அமையும்.

மொத்தமாக ஒரு நிபந்தனைதான் உண்டு. ஒன்று, நீ இருக்கிறாய் அல்லது கடவுள் இருக்கிறார். நீ நடுவிலிருந்து விலகிச் செல். அவருக்கு வழிவிடு. உனது இருக்கையை காலிசெய். அவர் வந்து அமரட்டும் நீ என்னென்ன செய்தால் கடவுள் உன்னை நோக்கி வருவார் என்று திட்டம் தயாரிக்காதே.

செய்பவன் (கர்த்தா) நீ அல்லன். செய்பவர் கடவுள்தான். கர்த்தா மனம் உள்ளவன் 'நான் ஆன்மிகத்தில் பிரவேசித்தேன்' என்று தனது சாதனையாகக் கூறுவான். கர்த்தா மனப்பான் மையைக் கைவிட்டவன் 'கடவுள் என்னை ஆன்மிகத்தில் இழுத்துக் கொண்டார்' என்பான். மேலும், 'நான் முயன்றபோது எதுவும் பலிக்கவில்லை. நான் செய்ததெல்லாம் பிழையாக முடிந்தது, அனர்த்தமாக முடிந்தது' என்று ஒத்துக் கொள்வான். அவன் கடவுளை அடைந்தால் அதைத் தனது சாதனையாகக் கருதி, தனக்கே 'சபாஷ்' போட்டுக்கொள்ள மாட்டான். மாறாக அவன் மானசீகமாக அவருடைய திருவடிகளை வணங்கி, 'தகுதியற்ற என்னையும் உங்கள்பால் இழுத்துக் கொண்டீர்களே' என்று நன்றி தெரிவிப்பான்.

பக்தன் கடவுளைக் கூப்பிட மட்டும் முடியும். அவரை வழிபட மட்டும் முடியும். அவரது ஆதரவை எதிர்பார்த்திருக்க மட்டும் முடியும். தனது கையில் எதுவுமில்லை என்பதை அவன் அறிவான். ஆனால் வாழ்க்கையின் பணிகளை **உன்** கடமையென்றும், நீதான் அவற்றை நிறைவேற்ற வேண்டுமென்றும், நான் செய்யாவிட்டால் வேலை தேங்கிவிடும் என்று நினைத்தால் அந்தக் கண்ணோட்டமே உன் கவலைகளின் ஆணிவேராகும். நீ காய்ச்சல் வந்தவன்போல் எப்போதும் படபடப்பாக இருப்பாய். ஆகவே அஷ்டாவக்ரர் 'உன் கண்ணோட்டத்தை மாற்றிக்கொள். நீதான் கர்த்தா என்னும் அகங்காரத்தைக் கைவிடு. நீ சாட்சி மட்டுமே என்ற உணர்வுடன் பணிகளைச் செய்க' என்று அறிவுறுத்துகிறார்.

யூதர்களிடையே நிலவும் நம்பிக்கையின்படி, மனிதன் தேடி கடவுள் கிடைப்பது அரிது. கடவுள் மனிதனைத் தேடி வரும்போதுதான் சந்திப்பு நிகழ்கிறது. இது முக்கியமான விஷயம். மனிதன் தேடி என்ன பலன் கிடைக்கும்? ஒரு துளித் தண்ணீர் கடலைத் தேடி சென்றால் வழியில் எங்காவது அது காணாமல் போகும். தூசி அதை அமுக்கிவிடும்.

கற்பனையில் நீர்த்துளி கடலை அடையக்கூடும். ஆனால் மனிதன் கடவுளைத் தேடி எத்திசையில் செல்வான்? எங்கே தேடுவான்? சந்திர மண்டலத்திலா? நட்சத்திரங்களின் உலகிலா? தண்ணீர்த் துளியும் கடலும் அடிப்படையில் ஒரே (வேதியல்) தன்மை உடையதால் அவை கலக்க வாய்ப்புண்டு. ஆனால் மனிதனிடம் கடவுளைச் சென்றடைய என்ன தகுதி உள்ளது.

நம்முடைய கால்கள் சிறியவை. வலு குறைந்தவை. பிறகு எப்படி நாம் கடவுளைத் தேட முடியும்? நாமோ கோயிலே நம்மைத் தேடிவந்தால்தான் நாம் உள்ளே நுழைவதாக உள்ளோம். நீ உளமாரக் கூப்பிடு. கோயில் உன்னைத் தேடி வரும்! நீ தொடர்ந்து கூப்பிடு. உன் குரலில் தாகம் பிரதிபலிக்கட்டும். நீ அழு, பாடு, ஆடு. 'உன்னைக் காண்பதில் எனக்குத் தணியா ஆர்வம்' என்னும் கருத்து வெளிப்படச் செய். உனது தாகமும் அதை வெளிப்படுத்தும் விதமும் நூறு டிகிரியைத் தொடும்போது அதே சமயம் கோபுர தரிசனம் கிடைக்கும்.

அந்த நூறு டிகிரியைத் தொடும் நேரம் எப்போது வரும் என்று எவரும் சொல்ல முடியாது. ஒவ்வொரு மனிதனின் நூறு டிகிரியும் வெவ்வேறாக இருக்கும். ஆகவே நீ கடவுளைக் கூப்பிட்டுக்கொண்டே இரு. அதில் களைப்படையாதே. ஒரு கட்டத்தில் நீயே இல்லாமல் போய் உன் குரல் மட்டுமே கேட்கட்டும். கேள்வி மிஞ்சட்டும். கேள்வி கேட்பவன் மறையட்டும். தாகம் மட்டுமே மிஞ்சட்டும். தாகமெடுப்பவன் என்று தனியாய் ஒருவன் இல்லாது போகட்டும். தாகத்திலேயே மூழ்கி அதிலேயே கலக்கட்டும். அப்போது ஒரு நாள் கதவுகள் திறக்கும். கதவு இருக்குமிடம் தொலைவில் இல்லை. அது உனக்குள்தான் இருக்கிறது. ஆனால் உயிரைப் பணயம் வைத்து அழைப்பவர்களுக்குத்தான் அது திறக்கிறது.

மனிதன் மிகவும் தந்திரசாலி, மோசடிப் பேர்வழி. "நீ ஏதாவது முயற்சி எடுத்துச் செய்தால் கடவுளைப் பெறலாம்," என்று தெரிவித்தால், அவன் தன்னை கர்த்தாவாக நினைத்துக் கொள்கிறான். அவனுக்கு அகங்காரம் உண்டாகிறது. இதனால் அவனது ஆன்மிகப் பயணம் நின்றுபோகிறது.

மாறாக, மனிதனிடம் "நீ கடவுளை அடைய ஒன்றும் செய்யவேண்டாமப்பா," என்று கூறினால், அதற்கு அவன் தப்பர்த்தம் எடுத்துக்கொள்கிறான். சோம்பேறியாகி விடுகிறான். கூப்பிடுவதையும் நிறுத்துவிடுகிறான். ஏன் என்று கேட்டால், "கடவுளே பார்த்துக்கொள்வார் என்று சொன்னீர்களே" என்று மடக்குவான். போர்வையைப் போர்த்திக்கொண்டு தூங்கப் போய்விடுவான்.

இந்த இரண்டிற்கும் இடையில்தான் சரியான வழி உள்ளது. நீ செய்தும் ஆக வேண்டும், செயல்புரிபவனாகவும் (கர்த்தாவாகவும்) இருக்கக்கூடாது! நீ கடவுளைக் கூப்பிட வேண்டும். அடிப்படையில் உன்குரலில் அவர்தான் கூப்பிடுகிறார் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். நீ தலைதாழ்த்த வேண்டும் அவர்தான் உன் தலையைத் தாழ்த்துகிறார் என்றும் கருத வேண்டும். நீ பக்தியால் அழுதால் அந்தக் கண்ணீரில் கடவுள்தாம் வெளிப்பட்டார் என்று நினைக்க வேண்டும்.

இல்லாவிடில் நம்மைப் போன்ற கல்மனதுக்காரர்களின் கண்களில் நீர் துளிர்க்குமா?

செய்ய வேண்டும். அதேசமயம் கர்த்தாவாக இருக்கக் கூடாது. நடவடிக்கை எடுக்க வேண்டும். ஆனால் உண்மையில் நடவடிக்கை எடுப்பவர் கடவுள் என்பதை ஞாபகம் வைக்க வேண்டும். அவரை நோக்கிச் செல்ல வேண்டும்; அவரைத் தேட வேண்டும். அவர் உன்னைத் தேடுகிறார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அவர் தேடியபடி உன் அருகில் வருகிறார். உன் தேடுதலிலும் அவர்தாம் உன்னை நோக்கித் தன் கரங்கள் விரித்து வரவேற்கிறார். உனது பிரார்த்தனையையும் அவர்தாம் உன் மூலமாகச் செய்விக்கிறார்.

ஆன்மிகப் பாதையின் இரு பக்கங்களிலும் பாதாளம் போன்ற பள்ளங்கள். நீ கர்த்தா மனப்பான்மை கொண்டு, "எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொள்வேன்" என்று திமிராகப் பேசினால், நீ அகங்காரம் என்ற பாதாளப் பள்ளத்தில் விழுவாய்.

"இல்லை, நான் ஒன்றும் செய்யமாட்டேன். கை-கால் அசைக்க மாட்டேன். எல்லாவற்றையும் கடவுள் பார்த்துக் கொள்ளட்டும். அவர் என்னைத் தேடி வருகிறார் என்றால் நான் ஏன் கஷ்டப்பட்டு அவரை நோக்கிச் செல்ல வேண்டும்?" என்று அலட்சியமாகப் பேசினால், நீ சோம்பல் என்னும் பாதாளப் பள்ளத்தில் விழுவாய்.

மாறாக, நீ புல்லாங்குழலாகி அமைதியாக இரு. அவர் அதை உதட்டில் ஒற்றி வாசிப்பார். அந்தச் சந்திப்பில் ஆத்மாவில் புரட்சி நிகழும்.

நீ கருவியாகு. அவர் கர்த்தா ஆகட்டும். அந்தச் சந்திப்பில் ஆத்மாவில் புரட்சி நிகழும்.

**ஹரி ஓம் தத்ஸத்!**

